சுனன் போர்க்கோலம் பூண்டு, தேர் ஏறி, நாண் ஒலிசெய்தல் 8; அக்கினி காண்டவ வனத்தில் பற்றி, அதை வளைத்துக் கொள்ளுதல் 10; புகையும் அனலும் மண்டி மேலே எழுந்து ஓங்கிய தோற்றம் 12; வனத்தில் வாழும் பல பிராணிகள் எரியால் அழிதல் 18; காண்டவம் தீப்பற்றியது உணர்ந்த இந்திரன் அங்கு வந்து, கண்ணனும் அருச்சுனனும் எரிக்கு உதவியாய் நிற்றலைப் பார்த்தல் 25; தக்ககனைக் குறித்துக் கவன்ற இந்திரன், தீயை அவிக்க மேகங்களை ஏவி, தானும் சேனையுடன் போருக்குப் புறப்படுதல் 28; மேகங்கள் கிளர்ந்து எழுந்து மழை பொழியவும், அனல் அவியாது மிகுதல் 30; மழையைத் தடுக்க, அருச்சுனன் அம்பினால் சரக்கூடம் அமைத்தல் 36; தக்ககன் மனைவியை அம்பு எய்து அருச்சுனன் வீழ்த்தலும், அவனது மகவை இந்திரன் காத்தலும் 39; தப்பிய தக்ககன் புதல்வனான அச்சுவசேனன் கன்னனை அடுந்து அம்பாக இருத்தல் 42; தக்ககனைக் காணாமையால் இந்திரன் வெகுண்டு பொர, ஏனைய தேவர்களும் உடன் வந்து பொருதல் 43; துவாதசாதித்தர் முதலியோர் அருச்சுனனுக்குத் தோற்று ஓடுதல் 46; அருச்சுனன் அம்புகளால் மேகங்கள் சிதறி வெளிறி மீளுதல் 50; இந்திரனோடு அருச்சுனன் கடுமையாகப் போர் செய்கையில் ஆகாயவாணி எழுதல் 51; ஆகாயவாணி கேட்ட இந்திரன் போரைத் துறந்து துறக்கம் போதல் 53; தேவர், முனிவர், முதலியோர் அருச்சுனனைப் புகழ்தல் 54; அக்கினியிலிருந்து தப்பிப் பிழைத்தவர்கள் 55; அக்கினிதேவன் கண்ணனையும் அருச்சுனனையும் வாழ்த்தித் துறக்கம் செல்ல, அவ் இருவரும் இந்திரப்பிரத்தம் சேர்தல் 57-58.

## 10. இராயசூயச் சருக்கம் ... 126 - 150

கடவுள் வாழ்த்து 1; பாண்டவர் முன்னிலையில் மயன் வந்து வணங்கி, குருபதிக்கு மண்டபம் ஒன்று அமைத்துத் தருவதாகக் கூறுதல் 2; மயன் குறித்தபடி மணிகள் கொணருமாறு தருமன் ஏவ, விரைவில் ஏவலர் கொண்டுவருதல் 5; மயன் மண்டபம் கட்டி முடித்து, தருமன் தம்பியர்க்குக் கதையும் சங்கும் கொடுத்தல் 6; மயன் ஆக்கிய மண்டபத்தில் தருமன் குடி புகுதல் 8; நாரதன் அவைக்கு எழுந்தருள, தருமன் எதிர்சென்று வணங்கி உபசரித்தல் 9; 'இராயசூயம் செய்யுமாறு பாண்டு மொழிந்தான்' என்று தருமனிடம் நாரதன் தெரிவித்தல் 12; நாரதன் அகன்றபின், கண்ணன், 'வேள்வி தொடங்கும்முன் சராசந்தனைக்கொல்ல வேண்டும்' எனல் 14; தருமன் ஒருப்பட, கண்ணன் வீமனுடனும் அருச்சுனனுடனும் வேதியர் வடிவில் சென்று, சராசந்தனின் அவையைச் சார்தல் 16; 'நீவிர் அந்தணர் அல்லீர்; வேறு யார்?' என்ற சராசந்தனுக்குத் தாம் வந்த காரணத்தைக் கண்ணன் எடுத்துரைத்தல் 19; வெகுளிபொங்கச் சராசந்தன் வீமனைப்போருக்கு வலிய அழைத்து, தன் மகன் சகதேவனுக்கு மணி முடி சூட்டிவிட்டு, போருக்கு எழுதல் 20, சராசந்தனும் வீமனும் மற்போர் புரிந்து தளர்தல் 23; தெளிவு பெற்றுஎழுந்த வீமன் சராசந்தனது உடலை இருகூருகப்பிளந்து எறிதல் 25; பிளவுபட்ட சராசந்தனின் உடற்கூறுகள் ஒன்றுபடவே, அவன் கிளர்ந்து பொர, வீமன் மீண்டும் அவனைப் பிளந்து, கண்ணன் குறிப்பித்தபடி பிளவுகளை அடி முடி மாறுபட இடுதல் 27; இறந்த சராசந்தனைக் குறித்து அருச்சுனன் கண்ணனை வினவுதல் 29; கண்ணன் கூறிய சராசந்தன் வரலாறு 31; கண்ணன் முதலிய மூவரும் இந்திரப்பிரத்தத்திற்கு மீளுதல் 37; திக்குவிசயம் செய்யச் செல்வது குறித்து

மொழிய, அவனும் சினத்துடன் துரியோதனனுக்குப் பரிந்து அறவுரை கூறுதல் 34; விதுரன் மனம் வருந்தத் துரியோதனன் நகையாடுதலும், அது பொழுது விதுரன் எழுந்து தன் இருப்பிடம் சேறலும் 40; துரியோதனன் ஆணைப்படி அழகியதோர் மண்டபம் சமைத்தல் 42; மண்டபம் அமைத்தமையைத் தந்தைக்குத் துரியோதனன் சொல்லி, பாண்டவரை வரவழைக்கத் தூது அனுப்ப வேண்டுதல் 46; திருதராட்டிரன் மகிழ்ந்து, விதுரனைத் தூது அனுப்புதல் 48; பரிவாரங்கள் சூழ, விதுரன் பாண்டவர் வாழ் நகரை அடைதல் 51; இந்திரப்பிரத்த நகரின் எழில் 52; பாண்டவர் விதுரனை எதிர்கொண்டு உபசரித்தல் 56; விதுரன் தான் வந்த காரியத்தை உணர்த்துதல் 58; விதுரன் கொடுத்த திருதராட்டிரன் திருமுகச் செய்தி உணர்ந்து, தருமன் பேசுதல் 62; 'நின் கருத்து உரை' என வேண்டிய தருமனுக்கு விதுரன் கூறிய மாற்றம் 68; வீமன் தன் கருத்தை உரைத்தல் 69; விசயன் முதலிய தம்பியரும் அத்தினபுரிக்குச் செல்லுதலை மறுத்துரைக்க, தருமன், 'தந்தை சொல் மறுப்பது தகாது' எனல் 71; தருமன் ஆணைப்படி அத்தினபுரி செல்ல, படைத்தலைவர் முதலியோர் திரளுதல் 74; ஐவரும் தேர்மீது ஏற, நாற்படைகளும் சூழ்தல் 76; தம்பியர் சூழத் தருமன் புறப்படுதல் 87; அரச மகளிர்கள் பிடியின் மேலும், திரௌபதி சிவிகையிலும் செல்லுதல் 88; வழியிலுள்ள ஒரு சோலையில் இளைப்பாறி, மேலே செல்லுதல் 90; நால் வகை நிலக் காட்சிகள் 92; அத்தினபுரியின் புறத்தே சேனைகளுடன் பாண்டவர் தங்கியிருத்தல் 105; பாண்டவர் வரவு அறிந்து, துரியோதனாதியர் மகிழ்தல் 111; சூரியன் மறைவும் சந்திரன் தோற்றமும் 113; சேனையில் நிகழ்ந்த சில செயல்கள் 118; சூரியன் தோன்ற, படைகளைப் பாசறையில் நிறுத்தி, பாண்டவர் அத்தினபுரிக்குச் செல்லுதல் 122; திருதராட்டிரனைப் பாண்டவர் வணங்குதலும், அவன் மைந்தரைத் தழுவி, நயவுரை கூறுதலும் 124; வணங்கிய திரௌபதியைக் காந்தாரியிடம் செல்லப் பணித்து, மைந்தருடன் அளவளாவுதல் 127; காந்தாரியை வணங்கி, அவளுடைய வாழ்த்தை மைந்தர் பெறுதல் 133; திரௌபதியைக் காந்தாரியிடத்து இருத்தி, பாண்டவர் சென்று வீடுமன் முதலியோரை வணங்குதல் 135; பாண்டவர் விதுரன் மாளிகையில் புகுந்து தங்க, சூரியன் மறைதல் 139; மாலைப் பொழுதில் விதுரன் மாளிகையின் தோற்றம் 141; சந்திரனது தோற்றக் காட்சி 143; திரௌபதியும் விதுரன் மாளிகை வந்து சேர்தல் 146; விதுரன் மாளிகையில் இரவைக் கழித்த பின், காலைக்கடன் கழித்து, தம்பியருடன் தருமன் இனிது இருந்து, முனிவரர் முதலியோர்க்குத் தானம் முதலியன வழங்குதல் 147; புதிய மண்டபத்தில் யாவரும் ஈண்டி இருக்கும்போது, பாண்டவரை அழைத்து வருமாறு பிராதிகாமி என்பவனைத் துரியோதனன் அனுப்புதல் 152; பிராதிகாமி பாண்டவர்க்குச் செய்தி தெரிவித்தல் 153; திரௌபதியைத் தந்தை இல்லிற்கு அனுப்பி, துணைவருடன் தருமன் சபையை அடைதல் 155; தருமன் வீடுமன் முதலியோரை முறைப்படி வணங்கி, ஆசனத்து அமர்ந்து, அம் மண்டபத்தின் அழகை வியந்து கூறுதல் 156; துரியோதனன் தருமனைச் சூதாடத் தூண்டுதல் 159; தருமன் சூதாடுதலை வெறுத்து உரைத்தல் 161; சகுனி நயவுரைகளால் தருமனைச் சூதாட அழைத்தல் 163; சகுனியின் உரைக்கு மாறு உரையாது உதிட்டிரன் இருக்க, விசயனும் வருந்துமாறு கன்னன் தருமனை நோக்கி உரை பகர்தல் 167; வெகுண்டு எழுந்த விசயனை அடக்கி, தருமன் சூதாடுதற்கு ஒருப்படுதல் 169; துரியோதனன் சகுனிக்காக

ஒட்டம் வைப்பதாகக் கூறி, தருமனையும் ஈடுபடுத்துதல் 171; தருமனும் சகுனியும் சூதாடுதல் 172; யாவற்றையும் தருமன் சூதில் இழந்துவிட, மன்னன் குறிப்பின் வண்ணம் பாண்டவர்களையே பணயமாக வைக்கச் சகுனி தூண்டுதல் 179; தருமன் தங்கள் ஐவரையும் சூதில் ஒட்டித் தோல்வியுற, சகுனி திரௌபதியைப் பணயமாக வைக்கத் தூண்டுதல் 181; விதுரன் மனம் வருந்தித் திருதராட்டிரனை நோக்கிச் சில கூறுதல் 182; தருமன் திரௌபதியையும் சூதில் இழந்து, சிறிதும் கலங்காதிருத்தல் 187; தருமனது தோல்வி கண்டு, அவையோர் வருந்தி மொழிதல் 189; துரியோதனன் வீடுமனை நோக்கிக் கூறிய தகாத உரை 193; வீடுமன் அறிவுரையைத் துரியோதனன் செவிக் கொள்ளாது, வெகுளி மிக, விதுரனை நோக்கிக் கூறிய மொழிகள் 195; விதுரன் துரியோதனனது செய்கையை இடித்து மொழிதல் 199; 'நீ கேட்ட சொல் என்?' என்ற துரியோதனனுக்கு விதுரன் விரித்து உரைத்தல் 202; விதுரனைத் துரியோதனன் நகையாடி அவமதித்து, அருகில் நின்ற பிராதிகாமியிடம் திரௌபதியை அழைத்துவரப் பணித்தல் 208; பிராதிகாமி திரௌபதி இருக்குமிடம் செல்லாமலே மீண்டு வந்து, அவள் கூற்றுகச் சிலவற்றைப் படைத்து மொழிதல் 209; துரியோதனன் மனம் பொருமல், திரௌபதியை அழைத்துவரத் துச்சாதனனுக்குக் கட்டளையிடுதல் 211; திரௌபதி இருந்த இடத்தை அணுகி, துச்சாதனன் அவளை அழைத்து, 'என் பின்னே போதுக!' என அவளது கையைப் பற்றுதல் 212; திரௌபதி காந்தாரியின் அருகில் செல்ல, அவள், 'துச்சாதனன் பின் அஞ்சாது போ' என்று கூறுதல் 216; திரௌபதி கூந்தலைச் செண்டால் பற்றி இழுத்து அவை நோக்கிச் செல்லுதல் 218; திரௌபதியின் நிலை கண்டோர் பலரும் வருந்தி மொழிதல் 220; திரௌபதி அவையில் புக, திருதராட்டிரன் முதலியோர் வாளா இருத்தலும், ஏனைய மன்னர் துயருறுதலும் 225; தம்பியரின் கிளர்ந்தெழுந்த சினத்தைத் தருமன் தணிவித்தல் 228; துயருடன் அலறும் திரௌபதியை நோக்கி, துச்சாதனன் சுடுமொழி சொல்லுதல் 230; திரௌபதியின் முறையீடும், வீடுமன் மறுமொழியும் 232; திரௌபதி அவையோரை நோக்கி, நீதி வேண்டி முறையிட, அவையோர் ஓவியம் போல அசைவற்றிருத்தல் 234; விகருணன் சபையோரை நோக்கி உரைத்தல் 236; கன்னன் விகருணனைக் கடிந்து உரைத்து, அவையோரை நோக்கிக் கூறியவை 239; ஐவரையும் திரௌபதியையும் துகில் உரியுமாறு தம்பிக்குத் துரியோதனன் பணித்தல் 243; சினம் கொண்ட தம்பியரைத் தருமன் அடக்குதல் 244; ஐவரும் தமது உத்தரீயங்களைத் தாமே கழற்றிக் கொடுக்க, திரௌபதியின் துகில் உரியத் துச்சாதனன் நெருங்குதல் 245; 'கோவிந்தா!' என்று உளம் உருகித் திரௌபதி கதற, கண்ணன் அருள் செய்தல் 246; துச்சாதனன் அவளது துகிலை உரிந்து கை ஓய்தல் 248; வீடுமன் முதலியோர் திரௌபதியைப் புகழ்தலும் வானோர் மலர்மழை பொழிதலும் 249; வீமன் சினம் மிக்கு, நூற்றுவரைப் போருக்கு அழைத்தல் 250; திரௌபதியைத் தன் மடிமீது இருத்துமாறு துச்சாதனனுக்குத் துரியோதனன் பணித்தல் 252; திரௌபதி துரியோதனனுக்கு இட்ட சாபமும், மொழிந்த சபதமும் 253; வீமன் வஞ்சினம் மொழிதல் 255; அருச்சுனனும் நகுல சகதேவர்களும் உரைத்த சபதம் 257; அங்கு நிகழ்ந்த உற்பாதங்கள் 258; திருதராட்டிரன் திரௌபதியைப் பணிந்து, நிகழ்ந்த பிழை பொறுக்க வேண்டுதல் 259; பாண்டவரின் கோபத்தை அகற்றி, சூதில் இழந்த

பொருள்களை மீண்டும் கொடுத்து, ஊருக்குச் செல்ல விடை கொடுத்தல் 261; பாண்டவர் வாழ்வு பெற்றது கண்டு, சகுனி மனம் பொறுது கூறுதல் 264; துரியோதனன் ஆணைப்படி, துச்சாதனன் தருமனுடன் வழக்கு உரைத்தல் 267; துச்சாதனன் வார்த்தை கேட்டு, திருத ராட்டிரன், வீடுமன், விதுரன் முதலியோருடன் உசாவுதல் 270; துரோணன் உண்மை நிலையை எடுத்துரைத்தல் 271; துரோணன் கருத்தையே ஏனையோரும் கூற, திருதராட்டிரன் தருமனுக்கு இட்ட ஆணை 272; அரசன் மாற்றத்தைத் துரோணன் தருமனுக்கு விளங்க உரைத்தலும், வீடுமன் முதலியோர் அதற்கு உடன்பட்டு மொழிதலும் 274; திரௌபதி, 'உரிமை பெற மீண்டும் சூதாட வேண்டும்' என, தருமன் மன்னவர் காண மறு சூது ஆடுதல் 277; தருமன் தன் புண்ணியத்தை ஒட்டமாக வைத்துக் கவறு ஆடி, தன் உரிமையை மீண்டும் பெறுதல் 279; தருமன் இளைஞர் முதலியோருடன் குரவரை வணங்கி, காட்டிற்குச் செல்லுதல் 281; பாண்டவர் பிரிவினுல் நகர மாந்தர் வருந்திப் புலம்புதல் 282; தருமன் கானகம் சென்ற போதும், கலக்கம் இன்றி உவகையுடன் இருத்தல் 283.



தருமன் துணைவருடன் முனிவர் சூழ, காமிய வனம் புகுதல் 1; பாண்டவர் வருகையால் காமிய வனம் கவினுறுதல் 2; துருபதன் முதலியோரும் கண்ணனும் பாண்டவரை வந்து காணுதல் 4; வந்தோர் அன்பினுல் பல பல உரை பகர்தல் 7; கண்ணன் வேந்தர்களின் சினத்தைத் தணித்தல் 13; 'அன்னை, புதல்வர், முதலியோரை உறவினர் இருப்பிடங்கட்கு அனுப்பிவிட்டு, நீவிர் மட்டும் கானின் உறைதல் நன்று' எனக் கண்ணன் தருமனுக்கு உரைத்தல் 16; கண்ணன் உரைப்படியே யாவரையும் அனுப்பி, தருமன் கானில் வாழ்தல் 18; கண்ணன் முதலிய வேந்தரும் தத்தம் இருப்பிடத்திற்கு மீளுதல் 19; வியாத முனிவன் வருகையும், பாண்டவரது முறையீடும் 20; வியாதன் பாண்டவரைத் தேற்றி, 'பகை முடிக்கப் பார்த்தன் பாசுபதம் பெறல் வேண்டும்' என்றல் 22; முனிவன் மொழிப்படி பாசுபதம் பெறுமாறு தருமன் கூற, அருச்சுனன் விடை பெற்று ஏகுதல் 26; 'அஞ்சலிர்' என்று கூறி, முனியும் மீண்டு போதல் 28; அருச்சுனன் தவ வேடம் கொண்டு, வடதிசை முடிவைக் காணுதல் 29; இமகிரியில் முனிவரரை வணங்கி, அருச்சுனன் மகிழ்தல் 31; கைலை மலையை எய்தி, அருச்சுனன் தவம் புரிதல் 33; அருச்சுனன் தவநிலை தெரிய, இந்திரன் குருவுடன் ஆலோசித்தல் 46; அருச்சுனன் தவவுறுதியை அறிய இந்திரன் அனுப்பிய தேவமாதரின் வருகை 50; மாதருக்கு உதவியாக மன்மதனும் உடன் வருதல் 52; அழல் நடுவண் தவம் செய்யும் அருச்சுனனைத் தேவமாதர் காணுதல் 56; தவத்தைக் கலைக்கத் தேவமாதர் புரிந்த பல இங்கிதச் செயல்கள் 60; அருச்சுனன் மேல் ஐங்கணை எய்தும் அவன் சலியாமையால், மன்மதன் இளைத்து மீளுதல் 64; தெய்வ மகளிர் முதலியோர் பயன் இன்றித் திரும்பிச் செல்லுதல் 67; இந்திரன் முனிவனுய் வந்து அருச்சுனன் மனநிலை அறிய உரையாடுதல் 68; அருச்சுனனது மனவுறுதி கண்டு மகிழ்ந்து, இந்திரன் தன் உண்மை வடிவுடன் அருள் புரிதல் 72; சேடியரால் அருச்சுனன் தவநிலை அறிந்த உமை, சிவபெருமானுக்கு அதனை அருளிச் செய்தல் 73; அருச்சுனன்

காட்டி உணர்த்துதல் 6; 'இவன் வந்தது தக்க செயல் புரிதற்கே' என்று தேவர்கள் கூறுதல் 8; 'விசயன் தனக்குச் செய்த சிறப்புத் தகாது' என்ன, இந்திரன் அவனது பெருமை கூறி, ஒரு வரம் வேண்டு தல் 9; 'யான் செய்ய வேண்டுவது யாது?' என்ற விசயனுக்கு, இந்திரன் நிவாதகவசரை வென்று அழிக்குமாறு கூறுதல் 13; விசயன் ஒருப்பட, இந்திரன் தேர் முதலியன அளித்து, அவனுக்கு விடை கொடுத்தல் 17; விசயன் போர்க்கோலம் பூண்டு, மாதலி தேரில் செல்லும்போது, அவ் அசுரர் இயல்பைச் சாரதியிடம் கேட்டு அறிதல் 20; தேவ மகளிரின் நகைப்பும், வானவரின் வாழ்த்தும் 23; விசயன் உவகையுடன் சென்று கடலை அடுத்தபோது, அந்த அவுணரின் இயல்பை வினவ, மாதலி விளங்க உரைத்தல் 29; சித்திரசேனனை நிவாதகவசரிடம் தூது போக்கி, மண்ணின்மீது தேரை நடத்துதல் 40; அருச்சுனன் நாண் ஒலி முதலியன கேட்டு, 'இந்திரன் பொர வந்தான்!' என அவுணர் சினத்தல் 42; தூதன் உரைத்த செய்தி கேட்டு, அவுணர் இகழ்ந்து கூறி, சினங்கொள்ளுதல் 44; அசுரர் ஆயுதங்களுடன் திரண்டு வந்து, அருச்சுனன் தேரை வளைத்தல் 51; அவுணர் சுடு சரம் தூவ, அருச்சுனன் தானும் கணைகள் எய்து, வஞ்சினம் கூறுதல் 56; அசுரர் அருச்சுனனை இகழ, அவன் கணை பல தூவி வெகுள, அவர்கள் அஞ்சுதல் 60; அஞ்சிய அசுரரை நோக்கி, அஞ்சாதவர் கூறிய வீர உரை 66; அசுரருடன் கடும்போர் செய்து, விசயன் பிரமாத்திரம் தொடுத்தல் 67; பிரமாத்திரத்தினுல் அசுரர் பட்ட பாடு 72; ஒரு கோடி அசுரர் பட, இரு கோடி அசுரர் திரண்டு பொருதலும், பல படை ஏவி அருச்சுனன் அவர்களைத் தேய்த்தலும் 74; விசயன் கை சலித்து நின்ற போது, அசரீரி அந்த அசுரர்களை வெல்லும் உபாயத்தைக் கூறுதல் 91; விசயன் தன் தேரைத் திருப்பி, கணப்பொழுதில் பாசுபதக் கணை விட, அசுரர் பொடியாதல் 94; அசுரர் வீர சுவர்க்கம் அடைய, அருச்சுனன் வெற்றிப் பெருமிதத் துடன் நிற்றல் 98; அசுரமாதர் அரற்றும் ஓசையால், அருச்சுனன் சினம் தீர்ந்து, தேரை வானுலகிற்கு மீண்டு செலுத்துமாறு மாதலிக்குக் கூறுதல் 102; தேரில் மீளும் விசயன், அந்தரத்தில் ஓர் ஊரைக் கண்டு, மாதலியை வினவ, அவன் அங்கு வாழும் காலகேயரைப் பற்றி உரைத்தல் 105; 'இவரையும் முடித்த பின்பே அமராவதி செல்வேன்; தேரை அங்குச் செலுத்து' என விசயன் கூற, அவனும் அவ்வாறே செய்தல் 111; தேர் ஒலியும் நாண் ஒலியும் கேட்டு, காலகேயர் திடுக்கிட்டு, சினமுற்றுப் போருக்கு எழுதல் 113; அருச்சுனனை 'இவன் யார்?' என அசுரர் ஐயுறுதலும், அவன் அவ் அசுரரின் அழகு கண்டு நொந்து கூறுதலும் 118; காலகேயர் விசயன்மீது பகழி தூவி இகழ்ந்து பேச, அவன், 'உங்கள் உயிர்க்கு இறுதி வந்தது' என்று மொழிதல் 121; அருச்சுனன் மொழியால் அழன்று காலகேயர் படைகள் விட, அவனும் பல அம்புகளால் அவற்றை விலக்குதல் 124; அவுணர் மாயத்தால் மறைந்து பொர, அருச்சுனன் அம்பு மழை பொழிதல் 127; அருச்சுனன் வில் திறம் கண்டு வியந்து, அவுணர் மேலும் கடுகிப் பொருதல் 130; அருச்சுனன் பாசுபதக்கணையால், காலகேயர்களை அழித்தல் 135; அவுணர் பட்ட களத்தின் தோற்றம் 140; மாதலி விசயனது அடி தொழுதலும், தேவர் முதலியோர் பகை நீங்கியமை கண்டு மகிழ்தலும் 142; காலகேயரின் இரணிய புரமும் மறைதல் 144; அருச்சுனன் இளைப்பாறி, தேர்மேல் வானுலகு செல்ல, சித்திரசேனன் முன்னே சென்று, இந்திரனுக்கு

## 19. நாடு கரந்துறை சருக்கம் ... 277 - 284

'நாடு கரந்து உறைதற்கு உரிய இடம் எது?' எனத் துணைவரைத் தருமன் வினவ, விசயன், 'விராடன் நகரமே அதற்கு ஏற்றது' எனல் 1; தருமன் பாங்கில் உறைந்த அரசர்களை அவரவர் பதிகளுக்கு அனுப்பி, முனிவரை வணங்கி, துணைவர்களுடன் விராடன் நாட்டை அடைதல் 4; மயான பூமியில் காளி கோயிலின் முன்னே உள்ள வன்னி மரத்தில், பாண்டவர் தம் படைக் கலங்களை மறைத்து வைத்தல் 8; தருமன் கங்கன் என்னும் பெயருடைத் துறவியாய் விராடனை அடுக்க, மன்னன் அவனை மனமுவந்து ஏற்றுக்கொள்ளுதல் 10; வீமன் பலாயனன் என்னும் பெயருடன் விராடனது தலைமை மடையனாய் வந்து பொருந்துதல் 13; விசயன் பிருகந்நளை என்ற பேடியாய் விராடன் மகள் உத்தரைக்குப் பாங்கி ஆதல் 16; சில நாளின் பின் நகுலன் தாமக்கிரந்தி என்னும் பெயருடன் விராடனை அடுத்து, அவனது குதிரைகளுக்கு அதிபதி ஆதல் 20; சகாதேவன் தந்திரிபாலன் என்னும் பெயரோடு இடையனாய் வந்து, விராடன் ஆநிரை காப்போர்க்கு அதிபதி ஆதல் 25; திரௌபதி விரதசாரிணி என்னும் பெயருடன் விராடன் தேவியை அடுத்து, அவளுக்கு வண்ண மகள் ஆதல் 28; பாண்டவர் மறைந்து உறைந்த நாளில், விராடனது நாடு எல்லா வகையாலும் சிறந்து ஓங்குதல் 36-37.

## 20. மற்போர்ச் சருக்கம் ... 285 - 286

வாசவன் என்ற மற்போர் வீரன் பல மல்லர் சூழ விராடன் அவை சார்ந்து, தன் பெருமை கூறுதல் 1; விராடன் வாசவனுக்கு உரிய சிறப்புச் செய்து, தனது மல்லர்களை நோக்க, அவர்கள் தனித்தனி அவனுடன் மற்போர் செய்தல் 4; எல்லோரையும் வென்ற வாசவனுக்கு விராடன் எல்லாச் சிறப்புக்களும் செய்தல் 6; மறுநாள் தருமன் விராடனிடம், 'வாசவனை வெல்லுதற்குத் தக்கான் நின் மடையர் தலைவன் பலாயனன்' என்ன, அரசன் அவனை அழைத்து வரச் செய்தல் 8; வீமன் வாசவனுடன் மற்போர் பொருது, வெற்றி பெறுதல் 9; வென்ற பலாயனன் என்னும் வீமனுக்கு விராடன் பல வரிசைகள் அளித்துப் பாராட்டுதல் 13-14.

## 21. கீசகன் வதைச் சருக்கம் ... 287 - 303

கீசகன் விராடன் தேவியான தன் தமக்கை சுதேட்டிணையைக் காண வருதல் 1; சுதேட்டிணையை வணங்கி மீள்கையில், கீசகன் விரதசாரிணியைக் கண்டு, காமுகனாகி அவளிடம் பலபல கூறுதல் 2; அவள் கீசகனைப் பழித்தும் பயமுறுத்தியும் அறிவுரை கூறுதல் 5; கீசகன் அவள் காலில் விழுந்து வேண்ட, அவள் சுதேட்டிணையிடம் சேர்ந்து நிகழ்ந்தன கூறுதல் 7; சுதேட்டிணை திரௌபதியைத் தேற்றி, தன் தம்பியைத் தன் மனைக்கு வாராவகை கடிந்து கூறுதல் 10; கீசகனது விரகதாபமும், அது குறித்துச் சுதேட்டிணைக்குச் சேடியர் கூறுதலும் 11; கீசகன் நிலைக்கு வருந்தி, மலர்மாலையை அவனுக்கு அளித்து மீளுமாறு விரதசாரணியைச் சுதேட்டிணை வேண்ட, அவள் அங்ஙனமே கொண்டு செல்லுதல் 13; உதய காலத்தில் விரதசாரிணி கீசகன் மனைபுகுதலும், அவன் தகாத மொழி சொல்ல, அவள்

சூரியனை வணங்கித் தன் துன்பம் போக்க வேண்டுதலும் 19; கீசகன் காம நோய் வெதுப்ப, அமளியில் துன்புற்றிருந்த நிலை 23; விரத சாரிணியைக் கண்டு கீசகன், 'வருக!' என அழைத்து, அவளைப் பற்றுதற்குத் தொடர, அவள் ஓடி வந்து அரசவையில் வீழ்தல் 25; அங்கும் அவன் வந்து அவள் கையைத் தீண்ட நினைக்கவே, சூரியன் ஏவலால் ஒரு கிங்கரன் அவனைப் புறத்தே எடுத்து வீசுதல் 30; விராடன் கீசகன் செயலைக் கண்டியாது வாளா இருத்தல் 32; பலாய னன் ஒரு மராமரத்தைப் பிடுங்குதற்கு வெகுண்டு நோக்க, கங்கன் குறிப்பினால் அதனைத் தடுத்தல் 33; விரதசாரிணி விராடனிடம் முறையிடுதல் 35; புழுதி படிந்த கோலத்துடன் கண்ணீர் பாய, சுதேட்டிணையை அடுத்து, விரதசாரிணி வருந்துதல் 38; கங்கன் விராடனை இடித்துரைத்து, அறிவுரை பகர்தல் 39; விராடன் கருத்து அழிந்து தன் மனை புக, பலாயனன் மடைப்பள்ளியை அடைதல் 42; சூரியன் மறைதலும், பாண்டவர் முதலியோரின் மனக்கலக்கமும் 44; விரதசாரிணி பலாயனனை அடுத்துப் பகை முடிக்க வேண்ட, அவன், 'இன்று இரவே அவனை முடிப்பேன்!' எனல் 46; விரத சாரிணி தருமன் தடுத்ததற்குக் காரணம் கூறி, இரண்டொரு நாள் கழிந்தபின் கீசகனை இரவில் கொல்லலாம் எனல் 49; மற்றைநாள் விரதசாரிணியைக் கீசகன் கண்டு, அவளது கருத்தை உசாவுதல் 52; விரதசாரிணி தான் ஒருப்பட்டமை கூறி, சந்தித்தற்கு உரிய குறியிட மும் தெரிவித்தல் 55; பின் வீமனை அவள் அடுத்து, கீசகனுக்குத் தான் கூறியவற்றைத் தெரிவித்தல் 59; கீசகன் குறியிடம் செல்ல, வீமனும் பெண்கோலம்கொண்டு திரௌபதியுடன் அங்கு அவன் வருகையை நோக்கி இருத்தல் 60; திரௌபதியை அப்பால் மறைத்து வைத்து, வீமன் மண்டபத்தில் இருக்க, கீசகனும் அடுத்து, காதல் மொழி பல புகல்தல் 63; வீமன் நகைத்து, கீசகனை இரு கையால் பற்றி வீழ்த்தி, அவனுடன் பொருதல் 69; கீசகன் உடலைச் சுருக்கி, அவன் ஆவியை வீமன் போக்குதல் 79; வீமன் திரௌபதியை அழைத்து, கீசகன் உடலை அவள் பாதத்தில் வைத்து, அவள் நன்கு காண, மராமரத்தால் நெருப்பு எழச் செய்தல் 82; கீசகன் தம்பி-மார் துயிலுணர்ந்து, தீபங்களுடன் சோலையை நேடுதல் 85; கீசகன் உடலைக் கண்ட தம்பிமார், அவன் மரணத்திற்குக் காரணமான வண்ண மகளையும் அவனோடு வைத்து எரிக்க எண்ணுதல் 91; உபகீசகர் திரௌபதியைப் பற்ற, அவள் அரற்றுதல் 93; வீமன் விரைந்து வந்து, மரங்களைப் பிடுங்கிப் புடைத்து, உபகீசகர்கள் ஓட ஓடக் கொன்று அழித்தல் 95; உபகீசகர்களின் மரணத்தால் அரசன் மாளிகையோர் வருந்த, வீமனும் திரௌபதியும் தத்தம் இடத்தைச் சேர்தல் 98; சூரியன் உதிக்கவே, கீசகர் மரணம் எங்கும் பரவுதல் 101; தன் மைத்துனன்மார் மரணத்தால் விராடன் மெலிவுறுதல் 102; 'கரந்து உறையும் காலம் கழிந்ததுஆதலின், விரைவில் வெளிப் படுவோம்!' என்ற எண்ணத்தோடு பாண்டவர் இருத்தல் 103.



கடவுள் வாழ்த்து 1; துரியோதனன் பாண்டவரை நாட ஒற்றர்களை ஏவ, அவர்கள் எங்கும் தேடிக் காணுமையைத் தெரிவித்தல் 2; வீடுமன் பாண்டவர் வசிக்கும் நாட்டின் நிலை எடுத்துரைத்தல் 5; ஒற்றுள்களில் ஒருவன் விராடனது நாட்டின் வாழ்வும், கீசகன் ஒரு

வண்ண மகள் காரணத்தால் மாண்ட செய்தியும் கூறுதல் 6; கன்னன் உரைத்த உபாயப்படி, துரியோதனன் ஏவலால், திரிகர்த்தன் விராடனது ஆநிரைகளைக் கவர்தல் 7; நிரை காவலர் பகைவர் நிரை கொண்டமையை விராடனுக்கு உணர்த்த, அவன் சேனைகளுடன் திரிகர்த்தனை நெருங்கித் தடுத்தல் 9; விசயனை ஒழிந்தோர் நால்வரும் போர் நலம் காண உடன் செல்ல, போரில் திரிகர்த்தன் சேனை பின்னிடுதல் 12; திரிகர்த்தன் போரில் அம்பு எய்து, விராடன் சேனை பின்னிடுமாறு செய்து, அவனைத் தன் தேரில் பிணித்தல் 13; கங்கனது தூண்டுதலால் பலாயனன் பொருது, விராடனை மீட்டு, திரிகர்த்தனையும் அவ் விராடனது தேரில் கட்ட, பகைவர் சேனை அழிந்து ஓடுதல் 16; விராடன் பலாயனனுக்கு நன்றி கூறுதல் 19; தாமக்கிரந்தி பகைவர் குதிரைகளைக் கவர, தந்திரபாலன் ஆநிரைகளை மீட்டல் 20; சூரியன் மறைந்த காட்சி 21; கங்கன் சொற்படி, திரிகர்த்தனைத் தளை நீக்கி, அவனைத் தேரில் செல்ல விடுத்து, வேறு பகைப் படைகளின் வரவு கருதி, விராடன் அங்கு இருத்தல் 22; திரிகர்த்தன் படைகள் சிதறி ஓடியமையைத் துரியோதனன் கேட்டு, வட திசையில் பெருஞ் சேனையுடன் வந்து ஆநிரை கவர்தல் 24; ஆயர் விராடன் மகன் உத்தரனிடம் ஓடி வந்து, செய்தி தெரிவித்தல் 26; 'நகர் காமின்!' என்று மகளிரைச் சுதேட்டிணை சொல்ல, உத்தரன் தாயை வணங்கி, 'சாரதி இருப்பின் யான் சென்று பகைவரை வெல்வேன்' எனல் 28; வண்ண மகள், 'பேடி தேர் விடுவாள்' என்ன, சுதேட்டிணை ஏவலால் பேடி தேர் விட, உத்தரன் போருக்குச் செல்லுதல் 31; சேனையைக் கண்டு உத்தரன் நடுங்கிச் சோர, பேடியாம் பிருகந்நளை அவனுக்குத் தேறுதல் கூறுதல் 35; உத்தரன் தேருது, 'மீள வேண்டும்!' என்ன, அவள், 'யான் பொருது பகை வெல்வேன்' எனல் 38; உத்தரன் தேரில் நின்று குதித்து ஓட, அவனைப் பிடித்து வந்து தேரில் கட்டி, முன் ஒளித்த வில் அம்புகளையும் கொண்டு, விசயன் விரைவில் களம் புகுதல் 40; மரத்திலிருந்து கொண்டு வந்த படைகள் விசயனுடையவை என்பது தெரிந்து, உத்தரன் அவனைப் பற்றி உசாவுதல் 42; 'விசயன் விரைவில் இங்குத் தோன்றுவான்' என்று கூறி, உத்தரனது கட்டை அவிழ்த்து, அவனைத் தேர் செலுத்தத் தூண்டுதல் 43; உத்தரன் தேரில் வரும் பேடியைத் துரோணன் முதலியோர் ஐயுறுதல் 45; 'நீ அஞ்சாது தேர் விடு; நான் அம்பு பல எய்வேன்' என்று உத்தரனுக்குக் கூறி, விசயன் அம்பு எய்து பலரையும் அழித்தல் 47; விதுரன், 'நம் நிலத்தில் இவர் வரும்படி போர் செய வேண்டும்' என, வீடுமன் முதலியோரும் அதுவே தக்கது எனல் 49; துரியோதனன் நெஞ்சம் கொதித்து நிற்க, கன்னன் ஏனையோரை இகழ்ந்து கூறுதல் 52; கோவலரை நிரை கொண்டு போகச் சொல்லி, தம்பியரோடு தானும் பேடியை எதிர்க்கத் துரியோதனன் மீளுதல் 53; விசயன் அரசர்களைத் தடுத்து, ஆநிரைகளை மீட்டல் 54; துரியோதனன் பக்கத்து இடையர் அடங்க, விராடன் பக்கத்து இடையர் மகிழ்ச்சியினால் ஆர்த்தல் 55; நாலு நாழிகையில் சாபம் நீங்க, விசயன் தன் முன்னை உருப் பெற்று, தனது தேரினையும் கொடியினையும் பெறுதல் 57; வேற்று உரு ஒழித்து நின்று, விசயன் நாண் ஒலி செய்யப் பகைவர் நடுங்குதல் 59; பல வகை ஒலிகளைக் கேட்ட உத்தரன் தேர் விடு தொழில் மறந்து மயங்கி விழ, விசயன் அவனைத் தேற்றித் தேர் விடச் செய்தல் 62; துரியோதனனை நெருங்கி, விசயன் பொருதல் 65; தப்பியோடத் தேர் ஒன்றில் பாய்ந்த துரியோதனனை, விசயன்

இகழ்ந்து மொழிதல் 68; அப்போது, துரோணன் முதலியோரும் அருச்சுனனை வந்து வளைத்தல் 74; கன்னன் போருக்கு அழைக்க, அவனுடன் விசயன் பொருதல் 75; கன்னன் மூன்று முறை விசயனுக்குத் தோற்றோடுதலும், அசுவத்தாமன் அவனை இகழ்ந்து பேசுதலும் 79; துரோண விடுமர்களின்மேல் அருச்சுனன் அம்பு செலுத்துதல் 84; துரோணன் தன்னை நோக்கித் தேரைச் செலுத்த, விசயன் அவனைத் தொழுது, சில கூறுதல் 85; 'உன்னோடு போர் புரிதல் தகாது' என்ற விசயனை நோக்கி, துரோணன், 'நான் செஞ்சோற்றுக் கடன் கழிக்கப் பொருதல் வேண்டும்' எனல் 87; துரோணன் விசயனுடன் பொருது தோற்றோடுதல் 90; அடுத்து, அசுவத்தாமன் பொருது தோற்றல் 94; கிருபன் முதலியோர் தோற்றோட, சூரியனும் உச்சிப் பொழுதை அடைதல் 96; வீடுமன் விதுரன் முதலிய பலரும் நான்கு திசையிலும் வளைய, விசயன் நாற்புறமும் அம்பு செலுத்தித் தாக்குதல் 97; விசயன் மோகனக் கணையால் துரியோதனன் படையோரை மயங்கி விழச் செய்து, அவர்தம் ஆடைகளைப் பறித்தல் 100; மயங்கியோர் உணர்வு தோன்றியதும், தத்தம் ஊர்தியில் ஏறி, ஊருக்கு மீளுதல் 102; விசயன் துரியோதனனை மகுட பங்கம் செய்தல் 103; 'உரிய காலத்திற்கு முன் வெளிப்பட்ட இவரை மீண்டும் காடு புகச் சொல்' என்று துரியோதனன் வீடுமனுக்குக் கூற, அவன், 'நேற்றே குறித்த காலம் முடிந்தது' எனல் 104; துரியோதனனும் தன் நகர்க்கு மீளுதல் 106; விசயன் மீண்டு வந்து வன்னிமரப் பொந்தில் முன்போல் ஆயுதங்களை வைத்து, பேடி வடிவம் கொண்டு, உத்தரனுடன் நகர்க்கு மீளுதல் 107; விசயன் தனது வரலாறு கூறி, உத்தரன் வெற்றியோடு மீண்டு வருதலைத் தெரிவிக்க விராடனுக்குத் தூதரை அனுப்புதல் 109; தன் நகர்க்கு மீண்ட விராடன், உத்தரன் போர்க்குச் சென்ற செய்தி கேட்டு, மயங்கி வீழ்தல் 111; கங்கன் தேற்ற, மன்னன் தேறி இருந்த காலையில், உத்தரன் வெற்றிச் செய்தியைத் தூதுவர் வந்து அறிவித்தல் 113; விராடன் மகிழ்ந்து, உத்தரனை எதிர்கொள்ளுமாறு சேனுதிபரை ஏவுதல் 115; 'மகன் வரும் அளவும் சூதாடுவோம்' என்று கங்கனுடன் விராடன் ஆடும்போது, அவன் தன் மகன் வெற்றி பேச, கங்கன், 'அது பேடியின் வெற்றியே' எனல் 118; விராடன் சினம் மூண்டு, கங்கனது நெற்றியில் இரத்தம் பொசியுமாறு கவற்றால் எறிதல் 124; நெற்றியில் பொசியும் இரத்தத்தை விரதசாரிணி கண்டு, தன் ஆடையால் மாற்றுதல் 125; விராடன் தன் செயலுக்கு இரங்கி வருந்தல் 127; அந்திப் பொழுதில், மன்னர் சூழ உத்தரன் நகரை அடைந்து, உலாவருதல் 128; விராடன் மகனை எதிர் கொண்டு தழுவுதல் 130; மனை புகுந்த உத்தரன் கங்கனை வணங்கி, நெற்றி வடுவைக் கண்டு, தந்தையால் நிகழ்ந்தமை அறிந்து, பொறுக்குமாறு இருவரும் வணங்குதல் 131; விராடனும் உத்தரனும் சுதேட்டிணை கோயில் புக, அவள் மகனைக் கண்டு பெரு மகிழ்வு எய்துதல் 134; பேடி தான் கவர்ந்த தூசுகளை உத்தரையின் பாவைக்கு அளித்து, சுதேட்டிணையின் பின் நிற்றல் 135; தந்தையுடன் உத்தரன் தனித்து இருந்து, போர் நிகழ்ச்சிகளைக் கூறுதல் 136; மாற்று வடிவு கொண்ட கங்கன் முதலியோர், பாண்டவரும் திரௌபதியும் எனல் 137; பாண்டவர் தம் முன்னை உருக்கொள்ள, பகலவனும் உதயம் செய்தல் 140.

வீமன் மீண்டும் போரையே வற்புறுத்தி மொழிதல் 17; கண்ணன் வீமனது கடுங் கோபத்தைத் தணித்தல் 19; விசயனும் போரையே வற்புறுத்தி, 'தூது பயன் படாது' என மொழிதல் 20; நகுலனும், 'தூது பயன் இன்று' என்று உரைத்தல் 24; கண்ணன் வேண்ட, சகாதேவன் தன் கருத்தை உரைத்தல் 28; 'அந்தத்தில் முடியும் வகை யார்க்குத் தெரியும்?' என்ற சகாதேவனைக் கண்ணன் தனியிடம் கொண்டு சென்று, 'பாரதப் போர் நிகழாதிருக்க உபாயம் என்?' எனல் 31; சகாதேவன் உரைத்த உபாயம் 32; 'நீ உரைத்தபடி யாவும் முடிப்பினும், என்னைக் கட்ட இயலுமோ?' என்ற கண்ணனுக்கு,'உன் வடிவு காட்டின் இயலும்!' என்றான் சகாதேவன் 34; கண்ணன் பல வடிவு கொள்ள, சகாதேவன் கருத்தினால் மூலவடிவைப் பிணித்தல் 35; 'பாதப் பிணிப்பை விடுக' என்று கண்ணன் கூற, சகாதேவன் போரில் ஐவரையும் காக்க வரம் வேண்டுதல் 36; மீண்டு பாண்டவரை அடைந்த சகாதேவனும் கண்ணனும், 'சந்து செய்தல் இனிது!' என்ன, பாஞ்சாலி அழுது, கண்ணனிடம் முறையிடுதல் 39; சாத்தகியும் சமாதானத்தை வெறுத்து மொழிதல் 44; 'நானே உன் குழல் முடித்து வைப்பேன்' என, கண்ணன் திரௌபதியைத் தேற்றுதல் 46; கண்ணனைத் 'தூது ஏகு' எனத் தருமன் வேண்ட, அவனும் தேர்மேல் ஏறி அத்தினபுரியை அடைதல் 50; அத்தினபுரியின் இயற்கை வளங்கள் 54; அகழி, மதில், முதலியவற்றின் தோற்றம் 57; பல வகை வீதிகளும் சேனைகளின் பெருக்கமும் 61; அந்தணர் முதலியோர் இருப்பிடங்களும், பல வகை ஓசைகளும் 64; நகரின் தென்பாலுள்ள சோலையில் கண்ணன் அமர்ந்திருக்க, அவன் ஐவர்க்குத் தூதாக வந்துள்ளமையைத் துரியோதனனுக்குத் தூதுவர் உரைத்தல் 67; துரியோதனன் நகரை அலங்கரிக்கப் பணித்து, கண்ணனை எதிர்கொள்ளச் செல்ல, சகுனி தடுத்து நிறுத்துதல் 69; கண்ணனுக்கு இடம் முதலியன அமைத்து, துரியோதனன் சபையில் வீற்றிருத்தல் 71; வீடுமன் முதலியோர் கண்ணனை எதிர்கொள்ள, அவன் நகருள் வந்து, விதுரன் மனையில் புகுதல் 72; வேந்தர்களுக்கு விடைகொடுத்து அனுப்பியபின், விதுரன் மாளிகையின் நடுவில் உள்ள ஒரு மண்டபத்தில், கண்ணன் அரியாசனத்தில் வீற்றிருத்தல் 74; விதுரன் கண்ணனைக் கண்டு களித்து, மனம் உருகி, அவனுக்கு முகமன் கூறுதல் 75; கண்ணனும் ஏனையோரும் விதுரன் மனையில் விருந்து உண்டு மகிழ்ந்திருத்தல் 79; சூரியன் மறைவும், அந்தி மாலையின் தோற்றமும் 83; விதுரன் கண்ணனைப் போற்றி, அவன் தனி வந்த காரணம் வினவ, கண்ணன் தான் ஐவர்க்குத் தூதாக வந்தமையைத் தெரிவித்தல் 88; 'துரியோதனன் முறைமையால் அரசு கொடான்' என்ற விதுரனுக்கு, 'கொடாவிடின் பாண்டவர் பொருது பெறுவர்' எனக் கண்ணன் உரைத்தல் 91; உலக இயல்பை விதுரனுக்கு உரைத்து, அவனுக்கு விடை கொடுத்து, கண்ணன் கண்வளர்தல் 93; இரவின் இயற்கையும், இரவியின் தோற்றமும் 95; துரியோதனன் அரசு வீற்றிருத்தல் 98; 'கண்ணன் அவைக்கு வரும்போது யாரும் எதிர் கொள்ளக்கூடாது' எனத் துரியோதனன் கட்டளையிடுதல் 102; வீடுமன் முதலியோர் எதிர் கொள்ள, கண்ணன் அவை புகுந்து, ஆசனத்து அமர்தல் 103; 'நேற்றே இந் நகர் வந்தும், என் இல்லிற்கு வாராது, விதுரன் இல்லில் தங்கியது ஏன்?' எனத் துரியோதனன் வினவுதல் 105; கண்ணன் மறுமொழி கூறுதல் 106; 'தூதாக வந்த காரியத்தை விளம்புக!' என்ற துரியோதனனிடம், கண்ணன், 'ஐவர்க்கும் உரிய நாட்டைக்

கொடுப்பாய்' எனல் 108; 'ஈ இருக்கும் இடமும் கொடேன்!' எனத் துரியோதனன் மறுத்தல் 111; 'ஐந்து ஊரேனும் வழங்குக!' என்று கண்ணன் மீண்டும் வேண்ட, துரியோதனன் அதனை மறுக்கவே, அவனுக்கு அறிவுரை கூறுதல் 113; துரியோதனன் சினத்துடன் மறுத்து மொழிய, கண்ணன் போர் வேண்டுதல் 117; 'போருக்குக் கை அறை' என்பது கேட்டு, துரியோதனன் சினந்து, கண்ணனை இகழ்தல் 119; கண்ணன் அவையை நீங்கி, விதுரன் மனைக்கு மீளுதல் 123; கண்ணனுக்கு விருந்து செய்தது பற்றி, விதுரனைத் துரியோதனன் பழித்து உரைத்தல் 124; விதுரன் சினந்து மறு மொழி கூறி, தன் வில்லை முறித்து, சபையை விட்டு நீங்குதல் 127; விதுரன் வில் முறித்தது குறித்து வேந்தர்கள் வருந்த, வீடுமன் துரியோதனனைக் கடிந்து உரைத்தல் 130; 'விதுரன் அன்றி வில் வீரர் பிறர் இல்லையோ?' எனத் துரியோதனன் மொழிதல் 132; கன்னன் தனது ஆண்மை எடுத்துரைத்தல் 134; 'விசயனுக்கு நிகர் நீயோ?' என்று வீடுமன் கன்னனை இகழ, அவனும் வீடுமனைப் பழித்தல் 136; துரியோதனன் யாவர்க்கும் விடை கொடுத்தனுப்பு தல் 138; வில் முறித்தமை குறித்து விதுரனைக் கண்ணன் வினவ, அவன் மறுமொழி கூறுதல் 139; விதுரன் ஆண்மையைக் கண்ணன் புகழ்ந்து, 'துரியோதனன் மொழிந்தனவற்றைப் பொறுத்தி' என்று கூறி, பின் குந்தியின் மாளிகை செல்லுதல் 143; குந்தி கண்ணனை எதிர்கொண்டு, அவன் அத்தினபுரி வந்த காரியம் வினவுதல் 146; கண்ணன் தான் தூது வந்ததும், போர் நேர்ந்துள்ளமையும் குந்திக்குக் கூறி, கன்னன் பிறப்பு வரலாற்றையும் அவளுக்கு உரைத்தல் 148; கன்னனை ஐவருடன் கூட்டுமாறும், வர மறுத்தால் வரம் வேண்டு மாறும் குந்திக்குக் கண்ணன் மொழிதல் 153; அது கேட்டு, குந்தி வருந்த, கண்ணன் தேற்றுதல் 156; கண்ணன் விதுரன் மாளிகைக்கு மீள, சூரியன் மறைய, அந்திமாலை தோன்றுதல் 160; இரவில் துரியோதனன் செய்த சூழ்ச்சி 165; 'தனி வந்த கண்ணன் திறத்துச் செய்வது என்?' எனத் துரியோதனன் வினவுதல் 166; திருதராட்டி ரன், 'கண்ணனைக் கொல்ல வேண்டும்' என, விகருணன் தடுத்து மொழிதல் 168; துச்சாதனன் விகருணனை முனிந்து, 'போர் செய எழுவோம்' என்றல் 172; கன்னன், 'அம்பு ஒன்றினாலேயே அவனை வெல்வேன்!' எனல் 174; சூழ்ச்சியால் கண்ணனைச் சிறைப் படுத்தலே தக்கது எனச் சகுனி உரைத்தல் 175; துரியோதனன் நிலவறை அமைத்து, அதனுள் அரக்கர் முதலியோரை மறைத்து வைத்தல் 177; சூரியன் உதித்தல் 180; அரசர்கள் துரியோதனன் அவைக்கு வருதலும், கண்ணன் எழுந்து காலைக்கடன் முடித்தலும் 183; தூதுவர் அழைக்க, கண்ணன் அரசவைக்குச் செல்லுதல் 184; துரியோதனன் கண்ணனை மட்டும் அவையில் விடுமாறு காவலர்க்குப் பணித்தல் 185; துரியோதனன் பொய் ஆசனத்துக் கண்ணனை இருக்கச் செய்ய, அது முறிந்து நிலவறையில் புக, கண்ணன் பெரு வடிவு கொண்டு, அங்குள்ள வீரரை அழித்தல் 187; தேவர் முதலிய யாவரும் கண்ணனைத் துதித்து வேண்ட, அவன் தன் பெரு வடிவைச் சுருக்கிக் கொள்ளுதல் 206; சிறிதும் சலித்தல் இன்றி இருந்த துரியோதனனை நோக்கி, அவனை அழியாமைக்குக் காரணம் கூறி, கண்ணன் வெளியேறுதல் 211; உடன் வந்த மன்னர்களைக் கண்ணன் நிறுத்தி, கன்னனுக்கு அவன் பிறப்பு வரலாற்றை உணர்த்தி, ஐவருடன் கூடுமாறு கூறுதல் 214; 'ஐவரை இன்று அடுப்பின்,

அது செய்ந்நன்றி கொன்றதாகும்' எனக் கன்னன் மறுத்தல் 218; கன்னனை அனுப்பிவிட்டு, கண்ணன் அசுவத்தாமனை அருகில் அழைத்து, 'துரியோதனன் வேண்டினும் நீ சேனபதி ஆதல் கூடாது' எனல் 220; கண்ணன் தன் மோதிரத்தை வீழ்த்த, அதனை அசுவத்தாமா எடுக்கும்போது, 'வானில் ஊர்கோள் உற்றது' என, அவனும் வான் நோக்க, அவையோர், 'அசுவத்தாமன் சூளுற்றான்' எனல் 223; 'அசுவத்தாமனை இனித் தெளியலாகாது' என்று துரியோதனன் அவையில் கூற, அது அறிந்து அசுவத்தாமன் வருந்துதல் 225; விதுரன் மாளிகை சென்றபின், கண்ணன் இந்திரனை அழைத்து, கன்னனிடமுள்ள கவச குண்டலங்களை வாங்குமாறு கூறுதல் 227; இந்திரன் கன்னனிடம் கிழ முனி வடிவம் கொண்டு வந்து, அவனது கவச குண்டலங்களைப் பெறுதல் 235; இந்திரன் தன் உண்மை வடிவு காட்டி, கன்னனுக்கு வேல் ஒன்று கொடுத்தல் 240; இந்திரன் கண்ணனிடம் மீண்டு வந்து நிகழ்ந்தன கூற, அவன் இந்திரனுக்கு விடை கொடுத்தல் 242; குந்தியைக் கண்ணன் தூண்ட, அவள் கன்னனிடம் செல்லுதல் 244; கன்னன் குந்தியை எதிர்கொண்டு உபசரிக்க, அவள் அவனுக்குத் தான் தாய் என்பதை மெய்ப்பித்தல் 245; 'இளைஞர் ஐவருடனும் வந்து நீயே அரசாள வேண்டும்' என்று குந்தி வேண்ட, கன்னன் அதற்கு ஏதுக் காட்டி, மறுத்து மொழிதல் 250; குந்தி மிகவும் வருந்த, கன்னன் அவளைத் தேற்றி, வந்த காரியத்தை வினவுதல் 253; குந்தி இரு வரம் வேண்ட, கன்னனும் மருது கொடுத்தல் 255; கன்னன் குந்தியிடம் இரண்டு வரம் வேண்டிப் பெறுதல் 257; குந்தி கண்ணனிடம் மீண்டு வந்து செய்தி உரைக்க, கண்ணன் மகிழ்ந்து, பாண்டவரிடம் மீண்டு வந்து, நிகழ்ந்தன கூறல் 260-261.

**28. படை எழுச்சிச் சருக்கம் ... 375 - 386**

கடவுள் வாழ்த்து 1; தருமன் தனக்குத் துணைவராம் அரசர்க்குத் தூதரால் செய்தி அனுப்ப, அரசர் பலரும் வந்து திரளுதல் 2; வந்த மன்னவரைத் தருமன் எதிர்கொண்டு, துரியோதனன் நாடு தர மறுத்துப் போர் புரிய முன் வந்ததைக் கூறுதல் 9; அரசர்கள் தருமனுக்கு உறுதிமொழி கூறுதல் 11; தருமன் சிவேதனைச் சேனபதி யாக்குதலும், இராவான் தன் ஆண்மை எடுத்துரைத்தலும் 12; துரியோதனன் படைத்துணை வேண்டி அரசர்களுக்கு ஓலை அனுப்ப, பல நாட்டு அரசர்களும் வந்து திரளுதல் 14; துரியோதனன் வீடுமனைச் சேனபதி யாக்குதல் 24; வீடுமனிடம் களப்பலிக்கு உரியாரையும், அதற்கு உரிய நாளையும் துரியோதனன் கேட்க, அவன் மறுமொழி பகர்தல் 25; வீடுமன் உரைத்தபடி துரியோதனன் சகாதேவனிடம் சென்று நாள் கேட்டல் 27; துரியோதனன் கேட்க, இராவான் தன்னைப் பலியிட ஒப்புக்கொள்ளுதல் 28; கண்ணன் துரியோதனன் முகூர்த்த நாள் குறித்த செய்தியைக் கேட்டு, தருமனுக்கு நிகழ்ந்தன கூறி, தன்னைக் களப்பலி ஊட்டுமாறு கூறுதல் 29; பாண்டவர் வருந்தி உரைக்க, இராவான் தன்னைப் பலி கொடுக்கக் கூறி, போரைச் சில நாள் கண்டபின் மடியுமாறு அருள் எனக் கண்ணனை வேண்டுதல் 31; காளி கோயில் முன்னர் இராவான் தன்னைப் பலி கொடுத்தல் 34; பாண்டவர் பகடு முதலிய பிற பலிகளையும் கொடுத்து, வரம் வேண்டி மீளுதல் 35; கண்ணன்

ஆணையிடுதல் 91; அசுவத்தாமன், துரோணன், மற்றும் மன்னர்கள், யாவரும் ஒன்றுகூடி, அபிமனை வளைத்தல் 94; அபிமன் எய்த அம்பினால், பலர் உயிர் இழத்தலும் சின்னபின்னப் படுதலும் 96; காவலர் உடைதல் கண்டு, கன்னனைத் துரியோதனன் அனுப்புதல் 100; கன்னன் முதலில் அபிமனால் தன் தேர் முதலியன இழந்து, பின் மீண்டும் வந்து பொருது, அபிமனுடைய தேர் முதலியவற்றைச் சிதைத்தல் 101; தேர் இழந்த அபிமன் வாள் ஏந்தி, தரையில் பாய்ந்து பொருதல் 105; துச்சாதனன் மகன் துச்சனி, 'அபிமனை மாய்ப்பேன்!' என வந்து, அவன் வாளினால் மடிதல் 108; அது கண்டு துரோணன் அம்பு பல எய்ய, அபிமன் தன் வாளால் அவற்றைத் துணித்து, அவனது தேர் முதலியவற்றையும் சிதைத்தல் 109; பின்னும் துரோணன் மும்முறை தேர் இழந்து, மீண்டும் தேரில் வந்து வாளியினால் அபிமனது வலக்கையைத் துணித்தல் 111; ஒற்றைக் கையோடு நின்ற அபிமன், கன்னனிடம் பெற்ற மந்திரத் தால், ஓர் உருளையைச் சக்கரமாக்கிப் பொருதல் 115; ஒரு கையுடன் சக்கரத்தால் அபிமன் செய்யும் போர் கண்டு புழுங்கி, துரியோதனன் சயத்திரதனை அழைத்து, அபிமன் உயிர் கவர ஏவுதல் 116; சயத்திரதன் கதையுடன் பொர வர, பகைவர் களத்தே இட்டு ஓடிய ஒரு கதையை அபிமன் கையில் தாங்கிச் செருப் புரிதல் 119; சயத்திரதனது தேர் முதலியவற்றை அபிமன் அழிக்க, அவனும் தரையில் குதித்துக் கதை கொண்டு பொருதல் 124; அபிமனது போர்த்திறம் கண்டு, யாவரும் வியத்தல் 126; அபிமன் தளர்வுற்ற நிலையில் சயத்திரதன் கதையினால் அவனை மாய்த்தல் 129; அபிமனது மறைவுக்குக் கவி இரங்குதல் 131; பகைப் புலத்தாரின் மகிழ்ச்சி 135; தருமன் அபிமனது மரணச் செய்தி கேட்டுப் புலம்புதல் 137; வீமன் புலம்புதல் 142; தருமனும் அருச்சுனனை ஒழிந்த தம்பியரும் அழுது புலம்பியிருக்க, அருக்கன் மறைதல் 145; விசயன் தெற்குத் திக்கில் வெற்றிகொண்டு மீள, யாவும் உணரும் கண்ணன் இந்திரனை நினைத்து, அவனது புதல்வனைக் காக்குமாறு கூறுதல் 146; வழியில், இந்திரன் முனி வடிவில் வந்து, இறந்த தன் புதல்வனுடன் தீப் பாய இருத்தல் கண்டு, கண்ணன் அந்தணனை விலக்குமாறு விசயனுக்குக் கூறுதல் 148; விசயன் அந்தணனைத் தடுத்துக் கூற, அவன், 'நின் மகன் இறந்தாலும் என் வார்த்தையை மறுது ஒழி' என்றல் 150; அருச்சுனனும் ஒருப்பட்டு மேலே போகும் போது பேரொலி செவிப்படுதல் 153; பாசறை அணுகும் முன்னம், விசயன் பக்கத்திலுள்ள ஆயுதங்களைக் கண்ணன் அப்புறப் படுத்துதல் 154; 'அரற்று ஒலியின் காரணம் என்?' என விசயன் கேட்ப, கண்ணன் யாதும் உரையாது கண்ணீர் சிந்துதல் 155; விசயன் வற்புறுத்திக் கேட்ப, கண்ணன் அபிமனுக்கு உற்றவாறு கூறுதல் 156; புத்திரசோகத்தால் அருச்சுனன் தேரினின்று பூமியில் விழ, கண்ணன் தழுவி எடுத்துச் சோகம் மாற்றுதல் 158; விசயனது புலம்பல் 160; ஐவரும் புலம்பி நெஞ்சழிந்த காலத்து, முனிவர் பலருடன் வியாத முனி வந்து தேற்றி மீளுதல் 168; விசயன் பின்னும் சோகம் தாங்காது, நகுலனைக் கனல் வளர்க்கச் செய்து, தீப் பாயும் நிலையில், முன் அருச்சுனன் தடுத்த அந்தணன் வந்து விலக்குதல் 174; அந்தணன் விலக்க எரிபுகுதல் தவிர்ந்த விசயன், பின் தருமன் முதலியோரை வெகுளுதல் 177; 'நாளை அந்திப்பொழுதிற்குள் சயத்திரதனை முடிப்பேன்!' என விசயன் வஞ்சினம் மொழி

மாயன் தேரை வியூகத்தினுள்ளே செலுத்துதல் 15; தொடர்ந்து வந்த துரோணனை முனிவு மாறி ஏகுமாறு அருச்சுனன் மொழிதல் 16; காம்போசன் முதலியோரை, விசயன் வென்று, சூசி வியூகத்தை அடைதல் 18; 'கன்னனைப் பொருது மேற்செல்ல வேண்டும்' என விசயன் கண்ணனிடம் கூற, அவனும் தேரை அங்குச் செலுத்துதல் 19; கன்னனைச் சூழ நின்ற மன்னர்களை அழித்து, அவன் எதிர் நின்று விசயன் பொருதல் 22; கன்னன் மயங்க, சுதாயு அவனுக்கு உதவியாக வந்து பொருதல் 28; சுதாயு தண்டு கொண்டு எறிய, அது விசயனைத் தாக்காவண்ணம் கண்ணன் மார்பில் ஏற்றலும், சுதாயு முன் பெற்ற சாபத்தின்படி மடிதலும் 31; 'எறிந்த கதை நின் மேனியில் பட, சுதாயு மடிந்த காரணம் உரை' என்ற விசயனுக்கு அதனை விளக்குதல் 34; அடுத்து, சுதாயுவின் இளவல் சதாயு வந்து பொருது மாளுதல் 37; ஆயிரவாகு அருச்சுனனுடன் பொருது அழிதல் 38; பட்டவர்த்தனரும் முடிமன்னரும் திரண்டு வந்து விசயனுடன் பொருது, பலர் உயிர் இழத்தலும், பலர் தப்பியோடுதலும் 44; சூரியன் உச்சிப் பொழுது அடைதல் 49; 'நீர் உண்ணவிடில் குதிரைகள் செல்லமாட்டா' எனக் கண்ணன் கூற, விசயன் வருணன் அம்பினால் ஒரு தடாகம் உண்டுபண்ணுதல் 50; தடம் கண்டு கண்ணன் உரைப்ப, விசயன் புரவிகளுக்கு நீர் ஊட்டி இளைப்பாறுதல் 54; 'விசயனோடு பொரச் சென்றவர் தப்பார்' என்று ஓடிவந்தவர் சொல்ல, துரியோதனன் துரோணனிடம் சென்று குறையிரத்தல் 56; துரோண முனிவனின் மறுமொழி 61; துரோணன் அழிவற்ற கவசம் ஒன்றைத் துரியோதனனுக்கு அணிய, அவன் போருக்குப் புறப்படுதல் 66; துரியோதனன் சேனைகள் விசயன் ஆக்கிய தெய்விகப் பொய்கையில் நீர் பருகி விடாய் தீர்ந்து, விசயனை வளைத்தல் 68; விசயன் புரவிகளுக்கு நீரூட்டும்போது, துரியோதனன் பெரும் படையுடன் வருதல் கண்டு, புரவியைத் தேரில் பூட்டி, கண்ணன் அனுமதியுடன் தரையில் நின்ற வண்ணம் பொருதல் 70; வந்த சேனையை நிலை குலையச் செய்தபின், விசயன் கண்ணனோடு இன்புறத் தேரில் ஏறுதல் 76; துரியோதனன் சகுனி முதலியோருடன் வந்து வளைத்தல் 77; 'இவர்கள் நெருங்கி வந்து பொருதற்கு யாது காரணம்?' என விசயன் கண்ணனை வினவ, அவன் துரோணன் அளித்த கவசத்தின் தன்மை கூறி, அதனை அழிக்குமாறு தூண்டுதல் 78; தனஞ்சயன் அம்பின் எதிரே பலரும் பின்னிடுதல் 80; துரோணன் அளித்த கவசத்தை அணிந்து, துரியோதனன் விசயன் எதிர் பொருதல் 83; வாளிகள் துரியோதனன் கவசத்தை அழியாமை கண்டு, விசயன் வேல் கொண்டு எறிய, அசுவத்தாமன் தன் அம்புகளால் அதனைத் துணித்தல் 85; அர்ச்சுனன் தளர்நிலை கண்டு, கண்ணன் வலம்புரி முழக்க, மண்டலிகர் மயக்கமுறுதல் 86; அப்பொழுது, கண்ணன் விசயனுக்கு வேல் அளிக்க, அவன் அதனை எறிந்து, துரியோதனன் கவசத்தைத் துகளாக்குதலும், யாவரும் பின்னிடுதலும் 89; கண்ணனது சங்கநாதம் கேட்ட தருமன், சாத்தகியை அழைத்து, விசயனது போர்ச் செய்தி அறிந்து வர அனுப்புதல் 96; அதிரதரோடு சென்ற சாத்தகி, தூசி பிளந்து சென்று, கிருதவர்மனை வெல்லுதல் 100; சாத்தகி சலசந்தனோடும், துரியோதனன் தம்பியர் நால்வரோடும் பொருது வெல்லுதல் 102; சாத்தகியைத் துரோணன் தடுக்க, இருவரும் ஒத்துப் பொருது இளைத்தல் 106; பின், சாத்தகி இளைப்பு ஆறி, மேற் செல்ல, துச்சாதனன் தடுத்து நிற்கலாற்றாது பின்னிடுதல்

108; பின்னும் தடுத்தவர்களை எல்லாம் வென்று, சாத்தகி விசயன் நின்ற இடம் சார்தல் 110; சாத்தகி வாராமையால், தருமன் கவலைகொண்டு, வீமனையும் விசயன் நின்ற இடத்திற்கு அனுப்புதல் 111; வீமன் நாற்படையொடு விரைந்து, எதிர்ந்தாரை வென்று மேற்செல்லுதல் 113; விந்தன், விந்தரன் முதலிய துரியோதனன் தம்பியர் முப்பத்தைவர் வீமனால் மாள, எதிர்ந்த சேனை சிதைதல் 117; 'வீமன் விசயனை அடுத்தால் நம் படை கலங்கும்' என்று துரோணன் தடுத்து நிற்றல் 121; வீமன் துரோணரைத் தேருடன் எடுத்து எறிய, வீழ்ந்து தேர் முதலியன சிதைதல் 123; பல மன்னருடன் கன்னன் வந்து வளைக்க, வீமன் அவனது தேர் முதலியன சிதைத்தல் 125; ஓடிய கன்னன் விடசேனன் தேரில் மீண்டும் வந்து பொருது பின்னிட, துரியோதனன் அனுப்ப வந்த அவன் தம்பியர் இருவரும் பொருது மடிதல் 130; தன் கண்ணெதிரே அரசன் தம்பியர் பட்டது கண்டு, கன்னன் வஞ்சினம் கூறி வீமனோடு பொருது தேர் இழத்தல் 133; அப்பொழுது, துரியோதனன் தன் தம்பியரில் எண்மரை அடுத்தடுத்து அனுப்ப, அவர்களுள் விகருணன் ஒழிந்தோர் மாளுதல் 140; விகருணன் வர, 'நின்னொடு பொருதல் முறை அன்று' என்று வீமன் உரைக்கவும், 'எம்முனோர் இறக்க யான் உய்யேன்' என்று போர் தொடங்குதல் 143; இருவரும் ஒத்துப் பொருதும், இறுதியில் விகருணன் உயிர் இழத்தல் 148; பின், கன்னன் முதலியோரையும் வீமன் வென்று, சாத்தகியோடு சேர்ந்து விசயனைக் கூடுதல் 152; சாத்தகியும் பூரிசவாவும் விளைத்த மற் போரில், சாத்தகி இளைக்க, கண்ணன் பூரிசவாவைக் கொல்லுமாறு விசயனை ஏவுதல் 155; விசயன் பூரிசவாவின் புயத்தைத் துணிக்க, சாத்தகி அவனை வாளால் மாய்த்தல் 158; 'அறம் அன்று, இப் போர்' என்ற துரியோதனனுக்குக் கண்ணன் உரைத்த மறுமொழி 160; விசயன் தன் வஞ்சினம் முடித்தற்குப் பகைவர் படையைச் சார, பகைவர் சயத்திரதனை நிலவறையுள் வைத்துக் காத்தல் 161; சயத்திரதனைக் காணாது, கண்ணன் ஆழியால் சூரியனை மறைத்தல் 163; சூரியன் மறைந்தது என்று கருதி, விசயன் எதிரே சயத்திரத னையும் கொண்டு மன்னர் பலரும் வருதல் 165; 'சயத்திரதன் தலையைக் கொய்து, சமந்தபஞ்சக மடுவில் தருப்பிக்கும் அவன் தந்தை கையில் விழுமாறு செய்' என, கண்ணன் மொழிதல் 166; விசயன் கணை தொடுத்துச் சயத்திரதனை மாய்த்தல் 167; 'விசயன் மொழி பிழைத்தான்' என்று துரியோதனன் முதலியோர் துள்ளி ஆர்க்கும் போது, கண்ணன் ஆழியை அகற்ற, சூரியன் பனைஅளவு தூரத்தில் நிற்றல் 169; சேனையிலுள்ளார் கூற்று 170; துரியோத னன் கண்ணனைப் பழித்து, மன்னர் பலருடன் கூடிப் பொருதல் 172; தேர் முதலியன இழந்து, வீமன் வெறுங்கையோடு பொருது, பிருகன், சூசி என்ற அரசன் தம்பியரை மாய்த்தல் 175; கடோற்கசனும், அவன் மகன் அஞ்சனபன்மனும் அசுவத்தாமனுடன் பொருத போரில், அஞ்சனபன்மன் உயிர் இழத்தல் 177; கடோற்கசனை அசுவத்தா மன் தண்டால் வீழ்த்த, மோகித்த அரக்கனைக் கொல்லுமாறு கன்னனைத் துரியோதனன் தூண்டுதல் 178; 'தளர்ந்தவன்மேல் அம்பு தொடேன்; விசயனைக் கொல்வேன்' என்று வீரம் பேசிச் சென்று, விசயனிடம் பல முறை வென்னிடுதல் 180; அசுவத்தாமன் குந்தி போசன் மைந்தர் இருவரை மாய்க்க, சூரியனும் மறைதல் 182; துரியோதனன் இரவினும் பொரத் துணிந்து விளக்கு எடுக்கச்

தனனை நோக்கி, 'சல்லியன் எனது தேரைச் செலுத்தின் இன்று யாவரையும் வெல்வேன்!' எனல் 17; துரியோதனன் சல்லியனை அடுத்து, 'ஒரு வரம் வேண்டும்' என்று முதலிற் கூறி, பின் கன்ன னுக்குத் தேர் ஊர்தல் குறித்து உரைத்தல் 22; சல்லியன் சினந்து, துரியோதனன் வேண்டுகோளை மறுத்தல் 26; துரியோதனன் சமா தானம் கூற, சல்லியன் ஒருப்படுதல் 28; சல்லியன் கன்னனுக்குப் பாகனுய் வந்து அமர, கன்னன் உவந்து சேனைகளை அணிவகுத்தல் 31; கன்னன் தானம் செய்தபின், தன்னைப் பலபடப் புகழ்ந்து சல்லிய னிடம் பேசுதல் 33; சல்லியன் இளநகை செய்து, கன்னனது தருக்கு அடங்கப் பேசுதல் 37; சல்லியனைக் கன்னன் கடிய, அவன் வாள் ஏந்தி மண்ணில் நின்று கன்னனை அறைகூவுதல் 40; கன்னனும் கீழ் இறங்கி வாள் ஏந்திப் பொர, துரியோதனன் வந்து விலக்கி, இருவரையும் தேரில் ஏற்றிப் போர் செய வேண்டுதல் 42; கன்னனைக் கிருதவன்மன் முதலியோர் காத்து நிற்க, துரியோதனன் சல்லியனுக் கும் கன்னனுக்கும் நல்லுரை பகர்தல் 44; அப்பொழுது திட்டத் துய்மன் வீரரோடு கன்னனை நெருங்கிப் பொருது தோற்றுத் தேருடன் திரும்புதல் 53; அப்பொழுது வீமன் வந்து கன்னனேடு பொருதல் 57; 'விசயன் வஞ்சினம் அழியும்' என்று கன்னனை வீமன் கொல்லாது விடுத்துச் செல்லுதல் 62; சாத்தகியோடு விடசேனன் பொருது, தேர் முதலிய இழத்தல் 63; சோழன் மாகதனுடன் பொருது, அவன் ஆவி கவர்தல் 65; மாகதன் மாண்டதும் சேனை புறமிட்டதும் கண்டு, அசுவத்தாமன் வர, விசயன் அவனை வென்று, வெறுங் காலு டன் மீள விடுதல் 69; துரியோதனன் தம்பி சுதக்கணன் வர, நகுலன் அவனை அஞ்சி ஓடச் செய்தல் 72; கன்னன் முனைந்து வர, தருமன் எதிர்ந்து பொருதல் 74; கன்னனுல் திட்டத்துய்மன் முதலியோர் தளர்தல் கண்டு, தருமன் சேனையுடன் நெருங்கிப் பொருதல் 82; கலிங்கர் முதலியோரைத் தருமன் ஓட்டி, பலரையும் விண் புகச் செய்தல் 87; தருமன் சங்கு முழக்க, கன்னனும் சங்கு முழக்கி, தருமன் நின்ற சமர முகத்து வருதல் 88; தருமனது புயம் முதலிய வற்றில் கன்னன் அம்பு எய்ய, அவன் சோர்ந்து புறங் கொடுத்தல் 90; தருமனைப் புறமிடுதல் தகாது என்று கன்னன் கூற, அவன் உரையை மதித்துத் தருமன் நின்றபோது, வீமன் ஆங்கு வருதல் 93; 'வீமனை வெல்லுதல் அரிது!' என்று சல்லியன் கூற, கன்னன் வீரம் பேசுதல் 95; வீமன் அம்பால் கன்னன் அயர்ந்து வீழ்தல் 97; சல்லியன் தேற்றத் தேறி, கன்னன் அம்பு எய்தல் 99; சிங்கசேனனை உள்ளிட்ட எழுவர் மாய, வீமன் சேனையோடு முதுகிடுதலும், அருச்சுனன் அங்கு வந்து பொருதலும் 100; கன்னனுக்கு உதவியாக அசுவத்தாமன் வந்து கடும்போர் விளைத்தல் 103; கண்ணன் உரைப்படி பிறைமுக அம்பை விசயன் ஏவுதலும், அசுவத்தாமன் மயங்கித் தேரில் விழ, துச்சா தனன் கண்டு தேரொடும் அவனைக் கொண்டு போதலும் 106; அசுவத் தாமன் மீண்டும் வர, சித்திரவாகன பாண்டியன் அவனேடு பொருதல் 107; பாண்டியன் அசுவத்தாமனேடு கடும் போர் விளைத்து இறந்து படுதல் 112; தருமன் சேனை பின்னிட, துரியோதனன் சேனையோர் அம்பு எய்தல் 119; அசுவத்தாமன் முன் சோழன் தோன்றி, அவனை இகழ்தல் 120; சோழனும் அசுவத்தாமனும் பொருத வகை 124; சோழன் எறிந்த வேலால் அசுவத்தாமன் கலங்கி விழ, சகுனி முதலி யோர் அவனை எடுத்து, வருத்தம் மாற்றுதல் 129; அசுவத்தாம னுடன் மன்னர் பலர் மீள வந்து, சோழனுடன் போர் செய்து,

அழிந்து மீளுதல் 131; தம்பியர் ஒன்பதின்மருடன் துச்சாதனன் வீமனை அடுத்து எதிர்த்தல் 135; துச்சாதனன் வீரத்தை வீமன் பழித்துரைத்து, வஞ்சினம் கூறுதல் 137; துச்சாதனன் வாய் பேசாது நிற்க, ஒன்பதின்மர் தம்பியரும் வீமனை எதிர்த்து மாளுதல் 140; துச்சாதனன் வெகுண்டு வீமனுடன் விற்போர் பொருதல் 142; தேர் இழந்த நிலையில் இருவரும் கதைப் போர் புரிதல் 146; கதையை விடுத்து, இருவரும் முட்டி யுத்தம் செய்தல் 152; வீமன் துச்சாதனன் உடலைத் துகைத்து, குருதியில் குளித்தல் 155; துச்சாதனன் இறக்கவே, துரியோதனன் சேனை நில்லாது வென்னிடுதலும், கண்ணன் முதலியோர் வீமனை வந்து கூடுதலும் 157; வீமன் துச்சாதனன் விரல் பத்தையும் மீண்டும் துணித்து, அவனது உதிரத்தைக் குடிக்கப் புக, கண்ணன் தடுத்தல் 159; வீமன் குருதியைக் குடியாமல் கொப்பளித்து நின்று கூத்தாடி, தருமனது அடி வீழ்ந்து செய்தி சொல்லி, அகங்கரித்தல் 161; கன்னன் சற்றுப் போர் ஒய்ந்திருக்க, சல்லியன் இடித்துரைத்தல் 163; 'துச்சாதனன் இறந்த சோகமே தவிர வேறு அன்று' என்று, கன்னன் சேனையைப் பேரணி ஆக்கி எதிர்த்தல் 165; திட்டத்துய்ம னும் தன் சேனையை வகுத்து எதிர் வந்து பொருதல் 167; விட சேனன் நகுலனுடன் பொருது, அவனை மயங்கி விழுமாறு செய்தல் 169; விழுந்த நகுலனை வீமன் கொண்டு செல்ல, அருச்சுனன் விட சேனனோடு பொருது, அவனை மாய்த்தல் 174; அப்பொழுது கன்னன் கருத்து அழிந்து விழ, சல்லியன் தேற்றுதல் 178; அசுவத்தாமன் துரியோதனனை அடுத்து, 'இப்பொழுதாயினும் பாண்டவருடன் கூடி வாழ முற்படு!' எனல் 179; 'போரில் மாய்தலே நான் பெறும் பயன்!' எனத் துரியோதனன் மறுத்து மொழிதல் 182; அசுவத்தாமனுடன் துரியோதனன் கன்னனை அடுத்து, அவன் சோகம் மாற்றி, விசயனது உயிரைக் கொள்ளுமாறு தூண்டுதல் 183; 'விசயன் தலை கொய் வேன்!' என்று கூறிக் கன்னன் எழ, இருபக்கத்துச் சேனைகளும் நெருங்கிப் பொருதல் 184; விசயன் தம்பியரோடு கணைமழை பொழிந்து வர, கன்னனும் அசுவத்தாமா முதலியோர் சூழச் சென்று, கடும் போர் பொருதல் 191; அருச்சுனன் தேவதத்தம் முழக்கி, அம்பு தெரிந்து விட, கன்னன் பராபரம் முழக்கி, அவற்றைத் தறித்தல் 200; மாயன் தேர் செல்லாதபடி கன்னன் சரகூடம் அமைக்க, கண்ணன் விரகினுல் எதிர்ப் பக்கத்தும் சரகூடம் உளதாதல் 202; 'செயலற்று நிற்றல் ஏன்?' என்ற கண்ணனுக்கு, விசயன், 'கன்னன் தருமன்போல் தோன்றுதலின் எனக்கு அமர் செய்தல் அரிது; தேரினை மீளவிடு' என மறுமொழி பகர்தல் 203; விசயன் தருமனை அடுக்க, அவன் விசயனது வில்லைப் பழித்தலும், அது குறித்துக் 'கொல்வேன்!' என்று எழுந்த விசயனைக் கண்ணன் விலக்கு தலும் 205; விசயன் தமையனை நோக்கி இசையாத புன்மொழி பேச, தருமன் ஒன்றும் கூருது 'துறப்பேன்!' என்று கான் புக நினைதல் 208; கண்ணனும் விசயனும் தருமனை வணங்கி, 'கன்னனை உயிர் கொள்வோம்!' என்று விடைகொண்டு செல்லுதல் 209; கன்னன் சர கூடத்தை அறுத்து வீமனோடு பொருதலை விசயன் கண்டு, களத்தை அடுத்துக் கன்னனுடன் பொருதல் 212; கன்னன் நாகாஸ்திரத்தை விசயன் கழுத்திற்கு இலக்காக எய்தலும், கண்ணன் தேரை அழுத்தவே, அது அவனது கிரீடத்தை இடறிச் செல்லுதலும் 221; நாகாஸ்திரத் தை விசயன் இருகூறுக்குதலும், அது மீண்டும் கன்னனிடம் வந்து, தன்னை விடுமாறு வேண்ட அவன் மறுத்தலும் 225; நாகம் கன்னனை

நொந்து உரைத்து, உயிர் துறத்தல் 227; இருதிறத்தாரும் விசயன் தப்பியமைக்கு மகிழ்தல் 228; சல்லியன் உளம் நொந்து கூறி, கன்னனுக்குத் தேர் ஓட்டேன் என்று தேரிலிருந்து இறங்கி, தனது தேருக்குச் செல்லுதல் 229; கன்னன் பரசுராமன் சாபத்தை நினைந்தவனாய், வேறு தேர் ஏறி விசயனுடன் பொருதல் 232; கண்ணன் கன்னன் வலி குறைதலை விசயனுக்குக் குறிப்பிக்க, அவன் கன்னனது உயிர்க் காற்று அலியுமாறு பாணம் தொடுத்தல் 234; போரை நிறுத்துமாறு கண்ணன் விசயனுக்குக் கூறி, வேதியர் வடிவு கொண்டு கன்னனை அடைதல் 236; வேதியன், 'இயைந்தது ஒன்று அளி' எனலும், கன்னன், 'தரத்தகு பொருளை நீ சொல்லுக!' என்ன, வேதியன் அவனது புண்ணியத்தை உதவ வேண்டுதலும் 238; கன்னன் மகிழ்ந்து, தான் செய் புண்ணியம் அனைத்தையும் நீர் வார்த்துக் கொடுத்தல் 240; 'வேண்டும் வரம் கேள்' என முனிவன் கன்னனுக்குக் கூறுதலும், அவன், 'எப்பிறப்பினும் இல்லை என்போர்க்கு மறுத்து உரையா இதயம் அளி' என்றலும் 242; கன்னன் வேண்டிய வரம் அளித்து, முத்தியும் பெறுவாய் என்று முனிவன் உரைத்தல் 243; வேதியன் தன் உண்மை உருவைக் காட்டக் கண்டு, கன்னன் அகம் மகிழ்ந்து துதித்தல் 244; கண்ணன் கன்னன்பொருட்டுத் தான் செய்த செயல்களைக் கூறி, மீண்டு சென்று, விசயனுக்கு வலவன் ஆதல் 250; கண்ணன் சொற்படி, விசயன் அஞ்சரிகம் எனும் அம்பை ஏவ, கன்னன் விழ்தல் 252; குற்றுயிருடன் கன்னன் கிடக்க, அசரிரி உரையால் செய்தி உணர்ந்த குந்தி அங்கு வந்து, அழுது புலம்புதல் 253; குந்தி தேவி கன்னனை நேயமோடு மடியில் வைத்து அமுதூட்ட, கன்னனது ஆவி பிரிதல் 257; துரியோதனன் சேனைகள் வீமனாலும் விசயனாலும் குறைந்த தன்மை 259; துரியோதனன் புலம்புதல் 260; சூரியன் மறைதல் 262; தாயின் அழுகை கேட்டு ஐவரும் கன்னனை வினவி உண்மை தெரிந்து, கன்னனை அணுகுதல் 263; தருமன் முதல் ஐவரும் முறையே வருந்திப் புலம்புதல் 264; ஐவரும் தாயும் பாடி வீடு செல்ல, துரியோதனனைக் கொண்டு சகுனி முதலியோர் தங்கள் இருப்பிடம் செல்லுதல் 269.

## 46. பதினெட்டாம் போர்ச் சருக்கம் ... 614 - 664

கடவுள் வாழ்த்து 1; சூரியன் தோன்றுதல் 2; துரியோதனன் இரவில் சகுனியொடு எண்ணி, உதயத்தில் சூரியனைத் தொழுதல் 3; சல்லியனைத் துரியோதனன் அழைத்துச் சேனாதிபதியாக்குதல் 4; துரியோதனன் காலைக் கடன்களை முடித்து, சல்லியனோடு களம் புகுதல் 7; சல்லியன் சேனையை அணி வகுத்தல் 9; ஐவரும் பாசறையில் கன்னன் பிரிவுக்குப் புலம்பிச் சோகமுறுதல் 10; பாண்டவர் போர்க்களம் புகுதல் 13; சல்லியனது அத்திரவியூகம் கண்டு தருமன் மனம் தளர, கண்ணன் அவனுக்குத் தேறுதல் உரைத்தல் 15; திட்டத்துய்மன் அணிவகுத்து நிற்க, சேனைகள் பொரத் தொடங்குதல் 20; சல்லியன் வந்து தருமனோடு பொருதல் 21; தருமனும் சல்லியனும் விற்போர் புரிதல் 25; தருமன் தளர்ச்சி கண்டு, வீமன் சல்லியனோடு வந்து பொருதல் 28; வீமன் விற்போரில் அதிர்ந்து கதை கொண்டு பூமியில் நிற்க, சல்லியன் தோமரப் படையால் வீமனை எற்றுதல் 31; போரில் வீமன் நிலைகுலைய, இரு பெருஞ் சேனையும் பொருதலும், கன்னன்

புத்திரர் மூவர் நகுலனால் மடிதலும் 33; சகுனியும், அவன் புதல்வர் இருவரும் நகுலனோடு பொருது தோற்றல் 35; துரியோதனன் கேதுதரன் என்பானைக் கொல்லுதல் 36; சல்லியன் மீண்டும் தருமனோடு பொருதலும், சுமித்திரன் முதலிய மன்னரை மடிவித்தலும் 37; வீமன் வடிவு புதையுமாறு சல்லியன் அம்பு எய்ய, நகுல சகாதேவரும் சாத்தகியும் வந்து, சல்லியனோடு பொருதல் 39; தம்பியர் தளர்வு கண்டு, சல்லியனது கொடி முதலியவற்றை வீமன் அழித்தல் 43; துருபதன் முதலிய அனைவரும் தருமன் தம்பியர்களோடு கூடி முனைந்து பொருதல் 45; அருச்சுனனும் அசுவத்தாமனும் விளைத்த போர் 46; 'கண்ணன் தேர் விடும் வரையில் விசயனுடன் பொருதல் அரிது!' என அசுவத்தாமன் விலகிச் செல்லுதல் 52; கிருபன் முதலிய பலரையும் விசயன் வென்று, வீமனைச் சேர்தல் 53; சல்லியன் வீமனால் பரி, சிலை, முதலியன இழக்க, துரியோதனன் படையுடன் வந்து உதவுதல் 54; சாத்தகி முதலிய பலரும் எதிர்ந்து வர, சல்லியன் பொருது, சாத்தகியையும் நகுலனையும் வெல்லுதல் 55; நகுலனை ஒழிந்த நால்வரையும் அம்பினால் எய்ய, வீமன் சல்லியனது மகுடத்தை வீழ்த்துதல் 57; அது கண்டு பொருத துரியோதனன், வீமனோடு வந்து பொருது தோற்றல் 59; துரியோதனன் முதுகிட, சல்லியன் வந்து பொருதல் 64; சல்லியனுக்கும் தருமனுக்கும் துணையாகப் பல வீரர்கள் வருதல் 65; இரு திறத்தாரும் மலைந்த போர்ச் சிறப்பு 67; தம்பியர் முதலியோரை விலக்கித் தருமன் சல்லியனோடு பொருதல் 69; தருமன் வேல் எறிந்து, சல்லியனது முடித்தலை துணித்தல் 72; சல்லியன் மாண்டமை கண்டு துரியோதனன் சேனை நிலை குலைய, எழுநூறு தேர் வீரர்கள் தருமனை எதிர்த்தல் 73; சகுனி முதலானோரோடு, துரியோதனனும் தருமனை எதிர்க்க வருதல் 75; வீமன் முதலியோர் பகைவரை எதிர்த்துப் பொருத திறம் 76; வீமன் துரியோதனன் தம்பியர் எழுவரை மாய்த்தலும், துரியோதனன் சோகமும் 77; துரியோதனன் தம்பியர் ஐவரோடும் பெருஞ் சேனையோடும் கிருதவன்மன் வந்து பொர, வீமன் கணையால் தம்பியர் ஐவரும் மாளுதல் 79; அப்பொழுது துரியோதனன் சீற்றத்தோடு வந்து பொர, அவனைச் சகாதேவன் வெல்லுதல் 81; சகுனி முதலிய பலரும் வீமனோடு பொருது பின்னிட, துரியோதனன் தம்பியர் ஒன்பதின்மர் வந்து பொருது மடிதல் 83; எஞ்சியிருந்த துரியோதனன் தம்பியரும் வீமனால் இறத்தல் 85; தன் தம்பியர் தொண்ணூற்றொன்பதின்மரும் வீமன் வாளியாலும் கதையாலும் இறந்தது குறித்துத் துரியோதனன் கவலையுற, சகுனி அவனுக்கு ஆறுதல் மொழிதல் 86; வீமனோடு சகுனி பொர, அவனது சேனை நிலைகுலைதல் 89; மீளவும் சகுனி துரியோதனனுக்கு ஊக்கம் அளித்தல் 91; சகுனிமேல் சகாதேவன் வாளி ஏவுமுன், துரியோதனன் அவன் வேலை வீசுதல் 92; அது கண்ட வீமன், துரியோதனன்மேல் வாளி ஏவுதல் 93; வீமன்மேல் வேல் ஏவிய அசுவத்தாமன்மேல், சோழன் அம்பு தொடுத்தல் 94; அசுவத்தாமன் நிலை கண்டு பொரவந்த அவன் மாமன் கிருபாசாரியனும் வென்னிடுதல் 96; சகுனி மீள வந்து பொர, சகாதேவன் வேல் எறிந்து, அவனை மாய்த்தல் 97; சகுனி இறந்ததும் எங்கும் போர் ஒழிய, துரியோதனனும் வன்மை அழிந்து நிற்றல் 98; இறந்தவரை எழுப்பும் மறையால் சேனையோரை எழச் செய்து பொர எண்ணி, துரியோதனன் ஒருவருக்கும் உரையாது தனிச் செல்லுதல் 100; துரியோதனன் ஒரு குளத்

தில் மூழ்கி, மறையை மொழிந்து, தவம் செய்தல் 103; சோழனுக்கு முதுகிட்ட வீரர்கள் நிலையும் அசுவத்தாமன் முதலியோர் இறந்த சகுனியைக் காணுதலும் 106; துரியோதனனைக் களத்தில் காணாது, அசுவத்தாமன் சஞ்சயனைக் கண்டு வினவுதல் 109; சஞ்சயன் துரியோதனன் இருக்கும் இடம் கூறல் 111; அசுவத்தாமன் முதலியோர் நீர்நிலையை அடைந்து, துரியோதனனை அழைத்தல் 114; அசுவத்தாமன் ஐவரை அழிப்பதாகச் சபதம் செய்து கூறுதல் 118; துரியோதனன் மறுமொழி கொடாது தவநிலையில் நிற்க, அசுவத்தாமன் முதலியோர் மீளுதல் 122; மிருக மாக்கள் கூற, துரியோதனன் சென்ற இடத்தை வீமன் அறிந்து, தருமன் முதலியோர்க்கு அறிவித்தல் 124; துரியோதனன் இறந்தாரை எழுப்பும் மந்திரம் பெற்றதைக் கண்ணன் அறிவித்தல் 128; வீமன் குளத்தை அடைந்து, துரியோதனனை இகழ்ந்து, போருக்கு அழைத்தல் 130; துரியோதனன் வெளி வருதல் 138; 'யாரொடு பொருவது?' என்று, துரியோதனன் வினவுதலும், கண்ணன் 'வீமனோடு பொருதலே ஏற்றது' எனலும் 140; 'எந்த ஆயுதத்தால் போர் செய வேண்டும்?' என வீமனைத் துரியோதனன் வினவுதல் 144; 'கதை கொண்டே போர் செய்யலாம்' என வீமன் மொழிதல் 145; 'எந்த இடத்தில் போர் புரிவது?' என்று வினவிய துரியோதனனுக்குக் கண்ணன் விடை கூறும் அளவில், பலராமனும் விதுரனும் அங்கு வருதல் 146; பலராமனையும் விதுரனையும் கண்ணன் முதலியோர் வரவேற்றுப் பாராட்டுதல் 148; புண்ணிய நீர் ஆடி வந்த இருவரும் தாம் சென்று மீண்ட வரலாறு உரைக்க, கண்ணன் பாண்டவ கௌரவர்களின் போர்ச் செயலைக் கூறுதல் 149; பலராமன் துரியோதனன் தோல்விக்கு வருந்தி, மேல் நடப்பது பற்றி அறிந்து, கண்ணனையே பொரு களம் வரையறுக்குமாறு கூறுதல் 151; கண்ணன் போர்க்களம் குறிக்க, யாவரும் அவ்விடம் நோக்கிச் செல்லுதல் 153; வேகமுடன் நடந்து செல்லும் துரியோதனன், தன் நிலைக்கு மனம் இரங்குதல் 155; தருமன் அரசாட்சியை ஏற்குமாறு துரியோதனனை வேண்ட, அவன் இசையாமை 157; எல்லாரும் யமுனை கடந்து, சமந்தபஞ்சகத்தை அடைதல் 161; யாவரும் சூழ்ந்து நிற்க, வீமனும் துரியோதனனும் போருக்குச் சித்தமாதல் 162; வீமன் துரியோதனனை இகழ்ந்து, தன் வீரம் பேசுதல் 164; வீமனைப் போர் தொடங்குமாறு துரியோதனன் மொழிந்து அவனோடு கதைப் போர் புரிதல் 166; இருவரும் பொருத வகை 168; இளைத்த துரியோதனன், வீமனது உயிர் நிலையை உசாவி அறிந்து தாக்க, வீமன் மயங்கி விழுதல் 173; வீமன் துரியோதனனது உயிர் நிலையை வினவ, அவன் மாறுபட மொழிதல் 175; வீமன் தாக்குதலால் துரியோதனன் நிலைகுலைய, வீமன் அவனை, 'இளைப்பாறுக!' எனல் 176; துரியோதனன் தெளிவு பெற்று வீமனைத் தாக்க, இருவரும் கடும் போர் புரிதல் 177; வீமனது தாழ்வு கண்டு, 'துரியோதனனை வெல்லும்வகை யாது?' என, கண்ணனை விசயன் வினவுதல் 180; துரியோதனனைக் கொல்லும் உபாயத்தைக் கண்ணன் கூறுதல் 181; விசயன் குறிப்பினால் வீமனுக்கு உபாயம் உரைக்க, அவன் அதனை உணர்ந்து, துரியோதனது தொடையில் அடித்துப் பூமியில் வீழ்த்துதல் 183; துரியோதனன் கண்ணனைப் பழித்துக் கூறுதல் 188; துரியோதனன் மீண்டும் எதிர்க்க எழுந்த போது, வீமன் அவனை முடியில் உதைக்க, அது கண்டு பலராமன் சினந்து கூறி, வீமனோடு பொருதற்கு எழுதல் 190; கண்ணன்

பலராமனைத் தடுத்து, சமாதானம் கூறுதல் 193; பலராமன் செல்ல, துரியோதனன் குற்றுயிராய்க் களத்தில் கிடத்தல் 196; சூரியன் மறைய, ஐவரும் பாசறைக்கு மீளுதல் 197; 'பாசறை புகுதல் கடன் அன்று' என்று, ஐவரையும் கண்ணன் பக்கத்திலுள்ள ஒரு காட்டிற்கு அழைத்துச் செல்லுதல் 198; அசுவத்தாமன் செய்தி தெரிந்து, துரியோதனனை அணுகிச் சோகமுறுதல் 199; 'பாண்டவரை விடிவதற்குள் அழித்து வருவேன்!' என்று அசுவத்தாமன் வஞ்சினம் கூற, துரியோதனன் தன் முடி மணியை அளித்தல் 201; அசுவத்தாமன், கிருபன், கிருதவன்மன், மூவரும் பாண்டவரது பாசறை புகுதல் 204; ஒரு பூதம் அவர்களைத் தடுத்துவிட, அவர்கள் மூவரும் அருகிலுள்ள ஆலமரத்தின் அடியைச் சார்தல் 206; அசுவத்தாமன் பற்பல சிந்தை செய்து, பின் சிவனைப் பூசித்து, அவனால் ஆயுதம் பெறுதல் 209; அசுவத்தாமன் சிவன் அளித்த ஆயுதம் ஏந்தி, உடன் வந்த வீரரோடு பாசறை புக, பூதம் அஞ்சி ஓடுதல் 212; உடன் வந்த இருவரையும் வாயிலில் நிறுத்தி, அசுவத்தாமன் உட்புகுந்து, திட்டத்துய்மனது தலையைத் துணிக்க, பாஞ்சாலர் அவனை எதிர்த்தல் 213; எதிர்ந்த பலரைக் கொன்று, ஐவரைத் தேடும் அசுவத்தாமன், உறங்கும் அவர்களது புதல்வர் ஐவரையும் அடுத்தல் 215; கனவுபோல் அசுவத்தாமனைக் கண்ட இளம் பாண்டவர் தமது படையை எடுப்பதற்குள், அவர்களைப் பாண்டவர் என மயங்கி, அவர்களது தலைகளை அசுவத்தாமன் கொய்தல் 216; சோழன் அசுவத்தாமனை எதிர்த்து, சேனைகளுடன் மடிதல் 218; அசுவத்தாமன் தனியாகப் பொருது, மேலும் பலரை அழித்தல் 220; அசுவத்தாமன் இளம் பாண்டவர் தலைகளுடன் விடிவதன்முன் துரியோதனனை அடைதல் 221; அசுவத்தாமன் தான் சென்று செய்தன கூறி, கொணர்ந்த தலைகளைத் துரியோதனன் முன் வைத்தல் 222; துரியோதனன் அவற்றை நோக்கி, 'சிறுவர் முகம்' என்று கூறி, இரங்கி மொழிதல் 224; 'தீவினை நீங்கத் தவம் செய்' என்று அசுவத்தாமனுக்கு விடை அளிக்க, அவனோடு கிருதனும் கிருபனும் போதல் 230; சஞ்சயனிடம் தந்தைக்குச் செய்தி சொல்லி, அவனை அனுப்பிவிட்டு, துரியோதனன் உயிர் நீத்தல் 232; துரியோதனன் பொன்னுலகம் புகுதல் 235; அசுவத்தாமன் முதலிய மூவரும் வியாதரை அடைந்து செய்தி சொல்ல, அவர், கிருபனையும் அசுவத்தாமனையும் தவம் இயற்றக் கூறி, கிருதவன்மாவுக்கு விடைகொடுத்தல் 237; திருதராட்டிரனுக்கும் காந்தாரிக்கும் சஞ்சயன் செய்தி கூற, அவர்கள் இருவரும் சோகத்துள் ஆழ்தல் 239; சூரியன் தோற்றம் செய்ய, பாண்டவர் பாசறை சேர்ந்து, இரவில் நிகழ்ந்தன அறிதல் 242; சீற்றமுற்று எழுந்த வீமனையும் விசயனையும் கண்ணன் தடுத்து, சமாதானம் செய்தல் 244; பின், கண்ணன் திரௌபதியைத் தேற்றுதலும், அவன் உரைப்படி தருமன் இறந்தார்க்கு உரிய கடன்கள் செய்தலும் 248; பின், எல்லோரும் அத்தினபுரி சேர்ந்து, திருதராட்டிரனை வணங்குதல் 249; அத்தினபுரியில் ஐவரையும், 'ஊழி வாழ்திர்' எனக் கண்ணன் இருத்தி, துவாரகைக்கு மீளுதல் 250.

# வில்லி பாரதம்

## 1. குருகுலச் சருக்கம்

கடவுள் வாழ்த்து

ஆக்குமாறு அயனும்; முதல் ஆக்கிய உலகம்
காக்குமாறு செங் கண் நிறை கருணைஅம் கடலாம்;
வீக்குமாறு அரனும்; அவை வீந்த நாள், மீளப்
பூக்கும் மா முதல் எவன்? அவன் பொன் அடி போற்றி! 1

வாழ்த்து

ஏழ் பெருங் கடல் மா நிலம் எங்கும் நல் அறமே
சூழ்க! வண் தமிழ் ஓங்குக! தேங்குக, சுருதி!
வீழ்க, பைம் புயல்! விளங்குக, வளம் கெழு மனு நூல்!
வாழ்க, அன்புடை அடியவர் மன்னு மா தவமே! 2

அவையடக்கம்

கன்ன பாகம் மெய் களிப்பது ஓர் அளப்பு இல் தொல் கதை முன்
சொன்ன பாவலன், துகள் அறு சுகன் திருத் தாதை!
அன்ன பாரதம்தன்னை, ஓர் அறிவிலேன் உரைப்பது
என்ன பாவம்! மற்று என்னை இன்று என் சொலாது, உலகே! 3

மண்ணில் ஆரணம் நிகர் என வியாதனூர் வகுத்த
எண் இலா நெடுங் காதையை யான் அறிந்து இயம்பல்,
விண்ணில் ஆதவன் விளங்கு நீடு எல்லையை, ஊமன்,
கண் இலாதவன், கேட்டலும் காண்டலும் கடுக்கும். 4

முன் சொலாகிய சொல் எலாம் முழுது உணர் முனிவன்-
தன் சொலாகிய மாப் பெருங்காப்பியம்தன்னைத்
தென்சொலால் உரைசெய்தலின், செழுஞ் சுவை இல்லாப்
புன்சொல்ஆயினும், பொறுத்து அருள்புரிவரே, புலவோர். 5

பாடலுற்ற காரணம்

முன்னும் மா மறை முனிவரும், தேவரும், பிறரும்,
பன்னும் மா மொழிப் பாரதப் பெருமையும் பாரேன்;
மன்னும் மாதவன் சரிதமும் இடை இடை வழங்கும்
என்னும் ஆசையால், யானும் ஈது இயம்புதற்கு இசைந்தேன். 6

திங்கள் மரபில் சிறந்தோர் கதை

எங்கள் மாதவன் இதய மா மலர் வரும் உதயத்
திங்கள் மா மரபினில் பிறந்து, இசையுடன் சிறந்தோர்,
அம் கண் மா நிலத்து அரசர் பல் கோடி; அவ் அரசர்-
தங்கள் மாக் கதை, யான் அறி அளவையின், சமைக்கேன். 7

திங்களின் சிறப்பு

பொருந்த வான் உறை நாள்களை நாள்தொறும் புணர்வோன்,
அருந்த வானவர்க்கு ஆர் அமுது அன்புடன் அளிப்போன்,
திருந்து அ(வ்) வானவர்க்கு அரியவன் செஞ் சடை முடிமேல்
இருந்த வானவன்,—பெருமையை யார்கொலோ, இசைப்பார்? 8

மண்டலம் பயில் உரகர் பேர் உயிர்ப்பினுல் மயங்கி,
மண்டு அலம் பொர வருந்திய பெருந் துயர் மாற,
மண்தலம்தனை நிழல் எனும் மரபினுல், தனது
மண்டலம் பொழி அமிழ்தின், மெய் குளிரவே வைத்தோன்; 9

பைம் பொன் மால் வரை மத்தினில் பணி வடம் பிணித்திட்டு,
உம்பர்-ஆனவர் தானவருடன் கடைந்திடவே,
தம்பம் ஆனதும் அன்றி, அத் தழல் விடம் தணிய,
அம்புராசியின் ஆர் அமுதுடன் அவதரித்தோன்; 10

பத்து இரட்டியில் ஈர்-இரண்டு ஒழிந்த பல் கலையோன்;
மித்திரற்கு அவை கொடுத்து முன், மீளவும் கவர்வோன்;
அத்திரிப் பெயர் அந்தணன் அம்பகம்தனிலும்,
சித்திரக் கனல் முகத்தினும், பிறந்து, ஒளி சிறந்தோன். 11

புதன் பிறப்பு

அந்தி ஆரண மந்திரத்து, அன்புடன் இவனை
வந்தியாதவர் மண்ணினும் வானினும் இல்லை.
புந்தியால் உயர் புதன் எனும் புதல்வனை மகிழ்வால்
தந்து, யாவரும் களிப்புற, இருக்கும் நாள்தன்னில், 12

மநு மகன் இளை என்னும் மடவரலாதல்

வளை நெடுஞ் சிலைக் கரத்தினன் மநு அருள் மைந்தன்,
உளை எழும் பரித் தேரினன், உறுவது ஒன்று உணரான்,
விளை அருந் தவ விபினம் உற்று, அம்பிகை விதியால்,
இளை எனும் பெயர் மடவரல் ஆயினன் என்ப. 13

புதனும் இளையும்

மார காகளம் எழுவது ஓர் மது மலர்க் காவில்,
தாரகாபதி புதல்வன் அத் தையலைக் காணு,
வீர காம பாணங்களின் மெலிவுற, மயங்கி,
தீர காமமும் செவ்வியும் மிகும்படி, திளைத்தான். 14

### புரூரவா தோன்றுதல்

புதனும், அந்த மென் பூவையும், புரூரவாவினைத் தம்
சுதன் எனும்படி தோற்றுவித்தனர். அவன் தோன்றி,
இத நலம் பெறும் அழகினும் திறலினும் இலங்கி,
மதனனும் கலை முருகனும் எனும்படி, வளர்ந்தான். 15

### புரூரவா உருப்பசியை மணத்தல்

பொருப்பினைச் சிறகு அரிந்தவன் புரத்து மங்கையருள்
உருப்பசிப் பெயர் ஒண்டொடி, உருவினின் சிறந்தாள்,
தருப் பொழில் பயில் காலையில், தானவர் காண,
விருப்பு உறக் கவர்ந்து ஏகினர், அவளுடன் விசும்பில். 16

கொண்டு போதலும், 'அபயம்!' என்று உருப்பசி கூவ,
அண்டர் யாவரும் அஞ்சினர், அவருடன் அடு போர்.
வண்டு சூழ் குழல் அணங்கை, இம் மதிமகன் மகனும்
கண்டு, தேர் நனி கடவினன், அசுரர் மெய் கலங்க. 17

நிறம் தரும் குழல் அரிவையை நிறுத்தி, வாள் அவுணர்
புறந்தரும்படி புரிந்தபின், புரந்தரன் தூதால்
மறம் தரும் கழல் மன்னவன் மண்மிசை அணைந்து,
சிறந்த அன்பொடு அத் தெரிவையை நலம் பெறச் சேர்ந்தான். 18

### ஆயுவின் பிறப்பு

மாயன் ஊருவின் வந்தருள் அந்த மான் வயிற்றில்
ஆயு என்று ஒரு செம்மலை அம் மகன் அளித்தான்.
தேயுவும் பல தேவரும் மகிழ, மற்று இவனே
மேய வண் புகழ் வேந்தரில் வேள்வியால் மிக்கோன். 19

### ஆயுவின் மகன் நகுடன்

முகுடமும், பெருஞ் சேனையும், தரணியும், முற்றும்
சகுட நீர் எனச் சத மகம் புரி அருந் தவத்தோன்,
நகுடன், நாம வேல் நராதிபன், நாகருக்கு அரசாய்
மகுடம் ஏந்திய குரிசில், ஆயுவின் திரு மைந்தன். 20

### நகுடன் சாபத்தால் நாகமாதல்

புரந்தரன் பதம் பெற்றபின், புலோமசை முயக்கிற்கு
இரந்து, மற்று அவள் ஏவலின் யானம் உற்று ஏறி,
வரம் தரும் குறுமுனி முனி வாய்மையால் மருண்டு,
நிரந்தரம் பெரும் புயங்கம் ஆனவனும், அந் நிருபன். 21

### நகுடன் மகன் யயாதி

மற்று அவன் திரு மைந்தன், வில் மைந்தினுல் உயர்ந்த
கொற்றவன், திறல் கொற்றவைக்கு இரு புயம் கொடுத்தோன்,
முற்ற வன் பகை முகம் கெட முகம்தொறும் திசையில்
செற்றவன், பெருஞ் செற்றம் இல் குணங்களில் சிறந்தோன், 22

யயாதி சுக்கிராசாரியரின் மகள் தேவயானையை மணந்து, இரு குமரரைத் தருதல்

'யயாதி' என்று கொண்டு, இவனையே எவரினும் சிறக்க
வியாதனும் புகழ்ந்து உரைத்தது. மற்று இவன், மேல்நாள்,
புயாசலங்களுக்கு இசையவே, புகரவன் புதல்வி
குயாசலம் தழீஇ, இருவர் வெங் குமரரை அளித்தான். 23

யயாதியும் சன்மிட்டையும்

அன்ன காலையில், இவள்தனது ஆர் உயிர்த் துணையாய்,
முன் இசைந்த பேர் இசைவினால், ஏவலின் முயல்வாள்,
நல் நலம் திகழ் கவிதனக்கு உரைகெழு நண்பாம்
மன்னவன் தரு மடவரல், இவனுழை வந்தாள். 24

ஆழி மன்னன், அவ் அணங்கினை அணங்கு எனக் கண்டு,
பாழி வன் புயம் வலம் துடித்து, உடல் உறப் பரிந்து,
வாழி தன் மனை மடவரல் அறிவுறுவண்ணம்,
யாழினோர் பெரும் புணர்ச்சியின் இதயம் ஒத்து இசைந்தான். 25

சன்மிட்டை பூருவைப் பெறுதல்

சாரும் அன்பினின், கற்பினின், சிறந்த சன்மிட்டை,
சேரும் மைந்தினும், உயர்வினும், தேசினும், சிறந்து,
'மேரு' என்றிட, மேதினி யாவையும் தரிப்பான்,
பூரு என்று ஒரு புண்ணியப் புதல்வனைப் பயந்தாள். 26

தேவயானை சினம்

மருவு இளங் கொடி அனைய மென் மருங்குலாள், பின்னும்
இருவர் மைந்தரைப் பயந்தனள். இறை மனை காணா,
'உரு விளங்கிய உலகுடை நிருபனுக்கு இவள்மேல்
திருவுளம்கொல்?' என்று அழன்று, தன் தாதை இல் சென்றாள். 27

சுக்கிரன் சாபத்தால் யயாதி முதுமை அடைதல்

சென்று, தாதையைப் பணிந்து, இது செப்பலும், சின வேல்
வென்றி மன்னனை விருத்தன் ஆம்வகை அவன் விதித்தான்.
அன்றுதொட்டு இவன் ஐம் முதல் பிணியினால் அழுங்கி,
'இன்று நூறு' என, நரை முதிர் யாக்கையோடு இருந்தான். 28

பூரு தந்தைக்குத் தன் இளமையை ஈதல்

அந்த மன்னவன் மைந்தரை அழைத்து, 'எனக்கு உசனார்
தந்த மூப்பை நீர் கொண்மின், நும் இளமை தந்து' என்ன,
மைந்தர் யாவரும் மறுத்திட, பூரு, மற்று அவன்தன்
இந்த மூப்பினைக் கவர்ந்து, தன் இளமையும் ஈந்தான். 29

### யயாதி பூருவுக்கு இளமையும் அரசும் அளித்தல்

விந்தை, பூமகள், முதலிய மடந்தையர் விரும்ப,
முந்தை மா மணம் யாவையும் பல பகல் முற்றி,
சிந்தை ஆதரம் தணிந்தபின், சிந்தனை இன்றி,
தந்தை, மீளவும் இளமை தன் தனயனுக்கு அளித்தான். 30

இடியும் மாறுகொள் நெடு மொழி யயாதி, அன்று இவற்கே
முடியும், மாலையும், முத்த வெண் கவிகையும், முரசும்,
படியும், யாவையும் வழங்கி, 'எம் பனி மதி மரபிற்கு
அடியும் நீ, இனி' என மகிழ்ந்து, அளியுடன் அளித்தான். 31

### பரதன் தோற்றமும் ஏற்றமும்

விரதம் மிஞ்சிய வேள்வியால் கேள்வியால் மிக்கான்,
சுரத மங்கையர் முலைக் குவடு அணை வரைத் தோளான்,
பரதன் என்று ஒரு பார்த்திவன், பரதமும் இசையும்
சரதம் இன்புற, அக் குலம்தனில் அவதரித்தான். 32

சுர சமூகமும் சுராரிகள் சமூகமும் சூழ,
விரசு பூசலின் வாசவன் நடுங்கி, வெந்நிடு நாள்,
அரசர் யாவரும் அறுமுகக் கடவுள் என்று அயிர்ப்ப,
புரசை நாகம் முன் கடவினன், நாகமும் புரந்தோன். 33

### அத்தியின் பிறப்பும், அத்தினபுரி அமைப்பும்

'முக் குலத்தினும் மதிக் குலம் முதன்மை பெற்றது' என்று,
எக் குலத்தினில் அரசும் வந்து இணை அடி இறைஞ்ச,
மைக் குலத்தினில் புட்கலாவர்த்தமாம் எனவே,
அக் குலத்தினில் அத்தி என்பவன் அவதரித்தான். 34

கொண்டல்வாகனும் குபேரனும் நிகர் எனக் குறித்து,
புண்டரீகன் முன் படைத்த அப் புரவலன் அமைத்தது,
எண் திசாமுகத்து எழுது சீர் இயக்கர் மா நகரும்,
அண்டர் தானமும், உவமை கூர் அத்தினபுரியே. 35

[மீனம் ஆகிய விண்ணவன், விநதை முன் பயந்த
யானமீது எழுந்தருளி வந்து, இரு பதம் வழங்க,
கான நாள் மலர்க் கயத்திடைக் கயமும், வெங் கராமும்,
ஆன மானவர் இருவரும் அக் குலத்தவரே.] 36

### குருவும் குருகுலமும்

பொரு பெரும் படைத் தொழில் வயப் புரவி, தேர், மதமா,
மருவ அருந் தொழில் மன்னர் நீதியின் தொழில், வளம் கூர்
சுருதியின் தொழில், முதலிய தொழில் அனைத்தினுக்கும்
குரு எனும் புகழ்க் குருவும், அக் குலத்தில் அங்குரித்தான். 37

வரு குலத்தவர் எவரையும், வரிசையால், இன்றும்
குருகுலத்தவர் எனும்படி, பேர் இசை கொண்டான்;
இரு குலத்தினும், மாசு அறு தேசினுல், இவனுக்கு
ஒரு குலத்தினும் உரைப்பதற்கு உவமை வேறு உண்டோ? 38

சந்தனு வருகை

அந்த நல் மரபினில், அமுத வெண் திரைச்
சிந்துவின்மிசை வரு திங்கள் ஆம் என,
சந்தனு எனும் பெயர்த் தரணி காவலன்
வந்தனன்; அவன் செயல் வகுத்துக் கூறுவாம்: 39

சந்தனு கங்கையைக் காணுதல்

'வேனிலான் இவன்' என, விளங்கு காலையில்,
கானக வேட்டை போய் இளைத்த காவலன்,
ஆன மென் குளிர் புனல் ஆசையால், மணித்
தூ நிறக் கங்கையாள் சூழல் எய்தினன். 40

மரு வரும் குழல், விழி, வதனம், வார் குழை,
இரு தனம், தோள், கழுத்து, இதழொடு இன் நகை,
புருவம், வண் புறவடி, பொற்ப, பாவையர்
உருவு கொண்டனள், தனது உடைமை தோன்றவே. 41

கங்கையின் வெள்ளம்மேல் கருத்து மாறி, இம்
மங்கைதன் பேர் ஒளி வனப்பின் வெள்ளமே,
தங்கிய சோகமும் தாபமும் கெட,
பங்கய விழிகளால் பருகினன்அரோ. 42

சந்தனுவின் ஐயம்

'வையகமடந்தைகொல்! வரைமடந்தைகொல்!
செய்ய பங்கயமலர்த் திருமடந்தைகொல்!
துய்ய வண் கலைவிதச் சொல்மடந்தைகொல்!'
ஐயமுற்றனன், 'இவள் ஆர்கொல்!' என்னவே. 43

தெளிந்து போற்றுதல்

'கண் இமைத்து, இரு நிலம் காலும் தோய்தலால்,
பெண் இவள் மானுடப் பிறப்பினள்' என
எண்ணம் உற்று, அவள் அருகு எய்தி, 'யாவர் செய்
புண்ணியம் நீ?' எனப் புகழ்ந்து போற்றினன். 44

கங்கை துயரம் நீங்குதல்

போற்றிய குரிசில் மெய் புளகம் எய்தவே,
ஏற்றிய விழியினள், இளகு நெஞ்சினள்,
'சாற்றிய மலர் அயன் சாபம் இவ் வழித்
தோற்றியது' என, உறு துயரம் நீங்கினள். 45

சந்தனு அன்பு கூர்ந்து அவள் எண்ணம் வினாதல்

பொங்கிய மதர் விழிப் புரிவும், ஆதரம்
தங்கிய முகிழ் முலைத் தடமும், நோக்கியே,
'இங்கித முறைமை நன்று' என்று, வேந்தனும்,
அங்கு இதமுடன் அவட்கு அன்பு கூரவே, 46

'கன்னியேயாம் எனில், கடி கொள் பான்மையை;
என்னின் மற்று உயர்ந்தவர் இல்லை, மண்ணின்மேல்;
உன் நினைவு உரை' என உசாவினான்—இகல்
மின் இலை வடி கொள் வேல் வேந்தர் வேந்தனே. 47

கங்கையின் நிபந்தனை

நாணினளாம் என, நதிமடந்தையும்,
பூண் உறு முலைமுகம் பொருந்த நோக்கினள்,
சேண் உறு தனது மெய்த் தேசுபோல் நகை
வாள் நிலவு எழ, சில வாய்மை கூறுவாள்: 48

'இரிந்து மெய்ந் நடுங்கிட, யாது யாது நான்
புரிந்தது, பொறுத்தியேல், புணர்வல் உன் புயம்;
பரிந்து எனை மறுத்தியேல், பரிவொடு அன்று உனைப்
பிரிந்து அகன்றிடுவன், இப் பிறப்பு மாற்றியே. 49

'மெய் தரு விதியினேன் விரதம் மற்று இவை
எய்த அரிது ஒருவரால்; எய்த வல்லையேல்,
கைதருக!' என, பெருங் காதலாளனும்,
'உய்வு அரிது!' என இசைந்து உடன்படுத்தினான். 50

சந்தனு-கங்கை மணவாழ்க்கை

'எனது உயிர், அரசு, வாழ்வு, என்ப யாவையும்
நினது; நின் ஏவலின் நிற்பன் யான்' என,
வனிதையை மருட்டினான்—மன்றல் எண்ணியே,
தனதனும் நிகர் இலாத் தன மகீபனே. 51

அரு மறை முறையினால், அங்கி சான்று என,
திருமணம் புரிந்து, உளம் திகழ வைகினான்—
'இரதியும் மதனனும் அல்லது இல்லை, மற்று
ஒருவரும் உவமை' என்று, உலகு கூறவே. 52

மைந்தனைப் பெற்றுக் கங்கையில் எறிதல்

மருவுறச் சில பகல் மணந்து, 'மான்விழி
கரு உயிர்த்தனள்' எனக் களி கொள் காலையில்,
பருவம் உற்று, அன்புடன் பயந்த மைந்தனைப்
பொரு புனல் புதைத்தனள், புவனம் காணவே. 53

கண்டு உளம் வெருவி, முன் கதித்த வாசகம்
கொண்டு உரையெடுத்திலன், கொண்ட காதலான்;
ஒண்டொடியுடன் மணந்து உருகி வைகினன்,
பண்டையின் எழு மடி பரிவு கூரவே. 54

பின்னும் ஆறு குழந்தைகளை ஆற்றில் எறிதல்

பின்னரும் அறுவரை, பெற்ற தாய், மனம்
முன்னரின் மும் மடி முரண்டு மாய்க்கவே,
மன்னவன் அவற்றினும் வாய் திறந்திலன்,
நல் நகர்ச் சனம் எலாம் நடுநடுங்கவே. 55

கங்கையின் செயல் குறித்து மங்கையர் அழுதல்

'வழு அறு குருகுல மன்னன் மைந்தர் ஓர்
எழுவரை முருக்கினள், ஈன்ற தாய்!' என,
பழுது அறு மகப் பல பயந்த மங்கையர்
அழுதனர், கண் புனல் ஆறு பாயவே. 56

கங்கை எட்டாம் முறை கருக்கொள்ளல்

கங்கை என்று உலகு எலாம் கைதொழத் தகும்
மங்கை, அங்கு அனந்தரம், வயிறு வாய்த்துழி,
வெங் கய கட கரி வேந்தன் மா மனப்
பங்கயம் துறந்தது, பழைய இன்பமே. 57

சந்தனு மைந்தனை எடுத்துக்கொண்டு கங்கையை வேண்டல்

'மதலையைப் பயந்தனள், மடந்தை' என்றலும்,
கதுமெனச் சென்று, தாய் கைப்படாவகை
இதம் உறப் பரிவுடன் எடுத்து, மற்று அவள்
பதயுகத் தாமரை பணிந்து, பேசுவான்: 58

'நிறுத்துக, மரபினை நிலைபெறும்படி!
வெறுத்து எனை முனியினும், வேண்டுமால் இது;
''மறுத்தனன் யான்'' என மனம் செயாது, இனிப்
பொறுத்து அருள்புரிக, இப் புதல்வன்தன்னையே!' 59

கங்கை சந்தனுவைக் கண்டித்தல்

என்று பற்பல மொழி இவன் இயம்பவே,
'நன்று நன்று, அவனிப! நவின்ற வாசகம்!
இன்று நின்று இரங்கினை; எழுவர் மைந்தரைக்
கொன்ற அன்று என் செய்தாய்? கொடியை!' என்னவே, 60

சந்தனு கங்கையின் வரலாறு வினுதல்

அரசனும் உணர்ந்து, 'நீ யார்கொல்? பாலரைத்
திரை செறி புனலிடைச் செற்றது என்கொலாம்?
உரைசெயவேண்டும்' என்று உரைப்ப, வஞ்சியும்
வரிசையின் உயர்ந்த தன் வரவு கூறுவாள்: 61

கங்கை தன் சாப வரலாறு கூறல்

'வால் முக மதியமும், புதிய மாலிகைக்
கான் முக இதழியும், கமழும் கங்கையாள்
தேன் முகம் பொழிதரு செய்ய தாமரை
நான்முகன் பேர் அவை நண்ணினாள்அரோ. 62

'இருங் கலை இமையவர், எதிர் இறைஞ்சுவாள்
மருங்கு, அலை மதியினை மதிக்குமாறுபோல்,
அருங் கலை அயல் உற அதிர்ந்து வீசினான்,
பொருங் கலை எனும் இகல் புரவி வீரனே. 63

'திருத் தகும் அவயவம் திகழ்ந்து தோன்றவே,
கருத்துடன் அவைக்கணோர் கண் புதைக்கவும்,
மருத்தினை மனனுற மகிழ்ந்து, காதல் கூர்
உருத் தகும் உரிமையோடு ஒருவன் நோக்கினான். 64

'நோக்கிய வருணனை, நுவலும் நான்மறை
ஆக்கிய முனி உருத்து அழன்று, ''பார்மகள்
பாக்கியம் என்ன உற்பவிக்க, நீ!' என,
தாக்கிய உரும் எனச் சபித்த காலையே, 65

' ''கோனிடம் நினைவொடு குறுகி, நீயும், நல்
மானிட மடந்தையாய், மணந்து மீள்க!'' என,
வானிடை நதியையும், வழுவினால், அவள்-
தான் இடர் உறும்வகை, தந்தை ஏவினான். 66

கங்கை வழியிடை வசுக்களைக் கண்டமை

' ''பாரினும் நமக்கு ஒரு பதம் உண்டு'' என்று, அவள்
ஈரம் உற்று இழிதரும் எல்லை, வானகத்து
ஓர் இடை, உடன்விழும் உற்கைபோல், முக
வார் ஒளி மழுங்கினர் வசுக்கள் தோன்றினார். 67

' ''என்னை இங்கு இழிந்த ஆறு, எங்கள் மா நதி
அன்னை?'' என்று, அவள் அடி, அவர் வணங்கலும்,
தன்னை அங்கு அயன் இடு சாபம் கூறினாள்.
பின்னை, அங்கு அவரும் தம் பெற்றி பேசுவார்: 68

வசுக்களின் சாப வரலாறு

' உற்று உறை எங்களுள் ஒருவன், தன் மனைப்
பொற்றொடிக்கு அழிந்து, அவள் புன்மை வாய்மையால்,
சற்றும் மெய் உணர்வு அறத் தகாது ஒன்று எண்ணினான்;
மற்று எழுவரும் அவன் வயத்தர் ஆயினேம். 69

'தூநகை மொழிப்படி சோரர் ஆகியே,
வானவர் வணங்கு தாள் வசிட்டன் வாழ் மனைத்
தேனுவை, இரவினில் சென்று, கைக்கொளா,
மீன் நெறி கரந்தென, மீள ஏகினேம். 70

' ''பசுக் கவர்ந்தனர்'' என, பயிலும் மா தவ
முசுக் குலம் அனைய மெய்ம் முனிவர் கூறலும்,
''சிசுக்களின் அறிவு இலாச் சிந்தை செய்தவர்,
வசுக்கள்'' என்று அருந்ததி மகிழ்நன் எண்ணினன். 71

' ''உம் பதம் இழந்து, நீர் உததி மண் உளோர்-
தம் பதம் பெறுக!'' எனச் சாபம் கூறலும்,
''எம் பதம் பெறுவது என்று, இனி?'' என, அவன்
செம் பதம் எமது பூஞ் சென்னி ஏந்தினேம். 72

' அன்புடை முனி முனிவு ஆறி, ''மானுடப்
புன் பிறப்பு எழுவரும் புரிந்து மீளுதிர்;
மின் புரை தெரிவை சொல் விழைந்த நீ, அவண்
இன்பம் அற்று, அநேக நாள் இருத்தி'' என்னவே, 73

' ''விண் வரு செல்வமும், விழைவும், மேன்மையும்,
எண்மரும் இழந்தனம்; என்செய்வேம்!'' என,
மண் வரு தையலை வணங்க, தையலும்,
பண் வரு மொழி சில பகர்ந்து, தேற்றினள்: 74

கங்கை வசுக்களைத் தேற்றினமை

' ''வலத்து உயர் தடம் புய வருணனும் குரு-
குலத்தினில் அயன் வரம்கொண்டு தோன்றுமால்;
நலத்துடன் அவன் மனை நண்ணும் எல்லையில்,
நிலத்திடை என்வயின் நீரும் தோன்றுவீர். 75

' ''அஞ்சன்மின்; உம்மை நான் அவனி தோயும் முன்
எஞ்ச விட்டிடுவன்; இவ் இறைவன் தன்னையும்
நெஞ்சு உறத் தந்தைபால் நிறுத்தி, நானும் அவ்
வஞ்சகப் பிறப்பினை மாற்றுவேன்'' என்றாள். 76

வசுக்கள் கங்கையை வணங்கினமை

'நால்-இரு வசுக்களும் நதிமடந்தை சொல்-
பால் இரு செவிப்பட, படாத நல் தவம்
சால் இரு நிலத்து இழி தாயை, அன்புடன்,
கால் இரு கரத்தினல் கசிந்து, போற்றினர். 77

வருணனும் கங்கையும் மண்ணில் தோன்றினமை

'சதைய மீன் கடவுளும், சசிகுலத்து நல்
விதை என மேதினிமீது தோன்றினன்;
துதை அளி செறி குழல் தோகை ஆயினள்,
இதையம் உற்று உயர் நதி என்னும் மின்னுமே. 78

கங்கையின் வயிற்றில் வசுக்கள் பிறந்தமை

'தவம் உறக் குட திசைத் தலைவன் தாரமாம்
அவள் வயிற்று உதித்தனர், அந்த எண்மரும்;
உவகையின், பெரும! நீ உணர்ந்துகொள்க!' என,
இவள் திருக் கணவனும் இன்ன கூறுவான்: 79

எட்டாம் மகன் தன்மை

'அறப் பயன் என்னுமாறு, அறிவு இலா எமைப்
பிறப்பு உணர்த்தினை, மகப்பேறு செய்து நீ;
இறப்பவர் எழுவரோடு ஏகலா உயர்
சிறப்புடை இனையவன் செய்வது என்?' என்றான். 80

'முக் குலத்து அரசினும் முதன்மையால் உயர்
இக் குலத்து, இவன் அலாது இல்லை மா மகார்;
அக் குலத் தவ முனி அருளினால், இவன்
மெய்க் குலத் தந்தையாம் விழைவும் இல்' என்றாள். 81

மன்னவன் விருப்பம்

மன்னவர் தொழு கழல் மன்னன், 'மைந்தனோடு
இன்னமும் ஒருவனை இனிது அளித்து, நாம்
பன்னக நெடு முடிப் பார் களிக்கவே,
பொன்னகர் இருவரும் போதும்' என்னவே, 82

கங்கையின் அறிவுரை

'போய் இருந்து என் பயன்? போகம் பல்வகை-
ஆய் இருந்தன எலாம் அருந்தி, இன்னமும்
மா இருந் தரணியில் மன்னு சில் பகல்
நீ இருந்து, அரசியல் நிறுத்தி, மீளுவாய். 83

பெற்ற மகனோடு கங்கை பிரிந்து செல்லுதல்

' இப் புதல்வனும் இனி என்னொடு ஏகியே,
மெய்ப் படு காளையாம் பதத்து, மீள நின்
கைப்படுத்துவல்' என, கணவனைத் தழீஇ,
அப் பெரும் புதல்வனோடு அவளும் ஏகினள். 84

காவலன் வருந்தி வைகுதல்

அன்று தொட்டு இவனும் அகன்ற பூங்கொடியை
அழகுற எழுதி முன் வைத்தும்,
ஒன்றுபட்டு உவமைப் பொருள்களால் கண்டும்,
உரைத்தவை எடுத்து எடுத்து உரைத்தும்,
மன்றலில் தலைநாள் விழைவொடும் மணந்த
மடந்தையர் வதனமும் நோக்கான்,
'என்று இனிக் கிடைப்பது?' என்று உளம் வருந்தி,
எண்ணும் நாள் எல்லை ஆண்டு இருந்தான். 85

சந்தனு கங்கைக் கரையை அடைதல்

பின் ஒரு தினத்தில், அமைச்சரும், பிறரும்,
பெரும் படைத் தலைவரும், சூழ;
முன் ஒரு தினத்தின் வனத்து மா வேட்டை
முன்னினன் முயன்று போய், முற்றி;
மின் ஒரு வடிவு கொண்டெனச் சிறந்த
மெல்லியல், மீண்டு உறை மறையும்
தன் ஒரு மதலை, ஆக்கமும் கருதி;
சானவித் தடங் கரை அடைந்தான். 86

பண்டு, தான் அவளை எதிர்ப்படும் கனகப்
பைங் கொடிப் பந்தர் வான் நிழலும்,
வண்டு அரு நறைப் பூஞ்சோலையும், தடமும்,
மருங்கு அலை மலய மாருதமும்
புண்டரீகமும் செங் காவியும் கமழும்
புளினமும், புள் இன மென் துறையும்,
கண்டு, 'காரிகையை இம்மையில் இன்னும்
காண்குமோ!' என, மனம் கசிந்தான். 87

சந்தனு தேவவிரதனைக் கண்டு வியத்தல்

பிரிந்த நாள் எண்ணி, பகீரதிப் பெருக்கைப்
பேதுறும் குறிப்பொடு நோக்கி,
கரிந்த பாதவம்போல் நின்ற அப் பொழுதில்,
கால் பொரக் குனித்த கார்முகமும்,
தெரிந்து மேன்மேலும் தொடுத்த சாயகமும்,
சிலம்பு எனத் திரண்ட தோள் இணையும்,
விரிந்த நூல் மார்பும், ஆகி, முன் நடந்தான்,
விழி களித்திட, ஒரு வீரன். 88

வியந்திட வரும் அக் குரிசிலே, 'இவனே
விடையவன் குமரன்!' என்று அயிர்க்கும்;
'வயந்தனில் உலவும் மதன்கொலோ!' என்னும்;
'வாசவன் மதலே!' என்று எண்ணும்;
'உயர்ந்தவர் இவனின் வின்மையின் இல்லே
ஒருவரும் உலகின்மேல்!' என்னும்;—
பயந்த தன் வடிவின் படி எனத் திகழும்
பான்மையை நினைந்திலன், பயந்தோன்! 89

மகன் கணையால் மன்னன் மயங்கி வீழ்தல்

தந்தை என்று இவனே உணர்கிலா மதியால்,
சராசனம் தழுவுற வளைத்து,
மைந்தனும், ஒரு போர் மோகனக் கணையால்
மறையுடன் மார்பு உற எழுதி,
இந்திர தனுவோடு இந்திரன் எழிலி-
இடை மறைந்தனன் என, புடையே
சிந்திய திவலேச் சிந்துவின் மறைந்தான்;
அரசனும் மகிதலம் சேர்ந்தான். 90

கங்கை காவலனைத் தெளிவித்தல்

காதலன் அயர்வும், திருமகன் புனலில்
கரந்ததும், கண்டு, உளம் உருகி,
மேதகு வடிவு கொண்டு, மற்று அந்த
வெஞ் சிலே விநோதனும் தானும்,
ஓத வெண்திரையின் மதியுடன் உதித்த
ஒண் மலர்க் கொடி என ஓடி,
தூதுளங்கனிவாய் மலர்ந்து, இனிது அழைத்து,
சூடகச் செங் கையால் எடுத்தாள். 91

மகனே மன்னனிடம் கொடுத்துக் கங்கை மறைதல்

வாடிய தருவில் மழை பொழிவதுபோல்
மடவரல் கருணைநீர் பொழிய,
கூடிய உணர்வோடு எழுந்த காவலனேக்
கொங்கை மார்புறத் தழீஇக்கொண்டு,
'நாடிய கருமம் வாய்த்தது!' என்று உவகை
நலம் பெற, தந்தை பைங் கழற் கால்
சூடிய மகவைக் கைக் கொடுத்து, இவளும்
தோன்றலோடு இவை இவை சொன்னள்: 92

'வேந்த! கேள்: இவன் உன் மதலையே; தேவ-
விரதன் என்று இவன் பெயர்; பல்லோர்
ஆய்ந்த நூல் வெள்ளம் கடந்தனன் கரை கண்டு,
அருந்ததிபதி திருவருளால்;
பூந் துழாய் மாலைப் போர் மழுப் படையோன்
பொன்னடி பொலிவுற வணங்கி,
ஏந்து நீள் சிலையும், பல கணை மறையும்,
ஏனைய படைகளும், பயின்ருன். 93

'மகப் பெறுமவரில் ஒருவரும் பெருத
மகிழ்ச்சியும், வாழ்வும், மெய் வலியும்,
மிகப் பெறும் தவம் நீ புரிந்தனை; நின்னை
வேறு இனி வெல்ல வல்லவர் ஆர்?
உகப்புற இவனேடு அவனி ஆளுக!' என்று,
ஓர் அடிக்கு ஓர் அடி புரிந்து,
தகப் பெறு மயிலும், தலைவன்மேல் உள்ளம்
தகைவுற, தடம் புனல் புகுந்தாள். 94

சந்தனு மைந்தனேடு நகரடைதல்

மனைவியைக் கண்டு மீளவும் பிரிந்த
வருத்தம், மெய்த் திருத்தகு கேள்வித்
தனையனைக் கண்ட மகிழ்ச்சியால், அருக்கன்-
தன் எதிர் இருள் எனத் தணப்ப,
நினைவினில் சிறந்த தேர்மிசை, புதனும்
நிறை கலை மதியுமே நிகர்ப்ப,
புனை மணிக் கழலான் அவனெடும் தனது
புரம் எதிர் கைதொழ, புகுந்தான். 95

சந்தனு ஒரு நாள் வேட்டைக்குச் செல்லல்

தானும் அம் மகனும் தரியலர் வணங்கத்
தங்கு நல் நாளில் அங்கு ஒரு நாள்,
தேன் உறும் தொடையல் இளவரசனைத் தன்
திகழ் அரியாசனத்து இருத்தி,
கான் உறு விலங்கின் உயிர் கவர் நசையால்,
காற்று எனக் கூற்று என நடந்து,
பானுவின் மகளாம் காளிந்தி நதியின்
பாரம் எய்தினன், விறல் படையோன். 96

சந்தனு சத்தியவதியைக் கண்டு காதல் கொள்ளல்

பாசறை முழுதும் ஒரு பெருங் கடவுள்
பரிமளம் ஒல்லெனப் பரப்ப,
யோசனை அளவும் கரை இரு மருங்கும்
உயிர்க்கும் மெல் உயிர்ப்பு எதிர் ஓடி,
தாசர்தம் குலத்துக்கு அதிபதி அளித்த
தையலை, தரணிபர்க்கு எல்லாம்
ஈசனும், உருகிக் கண்டு, உளம் களியா,
'இலங்கிழை! யார்கொல் நீ?' என்றான். 97

நிருபனது உரை கேட்டு, அஞ்சினள், ஒதுங்கி
நின்று, கை நினைவு உறக் குவியா,
'இரு துறை நெறியில் வருநரை நாவாய்
ஏற்றுவல், எந்தை ஏவலின்' என்று,
உரைசெயும் அளவில், வேட்கையால் உள்ளம்
உருகி, மெய்ம் மெலிந்து, ஒளி கருகி,
அரிவையை அளித்தோன் பக்கம்-அது அடைந்தான்;
அவனும் வந்து, அடிமலர் பணிந்தான். 98

பாகன் பரதர் தலைவனிடம் மன்னன் கருத்து உரைத்தல்

பாகனை அரசன் குறிப்பினால் ஏவ,
பாகனும் பரதவர் பதியை
ஓகையோடு இருத்தி, 'நின்னுழை வதுவை
உலகுடை நாயகன் நயந்தான்;
தோகை செய் தவமோ, நின் பெருந் தவமோ,
தொல் குலத்தவர் புரி தவமோ,
ஆகும் இவ் வாழ்வு!' என்று உரைத்தனன். அவனும்
ஆகுமாறு அவனுடன் உரைப்பான்: 99

பரதர் தலைவன் மறுமொழி

'பூருவின் மரபில் பிறந்த கோமகன் என்
புன் குல மகள் குயம் பொருந்தல்,
மேருவும் அணுவும் நிறுக்குமாறு ஒக்கும்!
மேல் இனி இவை புகன்று என்கொல்?
பார் உவகையினால் ஆளுதற்கு இருந்தான்
பகீரதி மகன்; இவள் பயந்த
சீருடை மகன் மற்று என் செய்வான்? இசைமின்,
செய்கைதான் திருவுளம் குறித்தே.' 100

சந்தனு வருத்தத்தோடு மீளல்

என்ன முன் இறைஞ்சி, இவன் மொழி கொடுஞ் சொல்
இறையவன் கேட்டலும், இரண்டு
கன்னமும் அழற்கோல் வைத்தது ஒத்து, இதயம்
கருகி, வேறு ஒன்றையும் கழருன்,
'முன்னம் உன்மதத்தால் முனி இடு சாபம்
முடிந்தது!' என்று ஆகுலம் முற்றி,
அன்னமும் குயிலும் பயிலும் நீள் படப்பை
அத்திருபுரியை மீண்டு அடைந்தான். 101

தேவ விரதன் நிகழ்ந்தமை அறிதல்

கங்கையாளிடத்தில் ஆதரம் மெலிந்த
காலையில், களிந்தவெற்பு அளித்த
மங்கையாம் என்ன நின்ற பூங்கொடிமேல்
வைத்த பேர் ஆதரம் மலிய,
பங்கயானனம்தான் முறை முறை குறையும்
பால்மதி என அழகு அழிந்த
சங்கையால், மைந்தன் வினவலும், நிகழ்ந்த
தன்மையைச் சாரதி புகன்ருன். 102

விரதம் கூறி வீடுமன் எனும் பெயர் பெறுதல்

கேட்ட அக் கணத்தில், கடற் புறத்து அரசைக்
கேண்மையோடு அடைந்து, இளவரசும்,
'பாட்டன் நீ எனக்கு; பெற்ற தாய்தானும்
பகீரதி அல்லள்; நின் மகளே;
நாட்டம் இன்று உனக்கு யாது? அது நிலே; இந்த
ஞாலமும் எம்பியர் ஞாலம்;
நீட்டம் அற்று இன்றே திருமணம் நேர்வாய்,
நீதி கூர் நிருபனுக்கு' என்ருன். 103

'விரதம் முற்றியவாறு அனைவரும் கேண்மின்:
மெய் உயிர் வீடும் அன்று அளவும்,
சரதம் முற்றிய மெய்த் தாதுவும் மூலத்
தழலுடன் மீது எழும் தகைத்தே;
''இரதம் முற்றிய சொல் மகப் பெருதவருக்கு
இல்லே'' என்று இயம்பும் நல் கதியும்
சுரதம் முற்றிய என் தந்தைதன் பொருட்டால்
பெறுவல்' என்று, இன்னதும் சொன்னுன். 104

இவன் மொழி நயந்து கேட்டுழி, அவையின்
இருந்த தொல் மனிதரே அன்றி,
தவ முனிவரரும், தேவரும், ககனம்
தங்கும் மா மங்கையர் பலரும்,
உவகையோடு இவனுக்கு ஏற்ற பேர் உரைசெய்து,
ஒளி கெழு பூமழை பொழிந்தார்—
அவனியில் நிருபர் வெருவரும் திறலான்
அரிய சொல் பொருள் நிலை அறிந்தே. 105

மெய்ம் மகிழ் கடவுள் பூமழையுடனே
வீடுமன் எனும் பெயர் எய்தி,
கைம் மகிழ் வரி வில் தாசபூபதியும்,
கன்னிகை காளியும், தானும்,
மொய்ம் மணம் கமழும் மன்றல் வேனிலின்வாய்,
முனிவரும் கிளைஞரும் சூழ,
செய்ம் மகிழ் பழனக் குருநிலம் உடையான்
திருமனை விரைவுடன் சேர்ந்தான். 106

சந்தனு மகனைப் பாராட்டி வரம் அளித்தல்

பரிமள வடிவப் பாவையை அரசன்-
பாலள் என்று ஒருபுடை நிறுத்தி,
இரு பதம் தொழுது நின்ற மா மகனை
இதயமோடு இறுகுறத் தழுவி,
தரு மணம் கமழும் சென்னிமேல் வதனம்
தாழ்ந்து, மோந்து, உருகி, 'முன் தந்தைக்கு
உரிய பேர் இளமை கொடுத்த கோமகனும்
உனக்கு எதிர் அல்லன்' என்று உரைத்தான். 107

'தந்தையர்க்கு உதவும் உதவியின் எனக்குச்
சத மடங்கு உதவினை; உனக்கு
மைந்தருக்கு உதவும் உதவியின் சிறிதும்
மா தவம் செய்திலேன் உதவ;
சிந்தையில் துறக்கம் வேண்டும் என்று எண்ணிச்
செல்லும் அன்று அல்லது, உன் உயிர்மேல்
முந்துறக் காலன் வரப்பெறுன்' என்றே
முடிவு இலா ஒரு வரம் மொழிந்தான். 108

பரதவர் தலைவன் மகளின் வரலாறு கூறல்

அம் புவி அரசன் மாமனும், அரசன்
அடி பணிந்து, அவயவத்து அழகால்
உம்பரும் வியக்கும் கிளியை முன் நிறுத்தி,
ஒடுங்கினன், வாய் புதைத்து, உரைத்தான்:
'எம் பெருமான்! நீ கேட்டருள்: உனக்கே
இசைந்த மெய்த் தவம் புரி இவளை,
வம்பு அவிழ் மலர் மாது என்பதே அன்றி,
வலைஞர் மா மகள் எனக் கருதேல். 109

'வாசவன் அளித்த விமானமீது ஒருவன்,
வசு எனும் சேதி மா மரபோன்,
கேசரன் எனப் போம் விசும்பிடை, மனையாள்
கிரிகையை நினைந்து, உடல் கெழுமி,
நேசமொடு இதயம் உருகும் அக் கணத்தில்,
நினைவு அற விழுந்த வீரியம், மெய்த்
தேசவன் அளித்த நதியிடைத் தரளத்
திரள் எனச் சிந்தியது, ஒருபால். 110

'ஒரு முனி முனிவால், அரமகள் ஒருத்தி,
மீனமாய் உற்பவித்து உழல்வாள்,
இரை என அதனை விழுங்கும்முன் கருக் கொண்டு,
ஈன் முதிர் காலையில், அதனைப்
பரதவர் வலையின் அகப்படுத்து, அரிய,
பாலகன் ஒருவனும் இவளும்,
இருவரும் இந்த மீன் வயிற்று இருந்தார்,
யமுனையும் யமனும் நேர் எனவே. 111

'மானவர் பதியாம் வசுவினுக்கு இவரை
மகிழ்வு உறக் காட்டலும், மகனை,
''மீனவன்'' எனப் பேர் கொடுத்தனன், கொண்டு,
மெல்லியல் இவளை மீண்டு அளித்தான்;
யானும் இன்று அளவும் என் மகள் என்னும்
இயற்கையால் இனிமையின் வளர்த்தேன்;
கான மென் குயில்போல் வந்து, மீளவும், தன்
காவலர் குலத்திடைக் கலந்தாள்.' 112

சந்தனு சத்தியவதியை மணந்து வாழ்தல்

என்று கூறி விடுத்தனன்; ஏந்தலும்,
அன்று அவைக்கண் அவன் மொழி கேட்டு, உவந்து,
'இன்று நல் தினம்' என்று, இளந் தோகையை
மன்றல் எய்தினன், மா நிலம் வாழ்த்தவே. 113

காளி வந்து, கலந்தனள்; கங்கை வேய்த்
தோளியும் புயம் தோய்ந்தனள் முன்னமே;—
வாளி வெம் பரி மா நெடுந் தேருடை
மீளிதானும் விடையவன் ஆதலால். 114

கங்கையின் கரைக் கண்ணுறு காரிகை
கொங்கை இன்பம் குலைந்தபின், மற்று அவள்
எங்கை என்ன யமுனையின்பால் வரும்
மங்கை இன்பம் மகிழ்ந்தனன், மன்னனே. 115

வீடுமன் கழல் வேந்தர் வணங்கிட,
நாடும் நல் நெறி நாளும் நடத்திட,
நீடு மன்னனும் நேரிழைமேல், மலர்த்
தோடு மன்னு சுரும்பு என வீழவே, 116

சத்தியவதி மைந்தர் இருவரைப் பெறுதல்

அன்ன நாளில், அருக்கனும் திங்களும்
என்ன, மைந்தர் இருவரை ஈன்றனள்,
மன்னன் ஆவி வடிவு கொண்டன்ன மெய்க்
கன்னபூரம் கலந்த செங் கண்ணியே. 117

சித்திராங்கதன், செப்பு நலனுடை
மெய்த்த சீர்த்தி விசித்திரவீரியன்,
இத் திறத்தர் இருவரும், தம்முனல்
ஒத்த கல்வியர் ஆயினர், உண்மையே. 118

சந்தனுவுக்குப் பின் சித்திராங்கதன் அரசனாதல்

மதி நெடுங் குல மன்னனை நண்பினால்,
விதி, அனந்தரம், விண்ணுலகு ஏற்றினான்;
நதியின் மைந்தனும், 'நம் புவிக்கு எம்பியே
அதிபன்' என்று, அரியாசனத்து ஏற்றினான். 119

சித்திராங்கதன் கந்தருவனால் கொலையுண்டு இறத்தல்

'எங்கள் நாமம் இவன் கவர்ந்தான்' என,
கங்குல் வந்து ஒரு கந்தருவாதிபன்,
தொங்கல் மா முடி சூடிய வேந்தனை
அம் கையால் மலைந்து, ஆர் உயிர் கொள்ளவே, 120

விசித்திரவீரியன் முடி சூடிப் புவி ஆளுதல்

'எம் முன் அன்றி இறந்தனன்' என்று, தாய்
விம்மு நெஞ்சின் மிகு துனி மாறவே,
தெம் முன் வல்ல விசித்திரவீரனைத்
தம்முன் மீளத் தனி முடி சூட்டினன். 121

சிற்பொருள் பரமான பொருட்கு எதிர்
உற்பவிக்கும் உபாயம்-அது என்னவே,
வில் படைத் திறல் வீடுமன் வாய்மையால்,
பொற்பு உற, புவி பூபதி ஆளும் நாள், 122

காசி மன்னன் மகளிர் சுயம்வரம்

காசி மன்னவன், 'கன்னியர் மூவரும்
தேசின் மிக்கவர்ச் சேர்வர்' என்று ஆள் விட,
மாசு இல் தொல் குல மன்னவர் ஈண்டினர்,
மூசி வண்டுஇனம் மொய்ப்பது போலவே. 123

வீடுமன் தம்பியுடன் சென்று, மணித் தவிசில் வீற்றிருத்தல்

'வரித்த மன்னர் மறம் கெட, வன்பினால்
திரித்தும் எம்பியைச் சேர்த்துவல், யான்' என,
தரித்த வில்லொடும், தன் இளவேந்தொடும்,
விரித்த வெண்குடை வீடுமன் ஏகினன். 124

அரவ மா நதி அன்னையும், தன் மகன்
வரவு அறிந்து, வழி இளைப்பு ஆற்றினள்,—
பரவி வந்து, பனி மலர்த் தென்றலை
விரவு நுண் துளி மீது எறி ஊதையால். 125

கஞ்ச வாவி கலை மதி கண்டென,
நெஞ்சு அழிந்து நிருபர் குழாம் தொழ,
வெஞ் சராசன வீரனும் தம்பியும்,
மஞ்சம் ஏறி, மணித் தவிசு ஏறினர். 126

அது கண்டு, அரச குமாரர்கள் மன வாட்டமுறுதல்

'குருத்தலம்தனில் கூறிய வஞ்சினம்,
ஒருத்தர் அன்று, அறிவார் உலகோர் பலர்;
விருத்தன் வந்தனன்; மேல் இனி ஏது இவன்
கருத்து?' என, மனம் காளையர் கன்றினர். 127

மாலையுடன் நெருங்கிய கன்னியர் வீடுமனது நிலை கண்டு ஐயுறுதல்

இருந்த மன்னர், 'இவர் இவர்' என்று, உளம்
பொருந்த, மற்று அவர் பொற்புடைத் தேசு எலாம்
திருந்த நின்று, செவிலியர் கூறவே,
முருந்த வாள் நகை மூவரும் தோன்றினர். 128

‘கையில் மாலை இவற்கு’ எனக் கன்னியர்
வெய்ய நெஞ்சொடு மின் என வந்தவர்,
வைய மன்னன் வய நிலை நோக்கியே,
ஐயம் உற்றனர், அன்புறு காதலார். 129

வீடுமன் மகளிரைக் கவர்ந்துகொண்டு செல்லுதல்

ஏனை வேந்தர் எதிர், இவரைப் பெருந்
தானை சூழ் மணிச் சந்தனத்து ஏற்றியே,
சோனை மா மதம் சோரும் கட தட
யானை என்ன இளவலொடு ஏகினன். 130

எதிர்ந்த மன்னரை ஓட்டி, வீடுமன் தன் நகரை அடைதல்

‘முறையினுல் அன்றி, மொய்ம்பின் கவர்வது எக்
குறையினுல்?’ என, கோக்குலம் கூடி வந்து,
இறைவனேடு எதிர் ஏற்ற வில் வீரரை,
பிறைமுகக் கணையால் பிளந்து, ஓட்டினன். 131

முந்துறப் பெறும் மூவரொடு, ஆடு அமர்
விந்தைதன்னையும் வேந்தர் கொடுத்தலால்,
சந்தனுப் பெயர்த் தார் முடி மன்னவன்
மைந்தர் தங்கள் வள நகர் மன்னினர். 132

அம்பை விரும்பியபடி அவளைச் சாலுவனிடத்திற்கு வீடுமன் அனுப்புதல்

சமரின் முந்திய சாலுவன்மேல் மனம்
அமர நின்றது அறிந்துழி, அம்பையை,
‘எமர்களுக்கு இஃது இயற்கை அன்று’ என்னவே,
அமர் அழிந்த அவனுழைப் போக்கினன். 133

அம்பிகையையும் அம்பாலிகையையும் விசித்திரவீரியன் மணத்தல்

‘அம்பிகைக்கும் அம்பாலிகைக்கும் பதி
எம்பியே, எழிலால்!’ என்று, இசைவுற,
தம்பிதன்னைத் தனஞ்சயன்தன் எதிர்
வம்பினுல் மிகு மா மணம் சேர்த்தினன். 134

சாலுவன் புறக்கணிக்கவே, அம்பை வீடுமனிடம் வந்து மணம் வேண்ட,
அவன் மறுத்துவிடுதல்

சென்ற அம்பையைத் தீ மதிச் சாலுவன்,
‘வென்று, தெவ்வர் கவர்ந்த நின் மெய் தொடேன்’
என்று இகப்ப, இவனுழை மீளவும்,
மன்றல் வேண்டினள், மன்றல் அம் கோதையாள். 135

கங்கை மைந்தன், கடிமணம், காதல் கூர்
மங்கைதன்னை மறுத்தபின், மங்கையும்
செங் கண் நீர் எழ, சிந்தை செந் தீ எழ,
சங்கையோடு தன் தாதையை நண்ணினள். 136

அம்பை தன் தந்தையைச் சார்ந்து உற்றது உரைக்க, அவன்
தூதுவரை ஏவி வேண்டவும், வீடுமன் மணம் மறுத்தல்

தாதை தாளினில் விழுந்து, சந்தனுவின்
மைந்தன் இன்னல் உரை தந்ததும்,
கோதையால் உறவு கொண்டு கைதரல்
குறித்த கோமகன் மறுத்ததும்,
பேதை கூற, மனம் நொந்து, இரங்கியவன்,
மிக்க நண்பினொடு பின்னையும்,
தூதை ஏவி, மணம் உற்று இரந்தனன்,
விசும்பு உலாவு நதி சுதனையே. 137

போன தூதுவர் வணங்கி, இம் மொழி
புகன்ற போது, மொழி பொய்யுறா,
மீனகேதனனை வென்று, தன் கொடிய
விரதமே புரியும் வீடுமன்,
மான வேல் நிருபன் மகள் குறித்த திரு
மன்றல் வன்பொடு மறுத்தலால்,
ஆன ஆதரவொடு ஆகுலம் பெருக
அம்பை தந்தைதனது அருளினால், 138

தந்தையின் உரைப்படி அம்பை, உதவி வேண்டிப் பரசுராமனைச் சார்தல்

'வரிசையால் உயர் அநேக மண்டல
மகிபர் சொன்ன சொல் மறுக்கினும்,
பரசுராமன் அருள் மொழி மறான்; அவனது
இரு பதத்திடை பணிந்து நீ
உரைசெய்தால், அவன் உரைத்த சொல்லின்வழி
ஒழுகி வந்து, நினை உவகையால்
விரை செய் மாலை புனையாது வீடுமன்
மறுத்து, மீளவும் விளம்புமேல், 139

'பின்னை எண்ணிய பெருந் தவம் புரிதி'
என்று கூறிய பிதாவையும்,
அன்னைதன்னையும், வணங்கி, நீடு சது-
ரந்தயானமிசை அம்புயப்
பொன்னை வென்று ஒளி கொள் சாயலாள், இரு
புறத்து மாதர் பலர் பொலிவுடன்
தன்னை வந்து புடைசூழ, ஏகி, யம-
தங்கி மைந்தன் நகர் சாரவே, 140

'காசிராசன் மகள் என்று வந்தனள் ஓர்
கன்னி' என்று கடை காவலோர்,
வாச நாறு துளவோனுடன் புகல,
'வருக!' என்றபின், மடந்தை போய்,
ஆசினுல் உரைவகுத்து, முன்செயல்
அனைத்தும், அண்ணல் அடி தொழுது, பின்
பேசினுள்; அவனும், 'யாம் முடிக்குவம் இது'
என்று மெய்ம்மையொடு பேசினுன். 141

பரசுராமன் அவளது குறை முடிக்க உடன்பட்டு, அவளுடன்
வீடுமனிடம் வந்து, அவனை மணம்புரியுமாறு உரைத்தல்

வரதன், வீர மழுவால் அநேக குல
மன்னர் வேரற மலைந்த கோன்,
இரதமீது அவளுடன் கணப் பொழுதின்
ஏறி, ஐ-இரு தினத்தினில்,
விரதம் ஆபரணம் என அணிந்த திறல்
வீடுமன் பதியின் மேவலும்,
சரதமாக எதிர்கொண்டு, அவன் சிரம்
இவன் பதத்தினிடை சாத்தினுன். 142

தனக்கு வின்மை நிலையிட்ட கோவை ஒரு
தமனியத் தவிசில் வைத்து, 'நீ
எனக்கு நன்மை தர வந்த நல் தவம்
இருந்தவா!' என, இருந்தபின்,
'கனக்கும் வெண் தரள வட முலைப் பெரிய
கரிய கண்ணி இவள், காதலால்
உனக்கு மன்றல் பெற உரியள் ஆகுக!' என
உவகையோடு அவன் உரைக்கவே, 143

வீடுமன் தன் விரதத்தைக் கூறி, மணம் மறுத்தல்

'இன் சொலால் அவனி கொண்ட எந்தை, முதல்,
இன்ப மன்றல் இனிது எய்த, நான்
வன் சொலால், 'இரத மணம் உறேன்' என
மனத்தினுல் விரதம் மன்னினேன்;
''நின் சொல் யாவரும் மருர்'' எனக் கருதி,
நீ உரைப்பினும், நிகழ்ந்த இப்
புன் சொலானது, இனி மா தவத்தின் மிகு
புனித! என் செவி பொறுக்குமோ? 144

'களம் புகுந்தவரை மீள ஏகுதல்
கொடாத கார்முக விநோத! கேள்:
உளம் புகுந்து இனிது இருக்கும் நல் கடவுள்
உன்னை அன்றி இலை, உண்மையே;
வளம் புனைந்த அநுராக போகம் மிகு
மாதர் மங்கையர் பொருட்டினால்,
விளம்பும் இந்த மொழி ஒழிக! என்தன் உயிர்
வேண்டும்என்னினும் வழங்குவேன்.' 145

வெகுளி பொங்கப் பரசுராமன் போருக்கு எழவே, வீடுமனும்
எதிர் பொருது அவனை வெல்லுதல்

மறுத்து இவன் புகல, வீரியன் புயம் ஓர்
ஆயிரம் துணிசெய் மழுவினான்,
வெறுத்து, அனந்தரம், எழுந்திருந்து, கரை
அழியும் வேலை நிகர் வெகுளியன்,
கறுத்த நெஞ்சினன், வெளுத்த மேனியன்,
உறச் சிவந்த இரு கண்ணினன்,
பொறுத்த வில்லினன், விரைந்து, தேர்மிசை
புகுந்தனன், பெரிது போர் செய்வான். 146

வெருவுடன் தொழுது, கங்கை மைந்தன் அடி
வீழவும், சினம் மிகுத்தலால்,
'உருவுடன் தனி இருக்கும் நீள் விரதம்
வழுவி, நான் நரகம் உறுவதின்,
குருவுடன் பொருது மடிதல் நன்று' என
நினைந்து, தாலம் உயர் கொடியினன்,
செரு உடன்றிடுதல் உன்னி, ஏறினன்,
அமைந்து நின்றது ஒரு தேரின்மேல். 147

அவ் இராமனும், மறுத்த மன்னவனும்,
ஐ-இரண்டு தினம், இகலுடன்,
வெவ் இராவும் ஒழியாது, வெஞ் சமர்
விளைத்த காலை, அடல் வீடுமன்
கை விராய சிலையோடு மெய் வலி
கவர்ந்து, முன் தளர்வு கண்ட போர்
அவ் இராமன் நிகர் என்னுமாறு, இவனை
அஞ்சி நின்று, எதிர் அடர்க்கவே, 148

ஓடி, மீள, மழு மேவு பாணி தனது
ஊர் புகுந்தனன்; உவந்து, பல்
கோடி பேர் அரசர் துதி எடுக்க, நதி-
குமரனும் தன் நகர் குறுகினான்.
நாடி, மாலையிட வந்த காசி பதி
நல்கும் ஒல்கும் இடை நவ்வியும்,
வாடி வாடி, 'இனி அமையும்' என்று, தவ
வனம் அடைந்தனள், மடங்கியே. 149

'வீடுமனை வெல்லும் சூரன் ஆவேன்' என்னும் உறுதியுடன்
அம்பை தவம் இயற்றுதல்

'வெம் பை ஆடு அரவம் மாய வென்றிடு
விகங்கராசன் என, வீடுமன்
தும்பை ஆடு அமரில் மாய வெல்ல வல
சூரன் ஆகுவன் யான்' என,
வம்பை மோது முலை, வம்பை வீசு குழல்,
வம்பை மன்னும் எழில், வரி கொள் கூர்
அம்பை மானும் விழி, அம்பை என்பவளும்
அரிய மா தவம் இயற்றினள். 150

தாள் இரண்டினில் ஓர் தாள் மடக்கி, ஒரு
தாளில் வைத்து, அமை சமைத்த பொன்
தோள் இரண்டினையும் மீது எடுத்து, நனி
தொழுது, இயக்கி துணை அடியிலே
வாள் இரண்டு அனைய விழி மலர்த்தி, நிறை
வாவி நீரினிடை, வான் உளோர்
நாள் இரண்டு-அதனொடு ஐ-இரண்டும் ஒரு
நாள் எனும்படி நடக்கவே, 151

இயக்கியின் அருளால் அம்பை சிகண்டியாதல்

முயல் இலா மதி முகத்தினள், ஒருவர்
முயல் அருந் தவம் முயன்ற பின்,
புயல் இலாத மினல் ஒத்த மெய்யில் ஒளி
புரி இயக்கிதனது அருளினால்,
மயில் அனாள் தனது வடிவு அகற்றி, இகல்
யாகசேனனது வயினிடைச்
செயலில் ஆறுமுகன் நிகர் எனத்தகு
சிகண்டி ஆயினள் சிறக்கவே! 152

விசித்திரவீரியன் விண்ணுலகு அடைதல்

மணி முடிக்கு உரிய நிருபனும், கடி கொள்
மாதர்தங்களை மகிழ்ச்சியால்
அணி பெறத் தழுவி, இன்ப வேலையின்
அழுந்தி, நாள் பல கழிந்தபின்,
பிணிகளுக்கு அரசு எனும் பெரும் பிணி
பிணித்து, 'வாழ்வு இனி நணித்து' என,
பணி முடிப் புவி இரங்க, வைகி, ஒரு
பற்று இலாத நெறி பற்றினன். 153

## 2. சம்பவச் சருக்கம்

வீடுமனிடம் தாய் சத்தியவதி தேவர நீதியில் கொழுந்தியர்க்கு மகவு அளிக்கக் கூறல்

இறந்த மைந்தனுக்கு உரிய, தென்புலத்தவர் யாவரும் களி கூர,
சிறந்த நான்மறை விதியினால், உலகியல் செய்தபின், செழுந் திங்கள்
மறைந்த யாமினி நிகர் எனக் குருகுல மன் மயக்குறும் எல்லை,
அறம் தவாவகை துறந்த வாள் அரசனுக்கு அன்னை, மற்று இது சொன்னாள்: 1

'மைந்த! கேட்டி: நின் துணைவன் வான் அடைந்தபின், 'மதி முதல்' எனத் தக்க
இந்த மா மரபு, அரும் பனிப்பகைச் சிரத்து எழிலி ஒத்தது மன்னோ!
முந்தை நான்மறை முதலிய நூல்களின் முறைமை நீ உணர்கிற்றி;
எந்த நீர்மையின் உய்வது? என்று அறிகிலேன்; இடரினுக்கு இருப்பு ஆனேன். 2

'ஈண்டு தேவர நீதியின் கொழுந்தியர் எழில் மகப் பெற, நின்னால்
வேண்டுமால்; இது, தாயர் சொல் புரிதலின் விரதமும் கெடாது' என்ன,
மூண்டு வான் உருமு எறிந்த பேர் அரவு என முரிந்து, இரு செவி பொத்தி,
'மீண்டு மா நதி வயின்மிசைப் புரியின், என் விரதமும் தபும்' என்றான். 3

'முனிவரால் மகப் பேறு அடைதலே முறை' என வீடுமன் உரைத்தல்

'மழு எனும் படை இராமனால் மனுகுலம் மடிந்துழி, அவர் தம்தம்
பழுது இல் மங்கையர் முனிவரர் அருளினால் பயந்தனர் மகவு என்பர்;
எழுது நல் நெறி முறைமையின் விளைப்பதே இயற்கை' என்று இரு கையால்
தொழுது, சொன்னபின், மனம் தெளிந்து, அன்னையும் தோன்றலுக்கு உரைசெய்வாள்:

சத்தியவதி தனக்குப் பிறந்த முதற் புதல்வன் வியாதனைக் குறித்துக் கூறுதல்

'பருதி தந்த மா நதி மருங்கு, ஒரு பகல், பராசரன் மகப்பேறு
கருதி வந்து, கண்டு, என்னையும் எனது மெய்க் கமழ் புலவையும் மாற்றி,
சுருதி வாய்மையின் யோசனைப் பரப்பு எழு சுகந்தமும் எனக்கு ஈந்து,
''வருதி நீ'' எனப் பனியினால் மறைத்து, ஒரு வண் துறைக் குறை சேர்ந்தான். 5

'முரண் நிறைந்த மெய்க் கேள்வியோன் அருளினால் முஞ்சியும், புரி நூலும்,
இரணியம் செழுங் கொழுந்து விட்டனவென இலங்கு வேணியும், தானும்,
தரணி எங்கணும் வியாதன் என்று உரை செழு தபோதன முனி அப்போது
அரணியின் புறத்து அனல் என, என்வயின் அவதரித்தனன் அம்மா! 6

'சென்னியால் எனை வணங்கி, ''யாதொரு பகல் சிந்தி; நீ சிந்திக்கும்
முன், யான் அருகு உறுவல்'' என்று உரைசெய, முனிமகன்; முனி, ''மீளக்
கன்னி ஆக'' என விதித்து, உடன் கரந்தனன்; கையறு கனிட்டன் தன்
பன்னியானவரிடத்தினில் அவன் வரின், பலித்திடும் நினைவு அன்றே, 7

வீடுமன் ஒருப்பட, சத்தியவதி வியாதனைச் சிந்தித்து, வரச் செய்தல்

'எனக்கு, மைந்த! கேள்: நினைவு இது; உன் துணைவன் என் ஏவலும் மறான்; இவ்வாறு
உனக்கு நெஞ்சு உற வருங்கொலோ அறிகிலேன்; உண்மை நீ உரை' என்ன,
'மனக்கு இசைந்தது' என்று, அவன் வியந்து ஏகலும், வழு அற மனம் செய்ய,
கனக் கருங்குழல் மகிழ்வுற, முதல் பெறு காதல் மைந்தனும் வந்தான். 8

வந்த வியாதனிடம், 'குருகுலத்திற்கு மகவு அருள்' என, அவனும் இசைதல்

தொழுது, நெற்றியில் விபூதியால் அன்னைதன் துணை அடித் துகள் நீக்கி,
விழுதுடைத் தனி ஆல் என இருந்த தொல் வியாதனை முகம் நோக்கி,
'பழுது பட்டது, இக் குருகுலம்; மீள நின் பார்வையால், கடல் ஞாலம்
முழுதும் உய்த்திடும் மகவு அருள்' என, பெரு முனியும் அக் குறை நேர்ந்தான். 9

அம்பிகையும் அம்பாலிகையும் மகப் பெறுதல்

அழைத்த மா மகன், அப்பொழுது, 'அவருழை அணுகுவம்' எனப் போக,
தழைத்த நெஞ்சினள், அனந்தரம், இழந்த பொன்-தாலி மாதரைத் தேற்றி,
உழைத்த துன்பமும், முன் உளோர் பலர் உலகியற்கையும், உறக் காட்டி,
இழைத்த பாவையின் இருந்தவர்க்கு அந் நினைவு இசையுமாறு இசைவித்தாள். 10

கனையும் நீடு இருள், அணைமிசை, இருவரும் கணவனை மறவாது
நினையும் நெஞ்சினர், பயின்றுழி, புல்மணம் நிறைந்து, ஒளி குறைந்து ஒல்கப்
புனையும் மெய்யொடும், பொழுதொடும், புரி தவன் போதலும், மிக அஞ்சி,
அனைய காலையில், அம்பிகை மலர்ந்திலள், அம்பகம் ஒருக்காலும். 11

பராசரன் தரு முனி நினைவொடு கருப் பதித்து, மீளவும் சென்று,
நிராசை நெஞ்சினன், 'அவசரத்து அவளிடை நிகழ்ந்த மெய்க் குறிதன்னால்,
கராசலம் பதினாயிரம் பெறு வலி காயம் ஒன்றினில் பெற்று, ஓர்
இராச குஞ்சரம் பிறந்திடும்; விழிப்புலன் இல்லை மற்று அதற்கு' என்றான். 12

மீளவும், தலைப்புதல்வனை நோக்கியே, மிக மகிழ்வு உறா அன்னை,
'தூள வண் சடைத் தோன்றல்! அம்பாலிகை சுதன் ஒருவனை நல்க;
நாள பங்கயப் பதி என, மதி என நலம் திகழ் கவிகைக் கீழ்
ஆள அம் புவி அவன் என நினைந்து, இனி அளிக்க' என்று, அருள்செய்தாள். 13

கிளைத்திடும் துகிர்க் கொடி நிகர் சடையவன் கேட்டு, நுண் இடையேபோல்
இளைத்திடும் கவின் மெய் உடையவள் மனை எய்தலும், இவனைக் கண்டு,
உளைத்திடும் கருத்துடன் வெரீஇ, வரு பயன் ஒன்றையும் நினையாது,
விளைத்திடும் கரு விளையும் முன், மடவரல் மெய் எலாம் விளர்த்திட்டாள். 14

அருந் தபோநிதி அவளிடத்தினும் கரு அருளி, அக் கணத்து ஏகி,
இருந்தவாறு தன் அன்னையோடு இனிது உரைத்து, இமையவன் எனச் சென்றான்—
'பெருந் தராதலம் திறலினால் ஒரு தனி பெறும் முறையவன், பெற்ற
முருந்த வாணகை மருட்சியால், விளர்த்திடும் முழுவதும் உடல்' என்றே. 15

குருடனாகப் பிறந்த திருதராட்டிரனையும், உடல் விளர்த்துப் பிறந்த
பாண்டுவையும் சத்தியவதி காணுதல்

வேதபுங்கவன் அகன்றுழி, வலியுடை விழி இல் மைந்தனும், யாரும்
பாதபங்கயம் தொழத் தகும் திறலுடைப் பாண்டு என்பவன்தானும்,
பூதலம் பெருங் களிப்புற, குருகுலம் பொற்புற, பொழுது உற்றுச்
சாதர் ஆயினர்; அவ் இரு மகவையும் சத்தியவதி கண்டாள். 16

உவகை அற்ற சத்தியவதி மீண்டும் வியாதனை அழைத்து மகவு அருளவேண்டுதலும்,
அம்பிகையிடம் வியாதன் செல்ல, அவள் தனது தோழியை அனுப்புதலும்

காணலும் பெரிது உவகை அற்று, 'இன்னமும் கருதுதும்' என எண்ண,
சேண் அடைந்த மா முனிவரன் வருதலும், சிந்தனை உறச் சொல்ல,
நாண் நலம் திகழ் அம்பிகையிடத்து இவன் நண்ணலும், அவள் அஞ்சி,
பூண் நலம் பெறு தோழி மற்று ஒருத்தியைப் பூ அணை அணைவித்தாள்.

விதுரன் பிறத்தல்

வந்த காலையில் மனம் கலந்து, அநங்க நூல் மரபின் மெய் உறத் தோய்ந்து,
சந்தனக்கருப் பரிமளத் தன தடம் தயங்கு மார்பினில் மூழ்க,
இந்திராதிபர் போகம் உற்று இசைதலும், இன்பம் முற்றிய பின்னர்,
அந்தணாளன் அவ் இரவிடை மீள வந்து, அன்னையோடு உரைசெய்வான்: 18

'அம்பிகைக்கொடி தோழியை விடுத்தனள்; அவள் புரி தவம்தன்னால்,
உம்பரில் பெறு வரத்தினால், தருமன் வந்து உதித்திடும் பதம் பெற்றாள்;
வெம் படைத் தொழில் விதுரன் என்று அவன் பெயர்; மேல் இனி மகவு ஆசை
எம் புணர்ப்பினான் ஒழிக!' என, வன நெறி ஏகினன், விடை கொண்டே. 19

மூன்று புதல்வர்களும் கலை பல பயில்தல்

மரு வரும் குழல் தாசி பெற்றெடுத்த இம் மைந்தனும், முதல் பெற்ற
இருவரும், குருகுலப் பெருங் கிரிமிசை இலங்கு முக் குவடு என்ன,
பொரு அருந் திறல் படைகளும், களிறு தேர் புரவியும், புவி வேந்தர்
வெருவரும்படி பல கலைவிதங்களும், வீடுமனிடம் கற்றார். 20

திருதராட்டிரனுக்கு வீடுமன் முடி சூட்டுதல்

ஆன திக்கு இரு-நாலும் வந்து அடி தொழ, அம்பிகை மகன்தன்னை,
வான்நதித் திருமகன், ஒரு தினத்தினில் மங்கல முடி சூட்டி,
'பால் நிறத் திறல் பாண்டுவே சேனையின் பதி; முழு மதி மிக்க
கான் நிறத் தொடை விதுரனே அமைச்சன், இக் காவலற்கு' என வைத்தான். 21

காந்தாரியைத் திருதராட்டிரன் மணத்தல்

நதிஅளித்தவன் ஏவலின், தூதர் போய் நயந்து, உடன், 'காந்தார
பதி அளித்த மெய்க் கன்னியைத் தருக, பூபதிக்கு' என, மணம் நேர்ந்தார்;
'மதி அளித்த தொல் குலத்தவன், விழி இலா மகன்' எனத் தமர் சொல்ல,
'விதி அளித்தது' என்று, உளம் மகிழ்ந்தனள், வடமீன் எனத் தகும் கற்பாள்.

'இமைத்த கண் இணை மலர்ந்து, இனி நோக்கிலேன் யான் ஒருவரை' என்று,
சமைத்த பட்டம் ஒன்றினில் பொதி பெதும்பையைத் தந்தையும், தனையோரும்,
அமைத்து, அருங் குல முனிவரும், மறை முறை அருங் கடி விளைத்திட்டார்;
சுமைத் தராபதி மதி, இவள் உரோகிணி என்னவே தொழத் தக்காள். 23

## குந்தியின் சரிதை

சூரன் மகளாகிய இவள் குந்திபோசர் இல்லத்தில் வளர்தல்

'புந்தியால் அருங் கலைமகள், பொற்பினுல் பூந் திரு, புனை கற்பால்
அந்திவாய் அருந்ததி, பெரும் பொறையினுல் அவனிமான், நிகர்' என்ன,
குந்திபோசர் இல், சூரன் என்பவன் மகள் குருகுலம் தழைத்து ஓங்க,
வந்து, யாவரும் 'பிரதை' என்று அடி தொழ, மதி என வளர்கின்ருள்.

குந்தி துருவாசருக்குத் தொண்டு செய்து, மந்திரம் பெறுதல்

அந்த மாது இள மட மயில் என விளையாடும் எல்லையில், என்றும்
முந்த மா தவம் புரி துருவாச மா முனியும் அவ் வழி வந்தான்;
வந்த மா தவன் அடி பணிந்து, 'இவனை நீ வழிபடுக!' என, தந்தை,
இந்த மா தவன் மொழிப்படி புரிந்து குற்றேவலின் வழி நின்ருள். 25

கழங்கு கந்துகம் அம்மனை ஆடலும், கனக மென் கொடி ஊசல்,
வழங்கு தண் புனல், ஆடலும், துறை வரி வண்டல் ஆடலும், மாறி
முழங்கு சங்கினம் தவழ்தரு பனி நிலா முன்றிலும், செய்குன்றும்,
தழங்கு செஞ் சுரும்பு எழு மலர்ச் சோலையும், தனித்தனி மறந்திட்டாள்.

தொழுது, தாளினைச் செய்ய பஞ்சு எழுதினும், தோளினைச் செழுந் தொய்யில்
எழுதினும், பொரு இளமையள், முநுக்குறைந்து, யாது யாது உரைசெய்தான்,
முழுது நெஞ்சு உறு கோபமே மிக மிகும் முனிவரன் மகிழ்வு எய்த,
பழுது இல் அன்புடன் இயற்றினள், ஒன்றுபோல் பன்னிரு மதி சேர.

பிரதைதன்னை அத் தபோநிதி, 'வருக!' என, பெரிது உவந்து, 'எனது ஏவல்
அரிது எனுது நீ இயற்றினை; நெடுங் கடல் அவனிமேல் யார் வல்லார்?
தெரிவை, கேள்!' எனச் செவிப்படுத்து, ஒரு மறை, 'தேவரில் யார் யாரைக்
கருதி, நீ வர அழைத்தனை; அவர் அவர் கணத்து நின் கரம் சேர்வார்;

'தம்மை ஒப்பது ஓர் மகவையும் தருகுவர்; தவப்பயன் எனப்பெற்ற
இம் மறைப் பயன் இம்மையில் உனக்கு வந்து எய்தியது' எனக் கூறி,
அம் முனிப் பெருங் கடவுளும் தபோவனம் அடைந்தனன்; அவளும் தன்
செம் மனத்தொடு பயின்று, அரமகள் என, செல்வ மா மனை சேர்ந்தாள்.

மந்திர பலத்தைக் குந்தி பரீட்சித்தல்

ததையும் வண்டு இமிர் கருங் குழற் கன்னி அத் தனி மறைப் பயன் காண்பான்,
சுதை நிலா எழு மாளிகைத் தலத்திடை, தூ நிலா எழு முன்றில்,
இதைய மா மலர் களிக்க நின்று, அன்பினேடு இயம்பலும் எதிர் ஓடி,
உதைய பானுவும், மலர்மிசை அளி என, ஒரு கணந்தனில் வந்தான்.

சூரியன் வரவும், குந்தியின் அச்சமும்

செம் பொன் ஆடையும், கவச குண்டலங்களும், திகழ் மணி முடி, ஆரம்,
பைம் பொன் அங்கதம் புனை அவயவங்களும், பவள மேனியும், ஆகி,
வம்பு அறாத மெய்ப் பதுமினி என, செழு மறை நுவல் மடப் பாவை
அம்புயானனம் மலர்வுறக் கரங்களால் அணைத்தனன், அழகு எய்த.

'கன்னி, கன்னி; என் கை தொடேல்; மடந்தையர் கற்பு நீ அறிகிற்றி!'
என்ன மெய் குலைந்து, அலமர, நாணினாள்; இதயமும் வேறு ஆகி
அன்ன மென்னடை அஞ்சினள் அரற்றலும், அருகு உறான், விடப்போய் நின்று,
'உன்னி என்னை நீ அழைத்தது என்பெற?' என உருத்தனன், உரைசெய்வான்:

சூரியன் இதவுரை கூறி, குந்தியை அணைதல்

'உருக் கொள் சாயையும் உழையும் அங்கு அறிவுறாது, ஒளித்து நான் வரவே, நீ
வெருக் கொளா எனை மறுத்தனை; உனக்கு முன் மெய்ம் மறை உரைசெய்த
குருக்கள் என்படான்? என்படாது அரிவை நின் குலம்?' என, கொடித் திண் தேர்
அருக்கன் மெய்யினும் மனம் மிகக் கொதித்தனன், ஆயிரம் மடங்காக. 33

'உனை அளித்தவன் முனியும் என்று அஞ்சல் நீ; உடன்படும் உணர்வால். ''நல்
வினை அளித்தது'' என்று அணைதியேல், இன்பமும் விழைவுறும்படி துய்த்தி;
எனை அளித்த தொல் அதிதியின் உனக்கு இசை எய்துமாறு இகல் மைந்தன்-
தனை அளித்தி; மற்று என்னினும் இரு நிலம் தாள் தொழத் தக்கோனே.' 34

ஆயிரம் கரத்து அதிபதி புகழ்ந்து, நூறு ஆயிரம் முகமாகப்
போய் இரந்து, இவை உரைத்தபின், மதர் விழிப் புரிவும் மூரலும் நல்கி,
வேய் இருந் தடந் தோள் இடம் துடித்திட, மெல்லியல், 'மதன் வேதப்
பாயிரம்கொல்!' என்று ஐயுற, அவனொடும் பனி மலர் அணை சேர்ந்தாள். 35

தினகரன் சுடர் வடிவமும் அமிர்து எழு திங்களின் வடிவாக,
தன தடம் திருமார்பு உறத் தழீஇயபின், தையல் தன் நினைவு எய்த,
மனம் மகிழ்ந்ததும், வந்ததும், மணந்ததும், வரம் கொடுத்ததும், எல்லாம்
கனவு எனும்படி, கரந்தனன் பெருந்தகை; கன்னியும் கருக் கொண்டாள். 36

பெற்ற மகனைக் குந்தி பெட்டியில் பொதிந்து கங்கையில் விடுதல்

அந்தி ஆர் அழல் எனப் பரிதியின் ஒளி அடைந்த பின், அணி மாடக்
குந்திபோசன் மா மட மகள் எழில் நலம் கொண்ட கொள்கையள் ஆகி,
இந்திராதிபர் அவர் அவர் முகம் மலர்ந்து இரந்தன தரத் தக்க,
மைந்தனானவன் ஒருவனைப் பயந்தனள், மாசு இலா மணி என்ன. 37

சூரன் மா மகள், சூரனது அருளினால், துலங்கு கன்னிகை ஆகி,
வார மா மணிக் கவச குண்டலத்துடன் வரும் மகன் முகம் நோக்கி,
பார மா மரபினில் பிறந்தவர் மொழிப் பழுதினுக்கு அழுது, அஞ்சி,
பூர மா நதி, பேடகத்திடை நனி பொதிந்து, ஒழுக்கினள் மன்னோ. 38

கன்னனைச் சூதபுங்கவன் கண்டு எடுத்து, வளர்த்தல்

குஞ்சரத்து இளங் கன்று என, சாப வெங் கோளரி என, பைம் பொன்
பஞ்சரத்திடை வரு திரு மதலையைப் பகீரதி எனும் அன்னை,
அம் சரத் திரைக் கரங்களால் எடுத்து எடுத்து, அசையவே தாலாட்டி,
வெஞ் சரச் சிலைச் சூதநாயகன் பதி மேவுவித்தனள் அன்றே. 39

கோடு அகப்பட வரும் புனல் விழைவினுல், குளிர் துறை மருங்கு உற்ருேர்,
பேடகத்திடை ஒழுகிய தினபதி பெருங் குமரனைக் கண்டு,
சூடகக் கை அம்புய மலர் இராதையும், சூத புங்கவன்தானும்,
ஆடகக் குலம் அடைந்தது ஒந்து, அரும் பெறல் ஆதரத்தொடு கொண்டார். 40

பரசுராமனிடம் கன்னன் கல்வி பெற்றுத் திகழ்தல்

அதிரதன் திருமனையினில் விழைவுடன் அரும்பிய பனிக் கற்றை
மதி எனும்படி வளர்ந்து, திண் திறல் புனை மழுவுடை வர ராமன்
பதயுகம் தொழூஉ, வரி சிலை முதலிய பல படைகளும் கற்று,
'கதிரவன் தரு கன்னன்' என்று, உலகு எலாம் கைதொழும் கவின் பெற்ருன். 41

குந்தியின் சுயம்வரம்

கன்னற் பயந்த கதிர் வெம் முலைக் கன்னிதன்னை
முன்னர்ப் பயந்தோன் முகவோலை உவகையோடு
மன்னர்க்கு எழுத, 'மடப் பாவை வரிக்கும்' என்று,
செல் நல் படை வேல் முடி மன்னவர் சென்று சேர்ந்தார். 42

பாண்டுவுக்குக் குந்தி மாலையிடுதல்

உருவம் சிறந்து, பல கோளும் உதிக்குமேனும்,
மருவும் குமுதம் மதி கண்டு மலருமாபோல்,
பருவம் செய் பைம் பொன் கொடி அன்னவள் பாண்டு என்னும்
நிருபன்தனக்கே மணம் கூர் பெரு நேயம் உற்ருள். 43

மத்திர ராசன் கொடுக்க, அவன் புதல்வி மாத்திரியையும் பாண்டு மணத்தல்

தானே உவந்து, தனித் தார் புனை தையல், வென்றி
ஆன் ஏறு அனையான் உயிர்க்கு ஆர் அமிர்து ஆன பின்னர்,
'யானே தருவன்' என, மத்திர ராசன் நல்க,
மானே அனைய விழியாளை வதுவைசெய்தான். 44

இருமனைவியருடன் பாண்டு இமயமலைப் பக்கம் கானில் விளையாடச் செல்லுதல்

எண் உற்ற சூரன், இகல் மத்திர ராசன், என்ன
மண் உற்ற சீர்த்தி வய மன்னர் மகளிரோடும்
கண் உற்ற கானில் விளையாடல் கருதி, அம் பொன்
விண் உற்ற சாரல் இமயப் புறம் மேவினனே. 45

பாண்டு வேட்டையாடி இளைப்பாறுதல்

கானத்தில் உள்ள கலைமான்இனம், காட்சி ஆமா,
ஏனத் திரள், வெம் புலி, எண்குடன், யாளி, சிங்கம்,
தானப் பகடு, முதலாய சனங்கள் எல்லாம்
மானச் சரத்தால் கொலைசெய்தனன், வாகை வில்லான். 46

மெய்யில் தெறித்த குருதித் துளி மேருவில்லி
சையத்து அலர்ந்த கமழ் குங்குமத் தாது மான,
கையில் சிலேயோடு உலவும் கழல் காளே கேதம்,
பையத் தணித்தான், இமநாக பவனன் என்பான். 47

மான் உருக்கொண்டு போகம் துய்த்த முனிவன்மேல் பாண்டு அம்பு எய்து, சாபம் பெறுதல்

பொன் அம் கழலான் எதிர், அவ் இடை, போகம் வேட்டு,
மன்னும் கலேயும் பிணேமானும் மகிழ்ச்சி கூர,
மின்னும் கணேயால் இவன் எய்திட வீழ்ந்த போதில்,
முன் நின்றது, அந்த உயிர், வந்து ஓர் முனிவன் ஆகி. 48

'நாரிக்கு ஒரு கூறு அரனுர், முதல், நல்க, எய்த
வேரிக் கணேயால் மிக நொந்துழி, வேடம் மாறி,
பூரித்த காமநலம் எய்து பொழுது, நின் கைச்
சோரிக் கணேயால் அறையுண்டு உயிர் சோர்ந்து வீழ்ந்தேன். 49

'என் போல இன்பத்திடை நீயும் இறத்தி!' என்று,
அன்போடு இறந்தான், முதல் கிந்தமன் ஆன பேரோன்;
தன்போல் மகிழ்நனுடனே செந்தழலின் எய்தி,
பின் போயினள், மென் பிணே ஆன அப் பேதைதானும். 50

மனேவியருடன் பாண்டு தபோவனம் சென்று, தவம் செய்தல்

நினேவு அற்ற சாப நிலே பெற்ற பின், நெஞ்சின் வேறு ஓர்
இனேவு அற்று, 'நன்மை இதுவே இனி' என்று தேறி,
மனே வைத்த காதல் மடவாருடன், மன்றல் வேந்தன்,
முனே வைத்த வாய்மை முனிக் கானம் முயன்று சேர்ந்தான். 51

பாண்டுவின் தவ நிலே

காண்டற்கு அரிய மணிப் பைம் பொற் கலனெடு, ஆடை,
வேண்டற்கு அரிய விடயங்களின் வேடம் மாற்றி,
தீண்டற்கு அரிய திருமேனியன், தேவராலும்
பூண்டற்கு அரிய பெரு மா தவம் பூண்டுகொண்டான். 52

உற்றுப் புறத்துப் பகை ஆடி உடன்ற எல்லாம்
செற்று, புவியில் தனி ஆழி செலுத்து நீரான்,
பற்று அற்ற யோகப் படையால், உட்பகைகள் ஆறும்
முற்றத் துறந்து, பெரு ஞான முதல்வன் ஆனுன். 53

ஆரக் குழம்பில் அளேந்து, ஆரம் அணிந்து, விம்மும்
பாரக் குசங்கள் பல தைவரும் பான்மை நீங்கி,
நாரக் கமல கர சோதி நகங்கள், மீள,
ஈரக் குசங்கள் கிழிக்கும் தொழிற்கு ஏற்றவாலோ! 54

நாமக் கலவி நலம் கூர நயந்து, நாளும்
காமக் கனலை வளர்க்கின்ற கருத்து மாற்றி,
தாமக் குழலார் இருவோரொடு தானும் ஒன்றி,
ஓமக் கனலே வளர்த்தான், உணர்வு உண்மை கண்டான். 55

இவ்வாறு அரிய தவம் நாள்தொறும் ஏறும் எல்லை,
கை வாள் ஒழிந்து, சமித்து ஏந்திய காவல் மன்னன்,
மை வாள் நெடுங் கண் வர சூரன் மகளை நோக்கி,
செவ் வாய் மலர்வான், புவிமேல் உறை தெய்வம் அன்னான்: 56

பாண்டு குந்திக்கு மகப் பேற்றின் சிறப்பை எடுத்துரைத்தல்

'பூந் தார் வியாதமுனி தாள் இணை போற்றி, அன்பு
கூர்ந்து, ஆர்வம் முற்றி, அவன்பால் வரம் கோடல் எய்தி,
காந்தாரி நூறு மகவு ஆன கருப்பம் ஒன்று,
வேந்து ஆதரிக்கத் தரித்தாள், வடமீனொடு ஒப்பாள். 57

'கல்லா மழலைக் கனி ஊறல் கலந்து கொஞ்சும்
சொல்லால் உருக்கி, அழுது ஓடி, தொடர்ந்து பற்றி,
மல் ஆர் புயத்தில் விளையாடும் மகிழ்ச்சி மைந்தர்
இல்லாதவர்க்கு, மனைவாழ்வின் இனிமை என் ஆம்? 58

'மெய், தானம், வண்மை, விரதம், தழல் வேள்வி, நாளும்
செய்தாலும், ஞாலத்தவர் நற்கதி சென்று சேரார்;
மை தாழ் தடங் கண் மகவின் முகம் மன்னு பார்வை
எய்தாது ஒழியின், பெறும் இன்பம் இவணும் இல்லை. 59

'புத்திரப் பேற்றை நீ உண்டாக்கி அருள்' என்ற பாண்டுவின் கூற்றைக்
குந்தி மறுத்து மொழிதல்

'மென் பாலகரைப் பயவாதவர், மெய்ம்மையாகத்
தென்பாலவர்தம் பசித்தீ நனி தீர்க்கமாட்டார்;
என்பால் நிகழ்ந்த வினையால் இடர் எய்தி நின்றேன்;
நின்பால் அருள் உண்டுஎனின் உய்வன், நெடுங் கண் நல்லாய்! 60

'இல்வாழ்பவர்க்கு மடவார் அலது யாவர், இன்ப
நல் வாழ்வு, தேசு, புகழ், யாவும் நடத்துகிற்பார்?
தொல் வானவரின், மறையோரின், துறக்க பூமி
செல்வார் பெறும் பேறு இனி நீ அருள்செய்தி' என்றான். 61

பொற்பாவை, கேள்வன் மொழி கேட்டலும், பொன்ற நாணி,
'சொற்பால அல்லாப் பழி கூர் உரை சொல்வது என்னே?
வெற்பு ஆர் நதிகள் சிறு புன் குழி மேவின் அன்றோ,
இற்பாலவர்க்குப் பிறர்மேல் மனம் ஏற்பது?' என்றாள். 62

பின்னும் பாண்டு வற்புறுத்த, குந்தி தான் கன்னிகையாய் இருந்தபோது பெற்ற மந்திரத்தைப் பற்றி உரைத்தல்

பின்னும் பலகால் வருட்டி, பிறர் பெற்றி காட்டி,
மன்னன் புகல, மட மாது மறுக்கமாட்டாள்,
கன்னன் பிறந்தது ஒழிய, செழுங் கன்னி ஆகி,
முன்னம் பெறு மா மறை மேன்மை மொழிந்திட்டாளே. 63

பாண்டு உடன்பட, குந்தி தருமராசன் அருளால் உதிட்டிரனைப் பெறுதல்

மரு மாலை வல்லி உரை கேட்டு, மகிழ்ச்சி கூரும்
பெரு மா தவத்தோன் பணித்து ஏவிய பின்னர், முன்னர்த்
தருமாதிபனைக் கருத்தால் மடத் தையல் உன்னி,
அரு மா மறையால் அழைத்தாள்; மற்று அவனும் வந்தான். 64

வந்தித்த தெய்வம் எதிர் வந்துழி, மன்னு கேள்வற்
சிந்தித்த சிந்தையினளாய், மலர்ச் சேக்கை சேர்ந்து,
குந்தித் தெரிவை, நிறை மா மதிக் கூட்டம் உற்ற
அந்தித் தெரிவை நிகர் என்ன, அழகின் மிக்காள். 65

சிவம் உற, முகூர்த்தம், வாரம், தினம், திதி, கரணம், யோகம்,
நவம் என வழங்கு கோளும் நல் நிலை நின்ற போதில்,
'அவனியை ஒரு கோல் ஓச்சி ஆளும்' என்று, அறிவின் மிக்க
தவ நெறி முனிவர் கூற, பிறந்தனன், தருமன் மைந்தன். 66

உதிட்டிரன் பிறந்தகாலை, உலகினில் உயர்ந்தோர் யாரும்,
வதிட்டனை முதலா எண்ணும் முனிவரும், வான் உளோரும்,
நிதிப் பயன் பெற்றார் போல நேயமோடு உவகை கூர்ந்தார்;
மதித்தன நிமித்தம் யாவும் மங்கலம் நிகழ்ந்த அன்றே! 67

மைந்தன் முகம் நோக்கிப் பாண்டு மகிழ்தல்

தண் பிறை எழுச்சி கண்ட சலநிதி எனவே, மைந்தன்
பண்புடை வதனம் நோக்கி, பார்த்திவன் பாண்டு என்பான்,
கண் பனி துளிப்ப, நெஞ்சம் கனிந்து இனிது உருக, மேனி
வண் புளகு அரும்ப, மேன்மேல் வரம்பு இலா மகிழ்ச்சி கூர்ந்தான்.

உதிட்டிரன் பிறந்த செய்தி அறிந்த காந்தாரி பொறாமையுற்று, கல்லால் தன் வயிற்றில் மோத, அவள் கொண்ட கருச் சிதைதல்

'அற்றனள் துயரம் எல்லாம்; அருந் தவப் பயனால், மைந்தற்
பெற்றனள், குந்தி' என்னும் பேர் உரை கேட்ட அன்றே,
உற்றனள் பொறாமை; கல்லால் உதரம் உள் குழம்புமாறு
செற்றனள், தனது கேடும் ஆக்கமும் சிந்தியாதாள். 69

மை அறு சுபலன் கன்னி வயினிடைக் கருப்பம், சேர,
பையொடு குருதி பொங்கப் பார்மிசை விழுந்ததாக,
செய்யவன் விழுந்த திக்கில் செக்கர் வான் என்ன, சென்று,
மெய்யுடை அரிய கேள்வி வேள்வி கூர் வியாதன் கண்டான். 70

வியாதன் வந்து, சிதைந்த கருவை நூறு கூறுக்கி நூறு தாழியில் இட்டு, எஞ்சிய தசையையும் ஒரு தாழியில் வைத்து, 'உரு நிரம்பும் வரை கையால் தொடாதே' என்று அருளிப் போதல்

சஞ்சலமான கோசத் தசையினைத் தாழிதோறும்
எஞ்சல ஆக நூறு கூறு செய்து, இழுதில் ஏற்றி,
நெஞ்சு அலர் கருணையாளன் நின்ற அக் குறையும் சேர்த்தி,
'அம் சில் வார் குழலி ஆக!' என்று ஆங்கு ஒரு கடத்தில் வைத்தான்.

கரு உறு தாயை நோக்கி, 'கையறும் என்று, கன்றி
வெருவுறல், கற்பின் மிக்காய்! வேறு செய் தசைகள் யாவும்
உரு உற நிரம்பி, தாமே உற்பவிப்பளவும், கையால்
மருவுறல்; வழுவுறாது, என் வரம்' என, வரதன் போனான். 72

காந்தாரி கருக் கலங்களைப் பரிவுடன் பாதுகாத்தல்

காம்பு என நிறத்த தோளாள், கரு வயிற்று இருப்பது ஒப்ப,
தேம் பயில் நறு நெய் பெய்த கலங்களைச் சேமமாக
ஆம் பரிவுடனே ஆற்றி, ஈற்று அளை அடைந்து வைகும்
பாம்பு எனப் பருவம் நோக்கி, இருந்தனள், பழுது இலாதாள். 73

குந்தி வீமனைப் பெறுதல்

ஈண்டு உறு நிகழ்ச்சி கேட்டே, யாதவன் மகளை நோக்கி,
பாண்டுமன் இரந்து பல்கால் பணித்தலும், பவனன்தன்னை
மீண்டும் அம் மறையால் உன்னி, அழைத்தனள்; விரைவின் ஓடி,
ஆண்டு வந்து, அவனும் பூத்த கொடி அனாள் ஆகம் தோய்ந்தான்.

நெஞ்சு உற மணந்து, மீள நெடுங் கலைவாகன் ஏக,
செஞ் சுடர் உச்சி எய்திச் சிறந்தது ஓர் முகூர்த்தம்தன்னில்,
அஞ்சனை அளித்த பொன்-தோள் அனுமனே உவமை என்ன,
வெஞ் சின வீமன்தன்னைப் பயந்தனள், விரதம் மிக்காள். 75

தண் பரிமளம் மென் சாயல் தந்தையும், திசைகள்தோறும்
எண் பெறும் உயிர்கட்கு எல்லாம் இதம் உறு பொலிவின் வீச,
நண்புடை அனலன்தானும், நலம் மிகு நண்பு தோன்ற,
பண்பு உற வலம் வந்து ஓங்கி, பரிவுடன் விளக்கம் செய்தான். 76

வீமன் தோன்றியதற்கு முன் நாளில் துரியோதனன் தோன்றுதல்

அன்ன நாள் அனிலன் மைந்தன் பிறந்தனனாக, அற்றை
முன்னை நாள் அருக்கன் வேலை முழுகிய முகூர்த்தம்தன்னில்,
'இன்ன நாள் உருவம் முற்றி, எழில் பெறும்' என்று, முன்னோன்
சொன்ன நாள் வழுவுறாமல், சுயோதனன் தோன்றினானே. 77

வாரியின் அதிர்ந்து விம்மும் மங்கல முழவம் மேன்மேல்
ஓரியின் குரலால் ஓதை ஒடுங்கின; இடங்கள்தோறும்
பாரிய குலத்தோர் கண்ணின் உவகை நீர் பனிக்கும் முன்னே,
சோரி அந்தரத்தினின்றும் சொரிந்தது, சோனை மேகம். 78

துரியோதனன் தம்பியரும், தங்கை துச்சளையும் தோன்றுதல்

கோள்களின் நிலையால் தீமை கொண்டன முகூர்த்தம்தன்னில்,
தேள்களின் கொடிய மற்றைச் சிறுவரும் சேர, ஓர் ஓர்
நாள்களில் பிறந்த பின்னர், நங்கையும் ஒருத்தி வந்தாள்,
தோள்களின் கழையை வென்ற துச்சளை என்னும் பேராள். 79

காந்தாரியின் பெரு மகிழ்ச்சி

பின்னிய புதல்வராலும், பிறந்த மென் புதல்வியாலும்,
துன்னிய மகிழ்நனாலும், துலங்கிய சுபலன் பாவை
தன் நிகர் பரிதியாலும், சத இதழாலும், செம் பொன்
கன்னிகையாலும், சோதி கலந்த செங் கமலம் போன்றாள். 80

பங்குனி உத்தரத்தில் குந்தி விசயனைப் பெறுதல்

பால்மொழிக் குந்தி மீண்டும் பாண்டுவின் ஏவல் பெற்று,
வான் மொழி மறையால் உன்னி, வானவர்க்கு அரசை நோக்க,
மேல் மொழிவது மற்று என்கொல்? விடுவனோ? விரைவின் வந்து, அத்
தேன்மொழித் தெரிவை மெய்யும் சிந்தையும் களிக்கச் சேர்ந்தான்.

எங்கும் நல் நிமித்தம் செல்ல, இரு நிலம் மகிழ்ச்சி கூர,
பங்குனி, நிறைந்த திங்கள் ஆதபன் பயிலும் நாளில்,
வெங் குனி வரி வில் வாகை விசயனும் பிறந்தான்; வென்றிப்
பங்குனன் என்னும் நாமம் பகுதியால் படைத்திட்டானே. 82

கற்பக மலர்கள் சிந்திக் கடவுளர் கணங்கள் ஆட,
வெற்பக முனிவர் ஈண்டி மங்கல வேதம் பாட,
பொற்பு அக முழவு விம்ம, புரி வளை முழங்கி ஆர்ப்ப,
'நற் பகல் இது!' என்று எல்லா உலகமும் நயந்த அன்றே. 83

பாண்டுவின் கட்டளைப்படி குந்தி மந்திரத்தை மாத்திரிக்கு உரைத்தலும்,
மாத்திரி நகுல சகாதேவர்களைப் பெறுதலும்

இறைவனும் மகிழ்ந்து, பின்னும் யாதவிக்கு உரைப்ப, அந்த
மறையினை முறையின் பெற்ற மத்திர ராசன் கன்னி,
'குறைவு அற இருவர் வேண்டும், குமரர்' என்று உன்னி நின்றாள்;
நிறையுடை இரவி மைந்தர் இருவரும் நினைவின் வந்தார். 84

மரு வரும் குழலி ஆயும் மறையினால், வரிசை பெற்ற
இருவரும் ஒருவர் போல இன்புற மணந்த போதில்,
பருவரல் யாதும் இல்லாப் பாலகர் இருவர் சேரக்
கரு விளைந்து உதித்தார்; யாரும் கண் எனக் காணும் நீரார். 85

ஐந்து மைந்தரால் பாண்டு அகம் மிக மகிழ்தல்

சசி குல நகுலன் என்றும், தம்பி சாதேவன் என்றும்,
விசயனோடு என்னும் வீமன், மேதகு தருமன் என்றும்,
அசைவு அறு சிங்க சாபம் அனையவர் ஐவராலும்,
வசை அறு தவத்தின் மிக்கான், மகிழ்ச்சியால் வாழ்வு பெற்றான். 86

ஐவரும் வளர்ந்த வகை

தாதியர் மருங்கும், தந்தை தட மணி மார்பும், பெற்ற
பேதையர் கரமும், நீங்காப் பெற்றியின் வளர்ந்த பின்னர்,
போதகம், மடங்கல், புல்வாய், புலி, முதல் விலங்கொடு ஓடி,
வேதியர் முன்றில்தோறும் விழைவிளையாடல் உற்ருர். 87

செய் தவ முனிவர்தம்மால் சிகையுடன் புரிநூல் சாத்தி,
கைதவம் இன்றி எண்-எண் கலைக் கடல் கரையும் கண்டு,
மெய் தவம் விளங்க, வேழவில்லியும் விழைந்து நோக்க,
மை தவழ் சிகரி அன்ன வளர்ச்சியின் வனப்பின் மிக்கார். 88

மார்பினும் அகன்ற, கல்வி; வனப்பினும் நிறைந்த, சீர்த்தி;
போர் வரு தெரியல் மாலைப் புயத்தினும் உயர்ந்த, கொற்றம்;
சீர் தரு வாய்மை மிக்க, கண்ணினும்; செங் கை வண்மை
பார் வளம் சுரக்கும் செல்வப் பரப்பினும் பரந்த அன்றே. 89

வசந்த காலத்தின் வருகையும் எழிலும்

ஆரமும், ஆரச் சேறும், அரும் பனிநீரும், பூவும்,
ஈர வெண் மதி நிலாவும், இதம் பெறு தென்றற் காலும்,
ஓர் உயிர் இரண்டு மெய்யாய் உருகுவார் உருகும் வண்ணம்,
மாரனை மகுடம் சூட்ட, வந்தது, வசந்தகாலம். 90

விது நலம் பெறு கா எங்கும் மெய் சிவப்பு ஏற, வண்டு
புதுமையின் முரன்று மொய்ப்ப, புது மணம் பரந்து உலாவ,
கதுமெனத் தலை நடுங்க, கால் தடுமாறிற்று அம்மா!—
மது அயர்ந்தவரில் யாவர், மண்ணின்மேல் மயக்குருதார்? 91

பைந் தடந் தாளால் முன்னம் பருகிய புனலை, மீளச்
செந் தழல் ஆக்கி, அம் தண் சினைதொறும் காட்டும் சீரால்,
முந்திய அசோகு, சூதம், முதலிய தருக்கள் எல்லாம்,
இந்திரசாலம் வல்லோர் இயற்கையின் இயற்றுமாலோ! 92

பரந்து எழு சூத புட்ப பராகம், நல் இராகம் மிஞ்ச,
முரண்படு சிலை வேள் விட்ட மோகனச் சுண்ணம் போன்ற!
புரிந்த தொல் யோக மாக்கள் புந்தி நின்று உருக, தொட்ட
அருந் தழல் கணைகள் போல அலர்ந்தன, அசோக சாலம்! 93

வசந்த இன்பத்தில் ஈடுபட்ட பாண்டு, சாபத்தை மறந்து,
மாத்திரியுடன் கூடி, மாள்தல்

வேனிலின் விளைவினுலும், வேனிலான் விழவினுலும்,
மா நலம் திகழும் மூரல் மாத்திரி வனப்பினுலும்,
தான் நலம் உறுதல் எண்ணி, சாபமும் மறந்து, மற்று அப்
பானல் அம் கண்ணுளோடும் பாண்டுவும் பரிவு கூர்ந்தான். 94

அருந் தளிர் நயந்து நல்கி, அலகுடன் அலகு சேரப்
பொருந்தும் முன் அவசம் ஆகி, போகம் மென் குயிலும் பேடும்
இருந்து மெய் உருகும் காவில், இரதியும் மதனும் என்ன,
வருந்திய காதலோடும் மாதவிப் பந்தர் சேர்ந்தார். 95

பஞ்சின் மெல் அடியினாளும் கணவனும், பழங் கணோட்டம்
நெஞ்சினை நலிய, மேன்மேல் நேயம் உற்று உருகி, ஆங்கண்,
'எஞ்சிய காலம் எல்லாம் என்செய்தேம்!' என்று என்று எண்ணி,
வெஞ் சிலை அநங்க வேத முறைமையால் மேவினாரே. 96

பூ இயல் அமளி பொங்க, புணர் முலை புளகம் ஏற,
மேவிய கலவி இன்பம் மெய் உறு மகிழ்ச்சி முற்றி,
காவி அம் கண்ணி, கேள்வன் கமழ் வரை மார்பின், அன்போடு,
ஓவியம் எனவே, உள்ளம் உருகினள், அயர்ந்து வீழ்ந்தாள். 97

அரும்பிய விழியும், தொண்டை அமுது உறு பவள வாயும்,
விரும்பிய சுரத போகம் மேவரு குறிப்பும், ஆகி,
பொரும் படை மதனன் அம்பால் பொன்றினன் போல, மன்றல்
சுரும்புஇனம் இரங்கி ஆர்ப்ப, தோன்றலும் சோர்ந்து வீழ்ந்தான். 98

கொஞ்சு கிளி அன்ன மொழி குமுத இதழ் அமுதால்,
எஞ்சினன் நராதிபதி; ஈது என வியப்போ?
அஞ்சுதரு தீ வினையின் ஆர் அமுதும் நஞ்சு ஆம்;
நஞ்சும் அமுது ஆம், உரிய நல் வினையின் மாதோ! 99

மாத்திரி அரற்றிய ஒலி கேட்டு, குந்தி குமாரர்களோடு வருதல்

சித்திரை வசந்தன் வரு செவ்வியுடன் மகிழா,
மத்திரி எனும் கொடிய வாள் கண் விடம் அன்னாள்,
முத்திரை உணர்ந்திலள், 'முயக்கம் உறும் இன்ப
நித்திரைகொலாம்!' என நினைந்து, அருகு இருந்தாள். 100

'செயிர்த்தவரை ஆவி கவர் தீ உமிழும் வேலான்
உயிர்த்திலன், விழித்திலன், உணர்ந்தும் இலன்' என்னா,
அயிர்த்தனள்; அழைத்தனள் அரற்றினள்; இரங்கா,
வயிர்த்தனள், நிலத்தின் உயர் வானம் இனிது என்பாள். 101

புந்தி இலள், மன்றல் பெறு, பூவை குரல் கேளா,
'முந்திய கடும் பழி முடிந்ததுகொல்!' என்னா,
குந்தியும் விரைந்து தன குமரரொடு புக்காள்,
அந்தி அரவிந்தம் என அணி குலை முகத்தாள். 102

நிகழ்ந்தது உணர்ந்து, குந்தி அழுது அாற்றுதல்

உற்றதும், அருங் கொழுநன் உயிர் உறும் நலத்தால்
இற்றதும், உணர்ந்து, இவள் இரங்கி அழும் எல்லே,
குற்றம் அகலும்படி குணங்களை நிறுத்தும்
நல் தவர் புகுந்து, உருகி, நைந்து, உளம் நெகிழ்ந்தார். 103

பாண்டுவுக்கு ஈமக்கடன் செய்தலும், மாத்திரி கணவனுடன் தீப்பாய்தலும்

அழு குரல் விலக்கியபின், ஐம் மகவையும் கொண்டு,
எழு கடல் நிலத்து அரசை ஈம விதி செய்ய,
புழுகு கமழ் மைக் குழலி, பொற்புடை முகத்தாள்,
முழுகினள் அனற்புனலில், மொய்ம்பனை விடாதாள். 104

தங்கை அவள், வான் உலகு தலைவனுடன் எய்தி,
கங்கை வனம் மூழ்கி, உயர் கற்பவனம் வைக,—
பங்கய நெடுந் துறை படிந்து, தன் மகாரால்,
மங்கை இவளும், கடன் முடித்தனள், வனத்தே. 105

சதசிருங்க முனிவர் குந்தியையும் புதல்வர்களையும் அத்திஞபுரியில் சேர்த்தல்

காசிபன் முதல் கடவுள் வேதியர் கருத்தால்,
ஆசி பெறும் அப் புதல்வர் ஐவரொடும் அன்றே,
ஏசு இல் பிரதைக் கொடியை இறை நகரின் உய்த்தார்—
தேசிகரின் முன் தொழுதகும் சதசிருங்கர். 106

வணங்கிய புதல்வர்களைத் திருதராட்டிரன் எடுத்து அணைத்து மகிழ்தல்

இறந்த துணைவற்கு உளம் இரங்கும் நிலமன்னன்
சிறந்த சரணத்தில் விழு சிறுவரை எடுத்து,
புறம் தழுவி, அப்பொழுது புண்ணிய நலத்தால்,
பிறந்த பொழுது ஒத்து மகிழ் பெற்றியினன் ஆனான். 107

வீடுமன், விதுரன், முதலியோர் துன்பமும் உவகையும் கொள்ளுதல்

வியன் நதிமகன், சிலை வல் விதுரன், முதல் உள்ளோர்,
பயனுடை விசும்பு பயில் பாண்டுவை நினைந்தும்,
சயம் நிலைபெறும் தகைய தனயரை உகந்தும்,
நயனம் இரு பைம் புனலும் நல்கினர் நயந்தார். 108

ஐவரும் நூற்றுவரும் ஓர் இடத்தில் வளர்தல்

அனுச நிருபன் புதல்வர் ஐவரும், மகீபன்
தனயர் ஒரு நூற்றுவரும், அன்பினொடு தழுவி,
கனகுலம் முகந்து பெய் கருங் கயம் நெருங்கும்
வனசமலரும் குமுதமலரும் என வளர்வார். 109

வசுதேவன் முதலியோர் அத்திஞபுரிக்கு வருதல்

இன்னணம் வளரும்காலை, எறி கடல் உடுத்த அல்குல்,
மின் எனும் மருங்குல், கொங்கை வெற்புடை, வேய் கொள் மென் தோள்,
பொன் எனும் நிறத்தினேடும் பொற்பு அழி ஆகுலத்தாள்-
தன் எணம் முடிப்பான் வந்த தலைவனைத் தந்த கோமான், 110

குந்திபோசன்தன் தெய்வக் குலத்துளோர்களும், அநேக
இந்திரர் அவனிதன்னில் எய்தினர் ஆகும் என்ன,
கந்த வான் கொன்றை தோயும் கங்கையாள் குமரன் வைகும்,
அந்தம் இல் சுவர்க்கம் அன்ன, அத்தினபுரி வந்து உற்றார். 111

கண்ணன் முதலியோர் குந்தியைக் கண்டு, பூமியை ஆளும் முறையையும் கருதுதல்

வெண் நிற மதியம் அன்ன விடலையும், கரிய மேக
வண்ணனும், வள்ளல்தன்னைத் திரு வயிற்று உதித்த மாதும்,
எண் இலா உவகையோடும் குந்தியை எய்தி, எல்லாப்
புண்ணிய நலமும் எண்ணி, பூமி ஆள் முறையும் கோத்தார். 112

தருமபுத்திரனை நோக்கி, கண்ணன் கூறுதல்

எம்பிரான், ஆதிமூலம், இந்திரன் முதலோர்க்கு எல்லாம்
தம்பிரான், பாண்டு ஈன்ற தருமதேவதையை நோக்கி,
'அம்புராசிகள் உட்பட்ட அவனிகள் அனைத்தும் நாமே,
இம்பர் நோய் அகற்றி, எல்லா எண்ணமும் முடித்தும்' என்றான்.

திருதராட்டிரன் முதலியோர் வந்தவரோடு அளவளாவுதல்

முகுரவானனனும், வேத்து முனிவனும், மனம், சொல், காயம்,
பகிர்வு இலா விதுரன்தானும், பாந்தள் ஏறு உயர்த்த கோவும்,
நிகர் இலாத் துணைவர்தாமும், நீரொடு நீர் சேர்ந்தென்ன,
தகைவு இலா அன்பினோடும் தழுவினர் கெழுமினாரே. 114

வீடுமன் முதலியோர் வந்தவர்களுக்கு விருந்துசெய்தல்

தன் பதி வந்தோர்தம்மை, தாதைதன் தாதை ஆன
முன்புடைக் கங்கை மைந்தன் முதலிய முதல்வர் எல்லாம்,
அன்பொடு கண்டு கண்டு, கண் களித்து, ஆர்வம் மிஞ்சி,
மன்பதை மகிழ்ச்சி கூர, வரம்பு இலா விருந்து செய்தார். 115

வீடுமன் முதலியோர் வந்தவர்க்கு முகமன் கூறி, விடைகொடுத்து அனுப்புதல்

'நூற்றுவர், ஐவர், என்னும் நுதியுடைச் சமர வை வேல்
கூற்றுவர் அனையோர்க்கு யாரும் கொடுங் கடும் போரில் ஆற்றார்;'
ஆற்றுவரேனும், உங்கள் உதவி உண்டு; அருளும் உண்டு;
தோற்றமும் உண்டு; நுங்கள் சுமை, இவர் சுமையும்' என்றார். 116

இனிமையின் பலவும் மாற்றம் யாவர்க்கும் யாவம் சொல்லி,
கினகான்-தொழுத பின்னர், தேர், பரி, கரிகள்தோறும்
மனன் உறத் தக்க செல்வம் வகைதொறும் வழங்கி, அன்றே
தனதனைப் போல்வார்தம்மைத் தம் பதி அடைவித்தாரே. 117

எயில் நலம் புனை கோபுர மா புரத்து, எழுது மாளிகைதோறும்,
வெயில் நிலா உமிழ் கனக நீள் வீதியில், விலாசம் உற்றிடும் நாளில்,
பயினன் மேல் வரு கல் எனச் செறிந்த மெய்ப் பவனன் மைந்தனும் ஒத்தான்,
வயினதேயனை; காத்திரவேயரை, மன்னன் மைந்தரும் ஒத்தார். 118

## 3. வாரணாவதச் சருக்கம்

துரியோதனன் கன்னனைத் துணைவனாகக் கொள்ளுதல்

ஆங்கு அவர் அம் முறை அயரும் ஆயிடை,
தீங்கு ஒரு வடிவமாம் திறல் சுயோதனன்,
'பாங்கு இவன், நமக்கு' எனப் பரிதி மைந்தனை
வாங்குபு, தழீஇயினன், வலிமை கூரவே. 1

பாண்டவ கௌரவர்கள் ஒருநாள் கங்கையில் நீராடி, உணவு உண்டு உறங்குதல்

ஒரு பகல், நிலமகள் உய்ய, மங்குலின்
வரு பகீரதிநதி வாச நீர் படிந்து,
இரு திறப் புதல்வரும் இயைந்த கேண்மையால்,
கரை அடைந்தனர், இளங் கடவுளோர் அனர். 2

தைவரும் நவமணிச் சயிலம் என்னவே
ஐவகை நிறங்களும் அமைத்து இயற்றிய
தெய்வ ஆடக மனை, செல்வப் போனகம்
கைவர நுகர்ந்த பின், கண்ணும் துஞ்சினர். 3

கன்ன சௌபலர், துரியோதனனுடன் சூழ்ந்து, உறங்கும் வீமனைக்
கொடிகளால் கட்டிக் கங்கையில் இடுதல்

கண்படைக் கங்குலில், கன்ன சௌபலர்,
எண் படைக் குமரனோடு எண்ணி, பாவகன்
நண்பன் மெய்ப் புதல்வனை, நார் கொள் வல்லியால்,
திண் பதத்தொடு புயம் சிக்க யாத்தபின், 4

அரவினில் பிணித்து, எழும் அரவம் பொங்கிட,
உரனுடைப் பொருப்பை, அன்று, உம்பர் நாயகன்
பரவையில் செறித்தென, பயன் இல் செய்கையால்,
விரவும் அப் பெரு நதியூடு வீழ்த்தினர். 5

கட்டு விடுத்து வீமன் கரை ஏறுதலும், துரியோதனன் அவன்மேல்
பாம்புகளை ஏவுதலும்

வீழ்ந்தவன்,—அனந்தரம் நிமிர்ந்து, மெய் உறச்
சூழ்ந்த அப் பிணிகளைத் துணிகள் ஆக்கியே,
ஆழ்ந்திலன், ஏறி, மீண்டு, அவசத்தோடு அவண்
தாழ்ந்திலன்;—இராகவன் தம்பி போன்று உளான். 6

வாள் இரவியை ஒளி மறைக்கும் வெஞ் சினக்
கோள் அரவினை அன கொடிய நெஞ்சினன்,
நீள் அரவுஇனங்களால், நித்திராலுவை
மீளவும் கொல்லுவான், வீரன் ஏவினான். 7

கடித்த பாம்புகளைப் பிசைந்து அழித்து, வீமன் துணைவரைச் சார்தல்

கடித்தன பன்னகம், நகம் கொள் கைகளால்,
துடித்திட, மற்குணத் தொகுதிபோல் பிசைந்து,
இடித்திடும் முகில் என எழுந்து, மா நகர்
வடித்த வேல் துணைவரோடு எய்தி, மன்னினன். 8

வேறொரு நாள், துரியோதனன் நீர்க்கீழ் அமைத்த கழுவில் விழாது, வீமன் தப்புதல்

வேறு ஒரு பகல், கழு நிரைத்து, வீமனோடு
ஆறு பாய்ந்து, இருவரும் ஆடும் வேலையில்,
தேறலான் வஞ்சகம் தேறி வண்டினால்,
ஏறினன் கடந்து, அரிஏறு போன்றுளான். 9

பின் ஒருநாள், துரியோதனன் வீமனுக்கு விஷ உணவு கொடுத்து மயங்கச் செய்து,
கயிற்றால் கட்டிக் கங்கையில் அமிழ்த்துதல்

பின்னரும் ஒரு பகல், பெற்றம் பெற்றவன்-
தன்னை, அம் மகிபதி தனயன், ஆதரித்து
இன் அமுது அருத்துவான் போல, யாவையும்
துன்னிய விடங்களால் துய்ப்பித்தான்அரோ. 10

விடத்திலே அழிந்து, அறிவு ஒழிந்த வீமனை,
வடத்திலே பிணித்தனன், கங்கை வாரியின்
இடத்திலே அமிழ்த்தினன்—இதயம் ஒத்தவர்
நிடத்திலே முதிர்ந்த கிங்கரர் திறங்களால். 11

பாதலம் புக்க வீமனை அரவு கடிக்க முன்னுள்ள விஷம் அகலுதல்

ஓத வான் கடலிடை ஒளித்த வெற்பு எனப்
பாதலம்தனில் விழு பவன சூனுவை,
வேதனைப்படுத்தினர், விடம் கொள் கூர் எயிற்று
ஆதவப் பண மணி அரவின் அம் சிறார். 12

முற்படு கொடு விடம், முனை எயிற்று உகும்
பிற்படு விடத்தினால் பெயர்ந்து போதலின்,
மல் படு புயகிரி வடப் பிணிப்பும் அற்று,
அல் படும் இருள் புலர் அலரி ஆயினன். 13

வாசுகி அளித்த அமுது உண்டு, வீமனது உடல் எழில் பெறுதல்

வாசுகிதனக்கு இவன் வரவு உணர்த்தலும்,
ஆசுகன் மதலை என்று அறிந்து, மற்று அவன்
தேசு உறு பொற்குடம் தெரிந்து, பத்தினால்,
ஏசு அறும் அமுது எலாம் இனிதின் ஊட்டினன். 14

வெங் கனல் கொளுந்தலின் வெந்த வான் புலம்
மங்குல் பெய் மாரியால் வயங்குமாறுபோல்,
அங்கு எரி விடம் நுகர்ந்து அழிந்த பேர் உடல்,
இங்கு அமுது அருத்தலால், எழில் புரிந்ததே. 15

நாக ராசன் மாளிகையில் வீமன் எட்டு நாள் தங்கியிருத்தல்

ஆயிரம் பதின் மடங்கு அரசுஉவாக்களின்
மா இருந் திறல் வலி மலிந்த மேனியான்,
ஏய் இருந் தவப் பயன் என்ன, எண் பகல்
மேய் இருந்தனன், பணிவேந்தன் கோயிலே. 16

துரியோதனன் தனியாய் நகர்க்கு மீளுதல்

இவனை அந் நதியிடை இட்ட பாவியும்,
தவனனை உததியில் சாய்த்த மாலைபோல்,
அவனிபன் நகரியின் அரச வெள் வளைத்
துவனி செந் தழல் விளக்கு எடுப்பத் துன்னவே, 17

வீமனைக் காணாது குந்தியும் மக்களும் வருந்துதல்

கண்டிலள், உதிட்டிரன் கனிட்டற் கண் உற;
உண்டிலள்; தரித்திலள்; ஓர் இராவினும்
கொண்டிலள், துயில்; இளங் குமரர்தம்மொடும்
விண்டிலள் உரை;—உளம் விம்மு குந்தியே. 18

‘வீடினன் ஆம்’ எனத் துணைவர் வேறுவேறு
ஓடினர்; கான், நதி, ஓடை, எங்கணும்
தேடினர்; ‘காண்கிலம்; செய்வது என்?’ என,
நாடினர்; நடுங்கினர், நடுக்கு இல் சிந்தையார். 19

‘கூற்று அன சுயோதன குமரனே, இவன்
ஆற்றலின் வெரீஇ, அழுக்கற்ற சிந்தையான்;
ஏற்றதை உணர்கிலம்’ என்று, தந்தையாம்
காற்றினும் அலமரும் கருத்தர் ஆயினர். 20

குந்திக்கு வீடுமன் தேறுதல் கூறுதல்

ஊதை இல் பூதம் ஒத்து உள்ளம் வெம்பிய
தாதை இல் சிறுவரை, தாதைதாதைபால்,
கோதை இல் குழலினாள் கொண்டு சேறலும்,
‘வாதை இன்று அவற்கு’ என வருத்தம் மாற்றினான். 21

பலரும் தேற்றத் தேராது, குந்தி மனம் மறுகி இருத்தல்

தரும மன்னனும், நகர்ச் சனங்கள் யாவையும்,
தெருமரல் தேற்றவும், தெய்வம் கூறவும்,
பெருமித நிமித்தங்கள் பெற்றி பேசவும்,
‘வரும், வரும்!’ என மனம் மறுகி, வைகினாள். 22

நாகங்கள் வீமனைக் கங்கைக் கரையில் கொண்டு சேர்த்தல்

இருந்து, இளைப்பு அகன்றபின், இவனை மற்றை நாள்,
அருந் திறல் போகிகள், அரசன் ஏவலால்,
வருந்தி உற்று எடுத்து, முன் வந்த நீர் வழிப்
பொரும் திரைக் கங்கையின் கரையில் போக்கவே, 23

பாழி அம் புய கிரிப் பாண்டவன் தனைச்
சூழ் இகல் பணிக் குலம் சுமக்க வல்லவோ?—
வாழி அக் குலங்களின் மன்னன் அல்லனே,
ஏழ்-இரு புவனமும் இனிதின் ஏந்துவான்! 24

விதியினால் ஒளித்தலின் உயங்கி, மீளவும்
நதியினால் வருதலின் நலம் கொள் மேனியான்,
பதியினால் விளங்கும் மென் பங்கயங்களும்,
மதியினால் குளிர் நெடு வானும் ஆயினன். 25

உற்றார்க்கு மகிழ்ச்சியும், துரியோதனாதியர்க்கு நடுக்கமும் வீமன் விளைத்தல்

வேதியர், குரவர், வில் விதுரன், வீடுமன்,
ஆதியர், துணைவர் அந் நகர் உளார்கள் என்று
ஓதிய சனங்களுக்கு உவகை நல்கினான்—
ஞாதியர் கிளைக்கு எலாம் நடுக்கம் நல்கியே. 26

குந்தியைத் தேற்றி, வீமன் அத்திநாபுரியில் முன்பு போல வாழ்தல்

குந்தியை மகிழ் உரை கூறி, கற்பினால்
அந்திமீன் அனையவள் அருளின் வாழ்த்தவே,
செந் திருமகள் உறை செல்வ மா நகர்
வந்து, இவன் முன்புபோல் வளரும் நாளிலே, 27

கிருபன் குருகுல மைந்தர்க்குப் படைக்கலப் பயிற்சி அளித்தல்

கோதமன் மகன் மகன், குனி வில் ஆதியாம்
மேதகு படைக்கலம் யாவும் வீறொடு அம்
மா தவன்வயின் பயில் வரதன், வன் திறல்
கேதம் இல் சிந்தையான், கிருபன் என்று உளான். 28

மற்று இவன் சந்தனு மைந்தன் ஏவலால்,
கொற்றவர் அருள் குருகுல குமாரரை
வெற்றி கொள் சிலையும், வெவ் வேலும், வாளமும்,
பற்றலர் வெருவரும்படி பயிற்றினான். 29

கிருபனிலும் சிறந்த ஒரு குருவை வீடுமன் தேடுதல்

பரிவுடன் இவன் படை பயிற்ற, பின்னரும்,
குருபதி வேறு ஒரு குருவைத் தேடினான்;—
இருள் அற மதி நிலவு எறித்ததாயினும்,
பரிதியை நயக்கும், இப் பரவை ஞாலமே. 30

துரோணன் வரலாறு

பரத நாத வேத பரத்துவாசன் என்பான்,
விரத வேள்விதன்னில், மேனகையால் ஆன
சுரத தாது வீழ்ந்த துரோணகும்பம்தன்னில்,
வரதன் ஒருவன் வந்தான், வசிட்ட முனியை ஒப்பான். 31

ஈர்-ஏழ் விஞ்சைத் திறனும் ஈன்றேன்தன்பால் எய்தி,
நீர் ஏழ் என்ன யாவும் நிறைந்த கேள்வி நெஞ்சன்,
பார் ஏழ் எண்ணும் படைகள் பரசுராமன்தன்பால்
ஓர் ஏழ் பகலின், உலகுக்கு ஒருவன் என்ன, கற்றான். 32

வீடுமன் தூதனுப்பித் துரோணனை வரவழைத்து, எதிர்கொண்டு உபசரித்தல்

வெற்பின் வலிய திண் தோள் வேந்தன் ஏவும் தூதால்,
அற்பின் மிக்க சிந்தை அறம் சால் மொழி அவ் ஆசான்,
கற்பின் பன்னியோடும், கையின் மதலையோடும்,
பொற்பின் அமராவதியே போலும் நகரி புக்கான். 33

வந்தான் வரதன் எனலும், மந்தாகினியாள் மைந்தன்,
பைந் தார் அசைய எதிர் போய், பணிந்து, பூசை பண்ணி,
சிந்தாசனத்தோடு ஒக்கும் சிங்காசனத்தின் ஏற்றி,
'எந்தாய்! வர நீ, அடியேன் என்ன தவத்தேன்!' என்றான். 34

வீடுமனுக்குத் துரோணன் வாழ்த்துக்கூறி, துருபதன் செய்தியை எடுத்துரைத்தல்

மூசி வண்டு மொய்க்கும் முருகு ஆர் செவ்வி மாலை,
வாசி வான் தேர், வெம் போர், மன்னர் மன்னன்தன்னை,
ஏசு இல் கடவுள் வாய்மை இருக்கால் எண் இல் கோடி
ஆசி அன்பால் ஓதி, அருள்செய்து, இருந்த பின்னர், 35

வேத முனிவன், இருந்த வேத்து முனியை நோக்கி,
பூதம்தன்னில் நிகழ்ந்த புன்மை மொழி ஒன்று உரைப்பான்:
'ஏதம் மெய் பெற்றனைய யாகசேனன் என்பான்,
போதம் இல்லான், என்பால் பூட்டும் நண்பு பூண்டான்; 36

'யானும் அவனும், முறையால், இளையோம் ஆன எல்லை,
பானு நிகர் தொல் அங்கிவேசன் பாதம் பணிந்து,
வானும் மண்ணும் வியக்க, மற வெம் படைகள் கற்று,
தானும் வல்லன் ஆகி, தன்போல் என்னை வைத்தான். 37

'பின்னை, இரவும் பகலும், பிரியேம் ஆகித் திரிய,
தன்னை அடைந்த நண்பின் தகவால் மிக ஆதரியா,
''என் ஐ வானம் எய்தி, யானே இறைவன்ஆனால்,
உன்னை ஆள வைப்பேன், உலகில் பாதி'' என்றான். 38

'''நன்று, நன்று! உன் வாய்மை, நன்று ஆம் நண்புக்கு இனியாய்!''
என்று போந்து, நானும் இயன்ற தவத்தின் இருந்தேன்;
வென்று கொண்ட புவியை வேந்தன் மகவுக்கு அளித்து,
சென்று, வானம் புகுந்தான்; சிறுவன் தலைவன் ஆனான். 39

'தனத்தில் ஆசை இன்றி, ''தவமே தனம்'' என்று எண்ணி,
வனத்தில் உண்டி கொண்டே, மகிழ்வுற்று, ஒரு சார் வைகி,
சனத்தில் அருளால், இல் வாழ் தருமம் தவறுவண்ணம்
இனத்தில் மிக்க கிருபற்கு இளையாள் இவளை வேட்டேன். 40

'கந்த மகவை ஈன்ற காளகண்டன் அருளால்,
வந்த மகவு இம் மகவும், வறுமை வளர, வளர்ந்தான்;
இந்த மகவும் ஐஆண்டு இளமை அறியாது; எனலால்,
தந்த மகவை நோக்கி, தாயும் பெருகத் தளர்ந்தாள். 41

'மாவின் பாலே அன்றி, மரபுக்கு உரிய மைந்தன்,
ஆவின் பால் கண்டு அறியான்; அதனல் வருந்தி, அந்தக்
கோவின்பால் எய்துதலும், கோமான், ''யார் நீ?'' என்ன,
நாவின்பாலால், நடுங்கி, ''நான் உன் நண்பன்'' என்றேன். 42

' ''மன்னன் யான்; நீ முனிவன்; மரபால் எனக்கும் உனக்கும்
என்ன நண்பு உண்டு?'' என்ன ஏசி, நகைசெய்து, இகழ்ந்தான்;
அன்ன துருபன்தன்னை அவையில் அரசர் கேட்ப,
''சொன்ன வாய்மை நீயே சோர்ந்தாய்; யானே சோரேன்; 43

' ''புகன்றபடி நீ ஆளும் புவியும் பாதி கொள்வேன்;
இகன்ற சமரில் உன்னை இரதத்துடனே கவர்வேன்;
அகன்ற மெய்ம்மை உடையாய்! அறிதி'' என்றேன்' என்று,
சுதன்தன் ஞானம் பெற்ற துரோணன் சொல்லக் கேட்டான். 44

கேட்ட வீடுமன், குருகுலக் குமரரைக் காட்டி, 'நீ இவர்க்குப் படைக்கலப் பயிற்சி அளித்து, உன் வஞ்சினமும் முடி' என்று கூறி, துரோணனுக்கு அரசர்க்கு உரிய வரிசைகள் அளித்தல்

கேட்ட அரசன் அழைக்க, கிருபனுடன் வந்து இறைஞ்சும்,
பூட்டு வரி வில் தடக் கைப் புதல்வர் புதல்வர்தம்மைக்
காட்டி, 'நீயே இவரைக் கடிதில் படைமைக் கல்வி
மூட்டி, நின் வஞ்சினமும் முடித்தி' என்று மொழிந்தான். 45

'முனி நீ, ஐயா! இதற்கு முன்னம்; இன்று முதலா,
இனி, இவ் உலகுக்கு அரசாய், எம்மில் ஒருவன் ஆகி,
குனி வில் வலியால் அமரும் கோடி' என்று கொடுத்தான்—
பனி வெண் குடையும், நிருபற்கு உரிய வரிசை பலவும். 46

துரோணனிடம் குமாரர்கள் படைக்கலப் பயிற்சி பெறுதல்

அன்று முதலாக வரி வெஞ் சிலை முதல் படைகள்
ஆனவை அனைத்தும், அடைவே,
தோன்று படு நூல் முறையின், மறையினெடு, உதிட்டிர
சுயோதனர்கள் ஆதி எவரும்,
ஒன்றிய துரோணன் அருளாலும், வலியாலும், முயல்
உணர்வு உடைமையாலும், முதலே
நின்ற குறையாலும், ஒருவர்க்கு ஒருவர் கல்வியின்
நிரம்பினர்—வரம்பு இல் நிதியோர். 47

விசயன் வித்தையில் சிறந்து, குருவின் அன்பிற்கு உரியவனுதல்

'வெஞ் சிலையினுல் இவன் இராகவனை ஒக்கும்' என
விசயன் விசயத்தின் மிகவே,
எஞ்சிய குமாரர்கள் பொருமையின் மிகுத்தனர்கள்,
இரவி எதிர் மின்மினிகள்போல்;
அம் சொல் முனிதானும், இவன்மேல், எவரினும் பெருக
அன்புடையன் ஆகி, அகலான்;—
நெஞ்சு உற அருங் கலைகள் கற்குமவர்தம் அளவில்
நேயம் நிகழாதவர்கள் யார்? 48

வில் வித்தையில் அருச்சுனனை ஒத்த ஏகலைவன் துரோணனுக்குத்
தக்கிணை வழங்கிய வரலாறு

ஏகலைவன் என்று ஒரு கிராதன், முனியைத் தனி
இறைஞ்சி, இவன் ஏவலின் வழான்-
ஆகலை அடைந்து, மிகு பத்தியொடு, நாள்தொறும்
அருச்சுனனை ஒத்து வருவான்,
மேகலை நெடுங் கடல் வளைந்த தரணிக்கண் ஒரு
வில்லி என வின்மை உடையான்,
மா கலை நிறைந்து, குரு தக்கிணை வலக்கையினில்
வல் விரல் வழங்கியுளனுல். 49

விசயனின் வில் திறம்

அங்குலிகம் ஒன்று புனல் ஆழ்தரு கிணற்றில் விழ,
அந்த முனி, 'தேடுமின்' என,
புங்கமொடு புங்கம் உற எய்து, இவன் எடுத்தமை
புகன்று, அருகு நின்றவரை, 'நீர்
இங்கு இதன் இலைத் தொகைகள் யாவும் உருவப் பகழி
ஏவுமின்' எனுமுன், விசயன்,
துங்க வில் வளைத்து, ஒரு கணத்தினில் வடத்து இலை
துளைத்தனன், இலக்கு இல் தொடையால். 50

விசயன் துரோணனை முதலையின் பிடியிலிருந்து விடுவித்தலும், குரு மகிழ்ந்து அவனுக்குச் சிறந்த அம்பு அளித்தலும்

'முத்தி முனி தாள் இணையை, நீர் படி தடந் துறையில்,
முதலை கவர்வுற்றது' எனலும்,
சித்திர வில் வீரர் பலரும் தம வெறுங் கையொடு
சென்று, அருகு நின்று விடவே,
பத்தியின் விரைந்து, பொதுவே இபம் அழைக்க ஒரு
பறவைமிசை வந்த நெடுமால்
கைத் திகிரிபோல் கணையின், விசயன், அதனைப் பழைய
கார் முதலையின் துணிசெய்தான். 51

ஒரு தனுவினால், இதயம் மகிழ் குருவினுக்கு இவனும்
உயிர் உதவினான்; வரி சிலைக்
குருவும், இவனுக்கு நிலையாலும் மறையாலும் வலி
கூர் பகழி ஒன்று உதவினான்;
இருவரும் நயந்து, அருளும் விநயமும் மிகுந்தனர்கள்,
இன் உயிரும் மனமும் என;—மேல்
மருவி வரு நல்வினை வயத்தின் வழி வந்த பயன்
மற்று ஒருவருக்கு வருமோ? 52

துரோணன் குமரரின் கல்வித்திறத்தை அனைவர்க்கும் காட்டுதல்

சிலைக் குரு, 'விறல் குருகுலக் குமரருக்கு வரு
சிரம நிலை காண்மின்' எனவே,
அலைத் தலை நிலா எழு சரித் புதல்வனுக்கும் நல்
அறக் கடவுளுக்கும் உரையா,
நிலைப்படு விசால மணி அணி திகழ் அரங்கின்மிசை
நிகழ் பலி கொடுத்து, அரியுடன்
கலைப்புரவி ஊர் திருவையும் தொழுது, புக்கனன்—
அகத்து உணர்வு மிக்க கலையோன். 53

புரியில் அறிவோர், சனபதத்தில் அறிவோர், புவி
புரக்குமவர்தம்மில் அறிவோர்,
வரி பட வயங்கு கொடி மஞ்ச விதம் எங்கணும்
வனப்பு உற இருந்த பொழுதில்,
தெரிவுறு விமானமனைதோறும் உறை தேவர் பலர்,
சித்தர், முதலோர், பரனொடும்
கரிய நெடுமால், பிரமன், இந்திரன், முதல் பலர்
கலந்த அகல் வான் நிகருமே. 54

ஆற்றின் வழுவா மனுமுறைத் தருமன் மைந்தன் முதல்
ஆகிய குமாரர் அடைவே,
போற்றி அடல் ஆசிரியர் இருவரையும், அன்பின் உயர்
பூசை புல செய்து, புரி நாண்
ஏற்றிய சராசனம் வணக்கி, வடி வாளியின்
இலக்கம்அவை நாலு வகையால்,
மாற்றினர், பிளந்து—பெரு வண்மை, சிறு நுண்மை, சலம்,
நிச்சலம், எனச் சொல் வகையே. 55

ஆயுதம் அநேக விதம் ஆனவை எனைப் பலவும்
அழகுற இயற்றியும், மதம்
பாயும் இபம், மா இரதம், வாசி, ஒருவர்க்கு ஒருவர்
பல கதி வரக் கடவியும்,
சேய் உயரும் மாட நிலை தெற்றியின் இருந்தவர்
தெளிந்து உளம் மகிழ்ந்து, 'நவை தீர்
வாயு கதி அல்லது மனித்தர் கதி அல்ல!' என
வல்லன புரிந்தனர்அரோ. 56

துரியோதனனும் வீமனும் உட்பகை கொண்டு கதைப்போர் புரிய,
அசுவத்தாமன் விலக்குதல்

ஒத்த வலியோர் வலியும், ஒத்த திறலோர் திறலும்,
ஒத்த வினையோர் வினையும், வன்
சித்தம் அனல் மூள முக அம்புயம் மலர்ந்து, அரசன்
மகனும், அனிலன் சிறுவனும்,
கைத்தலம் அமர்ந்த கதை கொண்டு எதிர் நடந்தனர்—
களிப்புடன், இரண்டு தறுகண்
மத்த கயம், வேரொடு மராமரம் எடுத்து, அமர்
மலைந்தனைய கோல மறவோர். 57

தண்டின் முனை ஒன்றினுடன் ஒன்று உரும் எறிந்தனைய
தன்மையொடு உடற்ற, விலகு
மண்டல விதங்களும் வியப்புற நடந்தபின்,
மறத்தொடு செயிர்த்து, வயிரம்
கொண்டு, இருவரும் பொருதல் உன்னுபொழுதத்து, அவர்
குறிப்பினை இமைப்பு அளவையில்
கண்டு, குருவின் சிறுவன், வன்பொடு விலக்கினன், மெய்
கல்வி கரை கண்ட பெரியோன். 58

மன்னவர் முடிக்கும்வகை விசயன் வில்-திறமையைக் காட்டுதல்

மீளி மகவான் மதலை ஆயுதபுரோகிதன்
விலோசனம் உணர்ந்து, அவன் மலர்த்
தாளில் முடி வைத்து, எதிர் தரித்தனன், இடங்கை வரி
சாப கவசத்தினன், இபம்,
யாளி, அரவம், கருடன், வன்னி, சலிலம், திமிரம்,
இரவி, இவையே கடவுளாம்
வாளியின் விளைதம் உற எய்தனன், இருந்த முடி
மன்னவர் மதிக்கும் வகையே. 59

அப்பொழுது, கன்னன் சிங்கநாதத்துடன் எழுந்து, தன் வில் திறம் காட்டுதல்

மங்குல் சூழ் விமான முன்றில் மஞ்ச கோடி திகழவே,
அம் கண் வான மீனம் என்ன, அவை இருந்த அரசர்முன்,
சிங்கம் என்னுமாறு எழுந்து, சிங்கநாதமும் செய்தான்—
பங்கசாத பரிமளம் கொள் பானுராச சூனுவே. 60

சிந்தை அன்புடன் பணிந்து, தேசிகேசன் அருளினால்
வந்து, வெஞ் சராசனம் வணக்கி, வீர வாளியால்,
இந்திரன் குமாரன் முன் யாது யாது இயற்றினன்,
அந்த அந்த நிலையும் ஏவும் அவனின் விஞ்சல் ஆயினன். 61

அது கண்டு யாவரும் வியக்க, விசயன் நாணுதல்

கணைகள் போய் இலக்கு அடைந்த உறுதி கண்டு, கண் களித்து,
'இணை இல் வீரன்' என்றது, அன்று இருந்த ராச மண்டலம்;
பிணையல் மாலை விசயன் அண்ணல் பெற்றி பற்றி நாணினன்,
துணைவரோடு வரி கழல் சுயோதனன் களிக்கவே. 62

கன்னன் விசயனைப் போருக்கு அழைத்தலும், துரியோதனன் கன்னனைத்
தழுவிப் பாராட்டுதலும்

மருவ நின்று அருக்கன் மைந்தன், வானநாடன் மகனை, 'நாம்
இருவரும் தனுக் கொள் போர் இயற்ற வம்மின்' என்றலும்,
குருகுலம் தழைக்க வந்த குமரன், அன்பு கூரவே
உருகி, 'நன்று!' எனத் தழீஇ, உகந்து, உளம் தருக்கினன். 63

விசயனும் கன்னனும் வெகுண்டு பேசுதல்

அனந்தரம், 'பொரற்கு நீகொல் அந்தரம் எனக்கு?' என,
தனஞ்சயன் செயிர்த்தல் கண்டு, தபனன் மைந்தன் மீளவும்,
'முனைந்த போரின் முடி துணித்து, உன் முக சரோருகத்தினால்,
சினம் தணிந்து, அரங்க பூசை செய்வன்' என்று சீறினன். 64

'சூதன் மகனை கன்னன் வெகுண்டு உரைத்தது தக்கது அன்று' என்று கிருபன் கூற, துரியோதனன், 'சாதிபேதம் கருதுதல் தகாது' எனல்

அதிருகின்ற எழிலிபோல் அருச்சுனன்தனைக் குறித்து
எதிருகின்ற வன்மை கண்டு, யாவரும் திகைக்கவே,
முதிருகின்ற மெய்யன் ஆகி முன் இருந்த கௌதமன்,
உதிருகின்ற அமுத விந்து ஒக்கும் என்ன, உரைசெய்வான்: 65

'சூதன் மைந்தன் வேலை ஏழும் சூழும் மேதினிக்கு எலாம்
நாதன் மைந்தனுடன் வெகுண்டு நவிலுதற்கு நண்ணுமோ?
ஏதம் உண்டு சால' என்ன, ராசராசன் இகலி, அக்
கோதமன்தனக்கு உளம் கொதிக்குமாறு கூறுவான்: 66

'கற்றவர்க்கும், நலம் நிறைந்த கன்னியர்க்கும், வண்மை கை
உற்றவர்க்கும், வீரர் என்று உயர்ந்தவர்க்கும், வாழ்வுடைக்
கொற்றவர்க்கும், உண்மையான கோது இல் ஞான சரிதராம்
நற்றவர்க்கும், ஒன்று சாதி; நன்மை தீமை இல்லையால். 67

'அரி பிறந்தது, அன்று, தூணில்; அரனும் வேயில் ஆயினன்;
பரவை உண்ட முனியும், இப் பரத்துவாசன் மைந்தனும்,
ஒருவயின்கண், முன் பிறந்தது; ஒண் சரத்தின் அல்லவோ,
அரிய வென்றி முருகவேளும் அடிகளும் பிறந்ததே?' 68

துரியோதனன் கன்னனை அங்கதேசத்துக்கு அரசனாக்கி, தன் ஆசனத்தில் அவனையும் ஒருங்கு இருக்கச் செய்தல்

என்று நல்ல உரை எடுத்து இயம்பி, ஏனை இழிவினோடு
ஒன்றி நின்ற ஆடகத்தை ஓட வைக்குமாறுபோல்,
அன்று சூதன் மதலைதன்னை அங்க ராசன் ஆக்கினான்,
மின் தயங்கு முடி கவித்து, வேந்து எலாம் வியக்கவே. 69

தான் இருந்த அரிமுகம் செய் தாள் சுமந்த தவிசின்மேல்,
ஊன் இருந்த படையினானை உடன் இருத்தி, வண்டு சூழ்
தேன் இருந்த மாலை வாகு சிகரம்மீது, தெண் திரைக்
கான் இருந்த மண்டலம், கருத்தினால், இருத்தினான். 70

தவனன் மைந்தனும் சுயோதனனும் இசைந்து, தனதனும்
சிவனும் என்ன நண்பு கொண்டு, திறலுடன் சிறந்துளார்;
பவனன், உம்பர் நாயகன், பயந்த வீரர் அஞ்சவே,
'அவனி எங்கும் நமது' எனக் கொள் பெருமிதத்தர் ஆயினர். 71

துரோணன் குருகுலக் குமரரின் திறம் கண்டு மகிழ்ந்து, தன் பகைவன் யாகசேனனை வென்று வருதலே தனக்குத் தரும் குருதக்கிணை எனல்

ஆன காலை, 'எண்ணுகின்ற ஆயுதங்கள் யாவையும்,
யானை, வாசி, இரதம், ஆன யானம் உள்ள யாவையும்,
சேனையோடு தெவ்வரைச் செருக்க வல்ல வீரமும்,
மான வீரர் வல்லர்' என்று, மறைவலாளன் மகிழ்வுற, 72

'வம்மின், ஆதி குருகுலம் தழைக்க வந்த மைந்தர்காள்!
தம்மின், நாளையே, எமக்கு அளிக்க நின்ற தக்கிணை;
எம் இனன் ஒருத்தன், வேறு, யாகசேனன் என்று உளான்;
நும்மின் நாடி, அவனை இம்பர் நோதல் செய்து, கொணர்மினே.' 73

குருவின் விருப்பத்தை நிறைவேற்ற, குமரர்கள் பாஞ்சால நாடு சென்று முற்றுகையிடுதல்

என்று தம் சிலைப் புரோகிதன் கனன்று இயம்பவே,
அன்று அவன் பதம் பணிந்து, அளித்த சொல் தலைக்கொளா,
வென்றி நீடு படைகளோடும், விரவும் அங்கம் நாலொடும்,
சென்று, தங்கள் நாடு அகன்று, தெவ்வு நாடு குறுகினர். 74

ஆளி மொய்ம்பர் அம் முனைக்கண் ஆன போது, அனிகினித்
தூளி கண் புதைத்த, சென்று; செவி புதைத்த, துவ்வரி போய்;
ஒளி கொண்ட செம் பொன் வெற்பின் உடல் புதைத்த எழிலிபோல்,
வாளி கொண்ட விருதர், மா மதில் புறம் புதைக்கவே, 75

போரில் துரியோதனாதியர் பின்னிட, விசயன் துருபதனை அகப்படுத்தி, தனது தேரிலே கட்டி, குருவின் முன்னர்க் கொண்டுவருதல்

வளைத்த சேனை, யானை, வாசி, வாயில் நின்று குமுறவே,
உளைத்து எழுந்து முழையை விட்டு உடன்ற சிங்க ஏறுபோல்,
திளைத்த தன் பதாதியோடு மோக யாகசேனனும்,
இளைத்த நெஞ்சன் அன்றி, நீடு புரிசை வாயில் எய்தினன். 76

சோமகர்க்கும், முடுகு சேனை சூழ வந்த குருகுலக்
கோமகர்க்கும், வெஞ் சமர் விளைந்தது, ஆண்மை கூரவே;
பூமகற்கும் மிக்க மா முனிக்கு வாய்மை பொய்த்த அம்
மா மகற்கும், விசயனுக்கும், மன்னு போர் வயங்கவே, 77

தூறு கொண்டு கணை பொழிந்து சோமகேசர் பொருதலால்,
நூறு கொண்ட குமரர் தங்கள் நகரி மீள நோக்கினர்;
மாறு கொண்டு விசயன் வீசு வண்ண வாளி வலையினால்,
வீறு கொண்டு எதிர்ந்த மன் விலங்கர் ஈடுபட்டதே. 78

தகப் படும் சராசனத் தனஞ்சயன் கை வாள் வெரீஇ,
அகப்படும் தராதிபன்தன் அற்ற வில்லின் நாணினால்,
மிகப் படும் தடங் கொள் தேர்மிசைப் பிணித்து, விசையுடன்,
நகப்படும் செயற்கை செய்து, குருவின் முன்னர் நணுகினன். 79

யாகசேனனைத் துரோணன் எள்ளி உரையாடி, அவனுக்கு உயிர் வாழ்வும் பாதி அரசும் உதவுதல்

முறுவல் கொண்டு, கண்ட சாப முனியும், 'நாண, எம்மை, நீ
உறுவது ஒன்றும் உணர்கலாது, உரைத்த புன் சொல் அறிதியே?
மறு இல் அந்தணாளன் யானும்; மன்னன் நீயும்; வாசவன்
சிறுவன் வென்று உனைப் பிணித்த சிறுமை என்ன பெருமையோ? 80

'அன்று எனக்கு நீ இசைந்த அவனி பாதி அமையும்; மற்று
இன்று, உனக்கு நின்ற பாதி யான் வரைந்து தருகுவன்;
குன்று எனக் குவிந்து இலங்கு கொற்ற வாகு வீரனே!
உன்தனக்கு வேண்டும்' என்ன, உயிரும் வாழ்வும் உதவினன். 81

யாகசேனன் அவமானத்தோடு ஊருக்குத் திரும்புதல்

புயங்கம் பருகி உமிழ் மதியம் போல்வான், மீண்டு, பூசுரன்தன்
வயங்கும் சுருதி வாய்மையினால் மன்னும் குருக்கள் பதி நீங்கி,
தயங்கும் சிலைக் கை வாள் விசயன் சயமும், பிறர் முன் தான் அகப்பட்டு
உயங்கும் செயலும், நினைந்து நினைந்து, உள்ளம் சுடப் போய் ஊர் சேர்ந்தான்.

துரோணனைக் கொல்ல ஒரு மகனையும், விசயனை மணக்க ஒரு மகளையும்,
பெறவேண்டி, யாகசேனன் முனிவரரை வேண்டுதல்

மறுகில் பணிலம் தவழ் பழன வள நாடு உடையான், எதிர் வணங்கி,
முறுகிப் புரி வெங் கலைக்கோட்டுமுனியே போலும் முனிவரரை,
தறுகண் குருவின் தலை துணிக்கத் தக ஓர் மகவும், தனஞ்சயன் தோள்
உறுகைக்கு ஒரு பூங் கன்னியையும், பெறுவான் வேண்டி உற்று இரந்தான். 83

உபயாசனும், யாசனும் துருபதனுக்காகச் செய்த வேள்வியில் முதலில்
திட்டத்துய்மன் தோன்றுதல்

ஆறுமுகனைப் பயந்த நதி அலையால் குளிர்வது ஒரு கானில்,
ஈறு இல் தவத்தோர் உபயாசன், யாசன், எனும் பேர் இருவோரும்,
கூறும் முறையில் சடங்கு இயற்றி, கோவின் வழக்கப் பெரு வேள்வி,
நூறுமகத்தோன் நிகர் அரசை நோன்மைக்கு இசைய, புரிவித்தார்.

புரிந்த மகப்பேற்று அழல் வேள்விப் பொன்று ஓமப் பொருள் மிச்சில்,
பரிந்து, விபுதர் அமுது ஏய்ப்பப் பைம் பொற் கலத்தில் நிறைத்து, ஆங்குத்
தெரிந்த மணிப் பூணவன் தேவிக்கு அளிக்க, தீண்டாள் ஆகியபின்,
சொரிந்து கனலின், உபயாசன், இமைப்பில் சுதனைத் தோற்றுவித்தான். 85

வலையம் பிறழ, முடி தயங்க, மணிக் குண்டலம் பேர் அழகு எறிப்ப,
சிலையும் கையும், மெய்யும் வயம் திகழ் போர் வயிரக் கவசமுமாய்,
கொலை வெஞ் சிங்கக் குருளை பொலங் குன்றின்புறத்துக் குதிப்பதுபோல்,
தலைவன் களிக்க, தடந்தேர்மேல் தனயன் ஒருவன் தலைப்பட்டான்.

தேரோடு அருக்கன் அருண மணிச் சிமயத்து உதிப்ப, செவ்வியுடன்
நீர் ஓடையில் செந்தாமரைகள் நிறம் பெற்று அலர்ந்து நின்றனபோல்,
வீரோதயன் வந்து உதிப்பளவில், மேன்மேல் மகிழ்ந்து, மெய் சிலிர்த்து,
பாரோர் கண்கள் களித்தனவால், பார்க்கும்தோறும் பரிவுற்றே. 87

சங்கச் சங்கம் மிக முழங்க, சாந்தும் புழுகும் எறிந்து ஆர்த்து,
துங்கக் கொடியும் தோரணமும் தொடையும் பரப்பி, சோமகன் நாடு
அம் கண் சயந்தன் அவதரித்த அமராவதிபோல் ஆர்வம் எழ,
திங்கட் குழவி உற்பவித்த திசை போன்றன, எண் திசை எல்லாம். 88

பின்னர், திரௌபதி தீயில் தோன்றுதல்

பின்னும், கடவுள் உபயாசன் பெருந் தீப்புறத்து, சுருவையினால்,
மன்னும் கடல் ஆர் அமுது என்ன வழங்கு சுருதி அவி நலத்தால்,
மின்னும் கொடியும் நிகர் மருங்குல், வேய்த்தோள், முல்லை வெண் முறுவல்
பொன்னும் பிறந்தாள், கோகனகப் பூமீது எழுந்த பொன் போல்வாள். 89

வேள்விக் களத்தில் எழுந்த அசரீரி வாக்கு

'மண்மேல் ஒருத்தி அரக்கர் குலம் மாளப் பிறந்தாள்; வாமன் நுதல்
கண்மேல், இன்றும் இவள் பிறந்தாள், கழல் காவலர்தம் குலம் முடிப்பான்;
எண் மேல் என்கொல் இனி?' என்று, ஆங்கு எவரும் கேட்ப, ஒரு வார்த்தை
விண்மேல் எழுந்தது, அவன் புரிந்த வேள்விக் களத்தினிடை அம்மா! 90

மகப் பெற்ற துருபதனின் பெரு மகிழ்ச்சி

முன் தோன்றிய தன் குல முதலால் முரண் போர் முனிக்கு முடிவும், அவன்
பின் தோன்றிய அக் கன்னிகையால் விசயன் தனக்குப் பெரு நலமும்,
உற்று ஓர்ந்து, உள்ளம் மிகத் தருக்கி, உவந்து ஆங்கு அமைந்தான்;—உயர் மகத்தால்
பெற்றோன் பெற்ற பேறு, மகப் பெற்றார்தம்மில் பெற்றார் யார்? 91

திட்டத்துய்மன் துரோணரிடம் வில் வித்தை பெறுதல்

கரணம் மறு அற்று இலங்கு திறல் கலைசொல்பவன்பால், கனல் பயந்தோன்,
சரண மலர் தன் தலைக் கொண்டு, 'தனு நூல் எனக்குத் தருக!' என்றான்;
'மரணம், இவனால் தனக்கு' என்பது உணர்ந்தும், குருவும் மறுது, அளித்தான்;—
அரணியிடத்தில் செறிந்து அன்றோ அதனைச் செகுப்பது அழல் அம்மா! 92

திருதராட்டிரன் முதலியோர் தருமனை நன்கு மதித்தல்

இவ்வாறு அமைந்து, ஆங்கு ஐவருடன் ஈர்-ஐம்பதின்மர் நனி வளர,
மை வான் மீனின் பல் கோடி மன் வந்து இறைஞ்சிப் புடை சூழ,
தெவ் ஆறிய வெம் பெருஞ் சேனைத் திருதராட்டிரனும், தம்பியும், 'மற்று
ஒவ்வார் இவற்கு' என்று, உதிட்டிரனை ஒழுக்கத்து அழகால் உட்கொண்டார். 93

பூதி நலம் திகழ் பூரு குலத்திற்கு
ஆதிபன் ஆகி, அநங்கனை வென்றோன்,
'நீதியினாலும் நிறைந்தனன், நுண் நூல்
ஓதிய கேள்வி உதிட்டிரன்' என்னா, 94

வீடுமன் தருமனுக்கு இளவரசு முடி சூட்டுதல்

மைந்தருடன் செயல் வழு அற எண்ணி,
குந்தி பயந்தருள் குரிசிலை, 'இவனே
இந்த நிலைக்கு இனி இளவரசு' என்று, ஆங்கு
அம் தண் மதிக்குடை முடியொடு அளித்தான். 95

சந்தனுவின் திரு மரபு தயங்க,
செந் திரு மேவரு சிறுவனும், அப்போது,
இந்துவொடு ஆதபன் இருவரும் அன்பால்
வந்து தழீஇ, மெய் வயங்கினன் ஒத்தான். 96

துரியோதனன் பொருமை கொண்டு, தந்தையோடு உரையாடுதல்

துன்மதியான சுயோதனன்—மாழ்கி,
தன் மதியால், அருள் தந்தையை எய்தி,
புன் மதி ஆம் உரை சிற்சில் புகன்முன்—
மன் மதி யாதும் மதித்தல் இலாதான். 97

'உன் பதம் யாவும் உதிட்டிரனுக்கே
மன்பதையோடு வழங்கினே, எந்தாய்!
அன்புஅது இலா அவன் அனுசர் மதத்தால்,
என் பதம் அம்ம இறந்ததை இன்றே!' 98

என்றலும், மைந்தனே, 'இந்து குலத்தோய்!
நின்றிலேயால், மனு நீதியில், ஐயா!
பொன்றிய எம்பி பதம் புதல்வர்க்கே
அன்றி, நுமக்கு அரசு ஆளுதல் ஆமோ? 99

'நீதி இலா நெறி எண்ணினே, நீ; இங்கு
ஓதிய வாய்மையின் உறு பொருள் இன்றால்;
ஆதிபர்ஆயவர் ஐவரும் நீரும்
மேதினி ஆளுதல் வேத்து இயல்பு' என்முன். 100

'இகல் மிகு கன்னனும், என் இளேயோரும்,
சகுனியும், உண்டு, தகும் துணே; நெஞ்சில்
உகவை இலாரொடு உறேன் இனி' என்றே,
முகம் முகுரம் புரை முதலொடு சொன்னன். 101

மைந்தன் உரையால் மனம் மாறுபட்ட திருதராட்டிரன், விதுரனுக்கும்
வீடுமனுக்கும் தன் புதல்வர்களின் போக்கைக் கூறுதல்

பாதகன் அன்று பகர்ந்த மொழிக்கே
பேதகன் ஆன பிதா மருள் எய்தா,
மேதக வாழ்வுறு வில் விதுரற்கும்,
நா தகு நல் உரை நதிமகனுக்கும், 102

'ஈண்டு இனி என் செய்வது? எண்ணுமின்!—இங்ஙன்
பாண்டவரோடு பயின்று உறையாது,
தூண்டு பரித் துரியோதனன் முதலோர்
பூண்டனர் வெம் பகை, வாழ்வு பொருதார். 103

'ஒரு திறன் இந் நகர் உறைதரின் ஒன்ருது,
இரு திறன் மைந்தரும் இகலுவர், மேன்மேல்;
அருகு அணுகாவகை அகல இருந்தால்,
மருவுறும் நண்பு வளர்ந்திடும்' என்றே, 104

விதுர வீடுமர்களின் மறுமொழி

இம் மொழி கூறலும், இருவரும் எண்ணி,
'தெம் முறை ஆயினர், சிறு பருவத்தே;
எம் உரை கொள்கலர்; இனி அவர் மதி ஏது,
அம் மதியே மதி ஆகுவது' என்றார். 105

திருதராட்டிரனும் துரியோதனனும் புரோசனன் என்னும் மந்திரியுடன்
தனி இடத்திலிருந்து, ஐவரையும் கொல்லும் வழி நாடுதல்

விதுரனும், வார் கழல் வீடுமனும், தம்
இதயம் நிகழ்ந்தது இயம்பிய பின்னர்,
பொதுமை இலாத புரோசனன் என்னும்
மதியுடை மந்திரி, 'வருக!' என வந்தான். 106

வந்த அமைச்சனும், மைந்தனும், மற்று அத்
தந்தையும், அங்கு ஒரு தனிவயின் எய்தி,
சிந்தனை செய்தனர், தீமை மனத்தோர்—
குந்தி மகார் உயிர் கோடல் புரிந்தே. 107

வாரணாவத நகரத்திற்குப் பாண்டவரை அனுப்புமாறு
தந்தையைத் துரியோதனன் வேண்டுதல்

'ஆரணாதிபர் ஆரும் புகழ்வது,
நாரணாதியர் நண்ணும் சிறப்பது,
தோரணாதி துலங்கு பொன் கோபுர
வாரணாவத மா நகர்; அங்கணே, 108

'சென்று இருக்கத் திருவாய் மலர்க!' என,
ஒன்றுபட்டு, மகன் தொழுது ஓதினான்;
அன்றுதொட்டு உயிர் அன்ன அமைச்சனால்,
நன்று பட்டது, அந் நல் நகர் எங்குமே. 109

அமைச்சன் புரோசனன் வாரணாவதத்தை அலங்கரித்தல்

சிற்ப நூலில் திருந்திய மாக்களால்,
பொற்பு அமைந்து பொலிந்தது, அப் பொன் நகர்—
கற்பகாடவி அல்லது, கண்டவர்,
'அற்பம்' என்ன, அமராவதியையே. 110

திருதராட்டிரன் பாண்டவரை வாரணாவதம் சென்று வாழப் பணித்து,
புரோசனனையும் அவனுக்கு மந்திரியாக உடன் அனுப்புதல்

அறத்தின் மைந்தனுக்கு, ஆங்கு ஒரு நாள், அவைப்
புறத்து இருந்து, புகன்றனன், காவலன்—
'திறத்து நின் இளையோரொடும் சென்று, தோள்
மறத்தினால், தனி வாழுதி' என்னவே. 111

புகன்ற கேள்விப் புரோசனன்தன்னை, 'இம்
மகன்தனக்கு நீ மந்திரி ஆகியே,
இகன்றவர்ச் செற்று, இனியோர்க்கு இனிமை செய்து,
அகன்ற ஞாலம் இவன் வழி ஆக்குவாய்.' 112

புரோசனன் பாண்டவர்களை வாரணாவதத்திற்கு அழைத்துப் போதல்

என்ன, ஆங்கண் இறைஞ்சி, அனந்தரம்
சொன்ன சொற்படி, சூழ் படை வேண்டுவ
என்னவும் கொண்டு, இளவரசோடும் அப்
பொன் நகர்க் கொடு போயினன் என்பவே. 113

வாரணாவதத்தில் சிவதரிசனம் செய்து, பாண்டவர் தம் மாளிகை புகுதல்

ஆர மார்புடை ஐவரும், குந்தியும்,
பூர ஞான புரோசன நாமனும்,
சேர வெண் பிறைச் செஞ் சடை வானவன்
வாரணாவதம் சென்று வணங்கினார். 114

அங்கு அவன்தன் அருள் பெற்று, அமைச்சன் அங்கு
இங்கிதத்தொடு இயற்றிய நீள் கொடி
மங்குல் தோய் மணி மாளிகை எய்தினார்—
சங்கம் விம்ம, முரசம் தழங்கவே. 115

பாண்டவர் அங்கு அரசாளுதல்

ஆவி அன்ன அமைச்சன் மொழிப்படி
மேவி, அத் திசை வேந்தர் குழாம் தொழ,
கோவின் ஆணை நடத்தி, குவலயத்
தேவி மெய் களிக்க, சிறந்தார்அரோ. 116

ஐவரும் அரக்கு மாளிகையைக் கவனித்து, புரோசனன் மீது ஐயுறவு கொள்ளுதல்

மன்னர் ஐவரும் வாரணாவதம்தனில் மருவி,
துன்னலார் தொழத் தொல் நிலம் புரந்திடும் நாளில்,
பின்ன நெஞ்சுடைப் புரோசனன் பேது உறு மதியால்,
முன்னமே இனிது அமைத்திடும் மனைச் செயல் முன்னா, 117

'மெழுகினால் நமக்கு ஆலயம் வகுத்ததும் விரகே;
ஒழுகுகின்ற தன் ஒழுக்கமும் வஞ்சனை ஒழுக்கே;
எழு கடல் படை யாவையும் இவன் வழியனவே;
தொழுத கையுளும் படை உள; சூழ்ச்சியும் பெரிதால்; 118

'சங்கை உண்டு; இனி, உண்டியும், சாந்தமும், பூணும்,
பொங்கு நுண் இழைத் துகிலும், அம் தாமமும், பூவும்,
இங்கு இவன் பரிந்து இயற்றிய கோடலம்' என்றார்—
கங்கை நீர் தவழ் கழனி சூழ் பழன நாடு உடையார். 119

சிற்பி ஒருவன் வீமனிடம் வந்து, மாளிகையின் நிலவறை பற்றிக் கூறி,
'தீங்கு நிகழ்ந்தபோது அதன்வழித் தப்புக!' என்றல்

ஐயம் உற்று இவர் இருப்புழி, மயனினும் அதிகன்,
சையம் ஒத்த தோள் வலனுடைத் தபதியன் ஒருவன்,
வையம் முற்றுடை வீமனை ஒரு தனி வணங்கி,
'ஐய! பட்டதை அறிந்தருள், ஆம் முறை!' என்றான். 120

'நுந்தை ஏவலின், கம்மியர் நூதனமாக
இந்த மா நகர்த் திருமனை இயற்றிடு நாளின்,
வந்த மந்திரி வஞ்சனை அறிந்து, அறன் வடிவாம்
தந்தை என்னையும் ஏவினன், தன்மையின் உணர்ந்தே. 121

'அடியனேனும், மற்றவருடன், அரக்கு மாளிகை இப்
படியினால் இயற்றிய தொழில் பயன் எலாம் குறித்து,
நெடிய கானகத்து அளவும் நீள் நிலவறை நெறி போய்
முடியுமாறு, ஒரு மண்டபம் கோட்டினேன், முழைபோல். 122

'வேறு ஒருத்தரும் அறிவுறா விரகினால், ஒரு தூண்,
மாறுபட்டு நீ பறிக்கலாம்வகை வழி வகுத்தேன்;
தேறுதற்கு இது தகும் எனத் திருவுளத்து அடக்கி,
ஊறு பட்டபோது எழுந்தருள்க!' எனப் பணிந்து உரைத்தான். 123

வீமன் சிற்பிக்குப் பரிசு அளித்து, விழிப்புடன் வாழ்ந்து வருதல்

தச்சரில் பெருந் தலைவனுக்கு, உரிமையின், தனங்கள்
பிச்சரின் கொடுத்து, அவன் விடைகொண்டதன் பின்னர்,
அச்சம் அற்று, 'இவன் நம் மனைக்கு அம்மனை வழங்கும்;
நிச்சம்; இன்றுகொல், என்றுகொல்?' என நினைந்து இருந்தான். 124

பாண்டவர் பகலில் வேட்டையாடி, இரவில் துயில் இன்றி வாழ்தல்

விடவி வன் சினை நெடுங் கொடி தழுவலின் மிடைந்த
அடவி எங்கணும், வேட்டையால், தங்கள் பேர் ஆண்மை
நடவி, நன் பகல் இரவு கண் துயிலலர், நடந்தார்—
புடவி தங்கள் வெண்குடை நிழல் குளிருமா புரப்போர். 125

புரோசனனுடன் நெருங்கிப் பழகிய பாண்டவர், ஒரு நாள் இரவில்,
அவனையும் தம் மாளிகையில் துயிலச்செய்தல்

பாந்தளோடு ஒரு மனைவயின் பயில்பவர் போல,
வேந்தர் ஐவரும், மந்திர வலியினால் மிக்கோர்,
காந்து நெஞ்சுடை அமைச்சனைக் கைவிடார் அணுகி,
தாம் தம் மெய் என உயிர் எனத் தனித்தனி சார்ந்தார். 126

ஆங்கு ஓர் கங்குலின் அழைத்து, நீடு அரசியல் உசாவி,
'ஈங்கு, நீ துயில் வைகுதி, எம்முடன்' என்ன,
பாங்கர் மெல் அணைப் பள்ளியும் பரிவு உற வழங்கி,
தாங்களும் பொலஞ் சேக்கையில் தங்கினர் அன்றே. 127

அரக்குமாளிகைக்கு வீமன் தீ வைத்து, தாயுடனும் சகோதரர்களுடனும் தப்பி, வனம் செல்லுதல்

உணர்வு அறத் துயில் உற்ற போது, அற்றம் அங்கு உணரா,
துணைவரை, 'திருத் தாய் பதம் தொழுக!' எனச் சொல்லி,
அணி கொள் கோயிலைத் தாதை நண்பனுக்கு இரை அளித்தான்—
இணை இலா அமுது உரகர் கோனிடை நுகர்ந்து இருந்தான். 128

முடியுடைத் தடங் கிரியினை முளி கழைதொறும் உற்று,
அடிநிலத்து உறச் சூழ்வருமாறுபோல், அழலோன்,
கொடி நிரைத்த பொன் கோபுரப் புரிசை சூழ் கோயில்
இடி இடித்தென வெடிபடச் சிரித்து எழுந்து, எரித்தான். 129

அக் கணத்திடை, அன்னையில் அணுகி, ஆங்கு அவரை,
தொக்க சித்திரத் தூண் அடித் துவாரமே வழியா,
பொக்கெனக் கொடு போய், அகல் வனத்திடைப் புகுந்தான்—
முக் கண் அற்புதன் முனிந்த ஊர் மூவரோடு ஒப்பான். 130

'குந்தியும் பாண்டவரும் எரிந்து வீழ்ந்தனர்' என்று காலையில் மாளிகையைக் கண்டோர் கூறுதல்

புரிந்த தீயினைக் கண்ணின் நீர் அவித்திடப் புகுந்து,
பரிந்த நெஞ்சினை மீண்டும் அப் பாவகன் சுடவே,
கரிந்த கோயிலில் கார் இருள் புலர்ந்த பின் கண்டோர்,
'எரிந்து வீழ்ந்தனர், ஐவரும் யாயும், ஈண்டு' என்றார். 131

செய்தி அறிந்து, அரசரும் முனிவர் முதலாயினரும் வருந்துதல்

விருந்தராய், விடம் இடச் செல் ஐவேடரும், தாயும்,
இருந்த தீ மதி அமைச்சனோடு இறந்தமை உணரார்,
திருந்து மா மதிப் பாண்டவர் செயலும் மற்று அறியார்,
வருந்தினர், தமது உயிர் இழந்தென—புவி மன்னர். 132

'போது பட்டு, இருள் புகுந்து, ஒளி போன வானகம்போல்,
மாது பட்ட பார்மடந்தைதன் மதிமுகம் மழுங்க,
தீது பட்டது, குருகுலச் செல்வம்!' என்று இரங்கி,
ஏது பட்டன, முனிவரர் முதலினோர் இதயம்! 133

செய்தி தெரிந்த துரியோதனனுதியரின் நிலை

கொட்பு அனல் சுட இறந்தமை கேட்டலும், குருக்கள்
துட்பதத்துடன் அழுதிடும் சுயோதனன் முதலோர்,—
உள் பனித்து, மேல் வெயில் உற வெதும்பு நீர் ஒத்தார்—
பெட்பு உறப் புவி முழுவதும் பெறும் கருத்து உடையோர். 134

பொன் நலம் கொள, மெழுகினால் ஆலயம் புனைந்து,
துன்னு வெங் கதைப் படை மருச் சுதனையே சுடுவான்,
என்ன ஆண்மைகொல் எண்ணினன்? எண்ணினும், சுடுமோ,
வன்னி தன் பெயர் மருச்சகன் என்பது மறந்தே? 135

# 4. வேத்திரகீயச் சருக்கம்

வீமன் தாயுடனும் துணைவருடனும் ஒரு மலைச் சாரலை அடைதல்

தோள் கரம் புறம்தன்னில், அன்னையும்,
துணைவர் நால்வரும், தொக்கு வைகவே,
கோள் கரந்த பல் தலை அரா என,
குகர நீள் நெறிக் கொண்டு போய பின்,
நாள்களின் கதித் தாள் பறிந்து வீழ்
தரு வனத்தது ஓர் சாரல் மன்னினான்—
மூள் கடுங் கொடுஞ் சின அனல் கண் மா
மும் மதக் களிறு அனைய மொய்ம்பினான். 1

அங்கே இடிம்பி என்னும் அரக்கி வந்து, வீமன்மேல் காதல்கொண்டு உரையாடுதல்

அவ் வனத்தில் வாழ் அரமடந்தை என்று
ஐயம் எய்த, ஓர் அடல் அரக்கி வந்து,
'இவ் வனத்தில், இந் நள் இயாமம், நீ
என்கொல் வந்தவாறு? இவர்கள் யார்?' என,
செவ் வனத்து இதழ்க் கூர் எயிற்று எழும்
தெள் நிலாவினில் திமிரம் மாறவே,
வெவ் அனல் சுடர்க்கு ஒத்த ஓதியாள்,
வீமசேனனோடு உரை விளம்பினாள். 2

'யானும் வந்தவாறு உரைசெய்கேன், நினக்கு;
உரைசெய் நீ எனக்கு, யார்கொல்?' என்னலும்,
தானும் அங்கு அவன்தன்னொடு ஓதுவாள்,
தழுவும் ஆதரம் தங்கு சிந்தையாள்:
'ஊன் உகந்து தின்றிடும் இடிம்பன் என்று
ஒருவன் இங்கு இராவணியை ஒத்து உளான்;
மானுடம் கொள் மெய்க் கந்தம் ஊர்தலால்,
வரவு அறிந்தனன், வாள் அரக்கனே. 3

'எம்முன் ஏவலால், யான் மலைந்திடற்கு
எய்தினேன்; நினைக் கொன்றும் என் பயன்?
அம்ம வெற்பு இரண்டு அனைய பொன் புயத்து
அழகு எறிக்கும் நீடு ஆர மார்ப! கேள்:
''கொம்மை வெம் முலைத் தெரிவையர்க்கு உளம்
கூசும், ஆசை நோய் கூறுகிற்பது'' என்று
எம்மனோர்களும் சொல்வர்; யான் உனக்கு
எங்ஙனே கொலாம், இறுதி கூறுகேன்? 4

'பெருஞ் சுழிப் படக் கரை புரண்டு எழப்
பெருகும் யாறு, பின், பிறழ் கலங்கல் போய்,
அருஞ் சுவைப் படும் தெளிவினோடு சென்று,
ஆழி வேலைவாய் அணையுமாறு என,
பொருஞ் சினத்துடன் கொன்று தின்றிடப்
போதரும் தொழில் பேதை நான் மெலிந்து,
இருஞ் சிறைச் சுரும்பு இசைகொள் மாலையாய்!
இன்ப மால் உழந்து, உன்னை எய்தினேன். 5

'நீடி இங்கு நான் நிற்கின், மாரனும்
நிருதன் நிற்க, அந் நிருதன் வெம்மையோடு
ஓடிவந்து, எனைக் கொல்லும்; உம்மையும்,
ஒரு கணத்திலே உயிர் செகுத்திடும்;
நாடி என்கொல், மற்று? உய்ந்து போகலாம்;
நம்பி, என்னை நீ நலன் உறத் தழீஇக்
கோடி; அம்பரத்திடை எழுந்து, உனைக்
கொண்டு போவல், ஓர் குன்றில்' என்னவே. 6

அவளது வேண்டுகோளை வீமன் மறுத்தல்

'இரக்கம் இன்றியே, தனி வனத்திலே
இளைஞர், எம்முன், யாய், இவரை விட்டு, ''எமைப்
புரக்க வல்லள்'' என்று, ஒரு மடந்தைபின்,
போவது ஆடவர்க்கு ஆண்மை போதுமோ?
வரைக்கண் வாழ்வு கூர் நும்முன், எம் முனே
மலைய எண்ணி, மேல் வந்தபோது பார்!
அரக்கன் ஆகில் என்? அவுணன் ஆகில் என்?
அவனை ஓர் கணத்து, ஆவி கொள்வனே. 7

இடிம்பன் வந்து, தங்கையை வெகுண்டு மொழிதல்

இடிம்பைதன் மனம் கொண்ட காளை, இங்கு
இவை இயம்பலும், நவை இடிம்பனும்,
கொடும் பெருஞ் சினம் கதுவு கண்ணினன்,
குருதி நாறு புண் கூர் எயிற்றினன்,
உடம்பு பெற்றது ஓர் இருள் முகத்திலே
ஓர் இரண்டு வெஞ் சுடர் உதிக்கவும்,
நெடும் பிறைக் கொழுந்து ஓர் இரண்டு வால்
நிலவு எறிக்கவும், நின்ற நீர்மையான், 8

இடி படுத்து எழுந்து, எழிலி மின்னுமாறு
என்ன, நீடு குன்று எதிர் ஒலிக்கவே,
வெடி படச் சிரித்து, இரு புறத்து நா
மிளிர, உள் புகைந்து, ஒளிரும் வாயினன்,
நெடி படுத்த வெங் கானம் எங்கணும்
நிழல் படுத்தி வான் உற நிமிர்ந்துளான்,
கொடி படுத்த நுண் இடை இடிம்பையைக்
கூவி, அவ் இடைக் குறுகினன்அரோ. 9

'உணவின் ஆசையால் கொல்ல வந்த நீ,
உவகை ஆசையால் உள் அழிந்து, '' இவன்
கணவன் ஆம்'' எனக் காதலிப்பதே!
கங்குல்வாணர்தம் கடன் இறப்பதே?
அணவு வெம் பசிக் கனல் அவிந்து போய்,
அநங்க வெங் கனல் கொளும் அடல் புலிப்
பிணவை அன்பினின் கலை நயப்பதே?
பேதை! மானுடன் பேசுகிற்பதே? 10

இடிம்பன் வீரம்பேசி, வீமனுடன் போர் செய்து, இறத்தல்

'வார், அடா! உனக்கு யாதுதானர்தம்
மகள் அடுக்குமோ? வான மாதர் தோள்
சேர் அடா; மலைந்து, உயிரை, மெய்யினைத்
தின்று, தேவர் ஊர் சேருவிப்பன் யான்;
போர் அடாது, உ(ன்)னேடு; ஆளிஏறு புன்
பூனைதன்னுடன் பொர நினைக்குமோ?
பார் அடா, என் ஆண்மையை! அரக்கர் கைப்
பட்ட போதில் யார் பாரில் வைகினர்?' 11

என்று, சீறி, மற்று இவன் அடுத்தல் கண்டு,
இணை இலா விறல் துணைவர் நால்வரும்,
நின்ற யாயும், மற்று ஒரு புறத்திலே
நிற்க, மையல் கூர் நிருதவல்லியும்,
வென்றி நல்குமா வந்த விந்தைபோல்,
விழி பரப்ப,மேல் வீமசேனனும்
சென்று, கைகளால் பற்கள் நாவுடன்
சிதற, வாயினில் சென்று குத்தினன். 12

குத்தினான், தீயவன்; குணபவல்சி தன்
கூர் நகக் கரம் கொண்டு வீமன்மேல்
மொத்தினான்; முனைந்து, இருவரும் பொருதார்,
முரணுடன் சினம் மூளமூளவே,
தத்தினார்; பிடுங்கிய மரங்களால்
சாடினார்; புய சயிலம் ஒன்றொடு ஒன்று
ஒத்தினார்—இரண்டு அம்புதங்கள் வான்
உரும் எறிந்தது ஒத்து, ஓசை மிஞ்சவே. 13

வளர்ந்த திண் கருங் குன்று காந்தளை
மலர்வது என்னவும், வானகம் படக்
கிளர்ந்த செம் புண்நீர் பொசியும் மெய்யினன்,
கேத நெஞ்சினன், கோத வாய்மையன்,
தளர்ந்து வீழ் நிசாசரனும், அடகன்-
தன்னை ஒத்தனன்; பின்னை முன் உறப்
பிளந்த கோள்அரிதன்னை ஒத்தனன்,
பிரதை என்னும் மின் பெற்ற காளையே. 14

வீமனது ஆற்றலைக் குந்தி மகிழ்வுடன் நோக்குதலும், தருமன் முதலியோரின் மகிழ்ச்சியும்

வன் திறல் இடிம்பனை, வயக் கையால், உடல்
ஒன்று இரண்டு ஆகுமாறு உடன்ற மைந்தனை,
அன்று கண்டனள், யாய்—அரியின் போத்து தன்
கன்று திண் கரி பொரக் கண்டது என்னவே. 15

இளைஞரும் தம்முனும், 'இவன் அரும் பகை
களைகுவன், இனி' என, கண் களித்தனர்;
விளைவு உறு காதலால் மெலிந்த பாவையும்,
உளைவுடன் உவகையும் ஒருங்கின் எய்தினாள். 16

பெருந் திறல் நிசாசரப் பிணத்தை, அவ் வனத்து
இருந்துள பறவைகட்கு இருள் செய் கங்குலின்
விருந்து இடக் கொளுத்திய விளக்கு எனும்படி,
அருந் திசை பொலிவுற, அருக்கன் தோன்றினான். 17

கரங்களால் நிசாசர இருளைக் காய்ந்துகொண்டு,
இரங்கி, நீள் வனத்திடை இரவில் மாழ்கிய,
வரங் கொள் தாமரை முகம் மலர்த்தும் நீர்மையால்,
உரங் கொள் வீமனுக்கு எதிர், உதய பானுவே. 18

இடிம்பையின் காதல் குறிப்பை உணர்ந்து, வீமன் மணம் மறுத்து உரைத்தல்

என் தகு கவர் மனத்து இடிம்பை, மன்மதன்
மண்டுஎரி சுடுதலின், வாடும் மேனியள்,
கொண்ட வெங் காதலின் குறிப்பை, அவ் வழிக்
கண்டனன்—காணலற் செற்ற காளையே. 19

'மாய்ந்தவன் துணைவி! கேள்: வதுவை இன்னமும்
எய்ந்திலன், எம்முனும்; யாங்கள் மானுடர்;
ஆய்ந்துகொள் முறைமையால் அரக்கர் பாவை நீ;
காய்ந்தமை அறிதி, முன், கணை இராமனே. 20

குந்தி மைந்தரோடு உசாவி, இடிம்பையை மணக்குமாறு வீமனுக்கு உரைத்தல்

ஆசை கொள் அரக்கியோடு அனிலன் காதலன்
பேசிய கட்டுரை கேட்ட பெற்ற தாய்,
'ஓசை கொள் மைந்தரோடு உசாவி, நண்பினால்,
ஏசு அற உரைத்தனள், இனிமை கூரவே: 21

'மறுத்து உரைப்பது கடன் அன்று; மாந்தருக்கு
அறத்து இயல், ஆர்கணும் அமைதல் வேண்டுமால்;
உறத் தகும் இவளை நீ, உம்முன் வாய்மையால்;—
கறுத்தவர் உயிர் கவர் காளை!' என்னவே. 22

அங்கு, வியாதமுனி வந்து, பாண்டவர்க்கு நன்மொழி கூறுதல்

அத் தினத்து, அவர்வயின் அவலம் நீக்குவான்,
மெய்த் தவப் பழ மறை வியாதன் வந்தனன்;
பத்தியின் சிறுவரும் பணிந்து போற்றினார்;
முத்தி பெற்றவரினும் முற்றும் சிந்தையார். 23

'தனி வனம் இகந்து, நீர் சாலிகோத்திர
முனி வனம் சில பகல் வைகி, முந்துற,
மனன் உறப் பார்ப்பன மாக்கள் ஆகியே,
இனிமையின் வேத்திரகீயம் எய்துவீர்!' 24

முனிவர் உரைத்தபடியே பாண்டவர்கள் முற்படச் சாலிகோத்திர வனம் சார்தல்

எனத் தம படர் ஒழித்து, இமையவன் செல,
வனத்தை விட்டு அவ் வனம் மருவி வைகினார்—
வினைப்படுத்து, யாழினோர் முறையின் வேள்வி செய்
கனக்குழல் கன்னிதன் காதலாளொடே. 25

இடிம்பையும் வீமனும் காதல் கூரக் கூடி வாழ்தல்

குந்தியை, இரவும் நன் பகலும், கோது இலா
வந்தனை புரிதலின், மகிழ் இடிம்பையும்,
வெந் திறல் வீமனும் விழைந்து, வள்ளியும்
கந்தனும் என, பெருங் காதல் கூரவே, 26

மான்மதம் கமழ் கொடி மந்திரம்தொறும்,
கான் மணம் கமழ் தடங் கா அகம்தொறும்,
தேன் மிகு சுனை நெடுஞ் சிலம்பு அகம்தொறும்,
மேல் மணம் புரிந்தனர், வேட்கை விஞ்சவே. 27

இடிம்பை கடோற்கசன் என்னும் புதல்வனைப் பெறுதல்

நிறம் திகழ் இருட் பிழம்பு என்ன நீண்டு, அறப்
புறம் தரும் உரோமமும், பொருப்புத் தோள்களும்,
மறம் தரு சுனை குரல் வாயும், ஆகவே,
பிறந்தனன்—கடோற்கசன் என்னும் பேரினன். 28

தந்தையரிடம் விடைபெற்று, கடோற்கசன் தாயுடன் செல்லுதல்

காதிய திறல் நரகாசுரன்தனை,
ஆதி வெங் கோலம், அன்று அளித்த ஆறுபோல்,
மேதினி மதித்த போர் வீமன் நல்கிய,
சோதி அம் புதல்வனும் தொழுது சொல்லுவான்: 29

'நிறையுடைத் தந்தையர்! நீர் நினைத்த போது,
உறைவு இடத்து எய்தி, ஆங்கு உரைத்த செய்குவேன்;
இறைவ! இப் பணி, விடை, தருக!' என்று ஏகினன்,
பிறை எயிற்று யாயொடும், பெற்ற பிள்ளையே. 30

ஐவரும் அந்தண வேடம் பூண்டு, தாயுடன் வேத்திரகீய நகரம் சேர்தல்

சாத்திரம் மறை தெரி முனிவர் தன்மையின்
காத்திரம் மாறி, அக் காவல் வேந்தரும்,
கோத்திரம், சூத்திரம், குடி, உரைத்துளார்,
வேத்திரகீய மா நகரில் மேயினர். 31

அந் நகர் வாழும் அந்தணர்களின் விருந்தினராய் ஐவரும் அன்னையும் வாழ்ந்து வருதல்

அந்தணர் ஐவரும், யாயும், அந் நகர்
வந்துழி, அதிதியர் வரவு காண்டலும்,
முந்துபு முந்துபு முகமன் கூறினர்,
செந் தழல் வேள்வி கூர் ஆதிதேயரே. 32

நல் மனைவாழ்க்கையில் நயந்த சிந்தையான்,
மன் மனை அனைய தன் மனையில், ஓர் முனி,
தன்மனை, 'அம்மனை தம்பிமாரொடும்
என் மனை வருக!' என எதிர்கொண்டு ஏகினன். 33

ஒரு தினத்து அமுது என, உள்ள நாள் எலாம்,
வரும் முறைப்படி விருந்து அயின்று வைகினர்;—
அரு நெறிக் கடவுளர்க்கு அமுதம் ஊட்டுதல்
இருபிறப்பாளருக்கு என்றும் தன்மையே. 34

பொன்னகர் அணுகினர் போல நெஞ்சுற,
தம் நகர் எனும்படி, தாயும் மைந்தரும்,
இந் நகர் அநேக நாள் இருந்த எல்லையில்,
அந் நகர் புரிந்தது ஓர் ஆண்மை கூறுவாம்: 35

பாண்டவர் வசித்த வீட்டுக்கு உரிய பார்ப்பனி ஒரு நாள் அழுது புலம்புதல்

மறையும் உருவினொடு அரிய குரு குல
மகிபர் நெடு வன சரிதராய்,
உறையும் வள மனை உடைய மடவரல்,
உருகு பிரதைதன் உயிரனாள்,
குறைவு இல் பொலிவினள்; விரத நெறியினள்;
குழுவு நிதியினள்; கொடுமையால்,
இறையும் ஒழிவு அற இரு கண் அறல் வர,
எரி கொள் கொடி என இனையினாள். 36

'அழுவது என்?' என்று குந்தி வினவ, அந்தணன் மனைவி பகன் என்னும் அசுரன் செய்தியை உரைத்தல்

'மறுகி அழுவது என்? மொழிக, முனிவரன்
மனைவி!' என இவள் வினவலும்,
குறுகி, அவளுடன் உரைசெய்குவள், உறு
குறையை உளம் நனி குறையவே:
'முறுகு சின அனல் பொழியும் விழியினன்,
முகன் இல் பகன் எனும் முரணுடைத்
தறுகண் நிசிசரன், உளன்; இவ் வள நகர்
தழுவும் வனன் உறை தகுதியான்; 37

'அருள் இல் இதயமும், நெறி இல் சரிதமும்,
அழகு இல் உருவமும், அதிர் குரல்
பொருள் இல் உரைகளும், உடையன்; முழுது உடல்
புலவு கமழ்தரு பொறியினன்;
மருளும் நரியொடு கழுகு தொடர்தர,
வலிய பிணம் நுகர் சுவை அறுது,
இருளின்மிசை இரு பிறைகள் என வளை
எயிறு நிலவு எழும் இதழினன்; 38

'அந்தகனும் மிக அஞ்சி முதுகிடும்
அந்த நிசிசரன், இந்த ஊர்
வந்து, குடியொடு கொன்று, பலரையும்
மன்ற மறுகிடை தின்ற நாள்,
எந்தை முதலிய அந்தணரும், அவன்
இங்கு வருதொழில் அஞ்சியே,
சிந்தை மெலிவுற நொந்து, தலைமிசை
சென்று குவிதரு செங் கையார், 39

' ''ஒன்றுபட, எதிர் கொன்று, பலர் உயிர்
உண்பது அறநெறி அன்று, நீ;
இன்றுமுதல் இனி என்றும், முறை முறை
எங்கள் மனைதொறும், விஞ்சையோர்
குன்றம் என ஒரு பண்டி அறு சுவை
கொண்ட அடிசிலும், நம் குலம்
துன்றும் நரபலி ஒன்றும், இவை திறை
தொண்டு புரிகுவம்'' என்றலும், 40

'அன்றுமுதல் அடல் வஞ்சகனும், இறை
அன்பினொடு பெறு வன்பினால்,
என்றும் நிலைபெற, உண்டியுடன் மனை
எங்கும் இடுபலி எஞ்சுறத்
தின்று திரிகுவன்; இன்று என் மனை முறை;
சென்று பணி கவர் திங்கள்போல்
நின்று தளர்வுறுகின்றது எனது உயிர்;
நெஞ்சம் இலது, ஒரு தஞ்சமே. 41

'கன்னி இவள் பிறர் பன்னி; எனது இரு
கண்ணின் மணி நிகர் சன்மனும்,
மன்னு குல முதல்; பின்னை ஒருவரும்
மண்ணின் உறு துணை இன்மையால்,
இன்னல் பெரிது உளது; என்ன புரிகுவது
என்ன அறிகிலன்; அன்னை! கேள்:
முன்னை மனை நிகழ் தன்ம முனிவனை
முன்னில், இடர் நனி துன்னுமால்.' 42

தன் மக்களுள் ஒருவனை அனுப்பலாம் என்று குந்தி பார்ப்பனியைத் தேற்றி, வீமனது வலிமையையும் கூறுதல்

ஏதம் அற உறவான மனைமகள்
யாவும் உரைசெய, யாதவன்
நீது இல் குலமகள் ஆர்வமுடன் அவள்
தேற ஒரு மொழி கூறுவாள்:
'ஆதி அநுமனொடு ஓதும் உவமையன்,
ஆடல் வலியுடை ஆண்மையான்,
மோதி, மிகு திறல் யாம சரிதனை,
மூளை உக, உடல் கீளுமே. 43

'கொவ்வை இதழ் மட நவ்வி! அலமரல்;
குவ்வின் அனலினும் வெவ்வியோர்,
ஐவர் உளர், சுதர்; கை வில் விறலினர்;
அவ்வியமும் இலர்; செவ்வியோர்;
இவ் இவரில் எமை உய்வு கொளும் அவன்,
எவ் எவ் உலகையும் வவ்வு திண்
பௌவம் என, நனி தெய்வ முனிவரர்
பைதல் அற, நெறி செய்வனே. 44

அந்தணனும் மனைவியும் பகனுக்கு அனுப்பும் பொருட்டு உணவு ஆக்குதல்

'அவனை இடு பலி அருளுக!' என மொழி
அளவில், மறலியும் உளைவுறச்
சிவனை வழிபடும் மகவை அருளிய
செனக செனனியர் நிகர் என,
தவனில் முதிர்தரு முனியும், வழுவு அறு
தனது இல் அறனுடை வனிதையும்,
துவனி அற, மன மகிழ்வொடு, இனிது அறு
சுவைகொள் அமுது அடு தொழிலராய், 45

தன் தரள மலை, வெண் கயிலை மலை,
சங்க மலை, என நங்கைமார்
மொண்டு சொரிதருகின்ற அடிசிலும்,
முந்து கறிகளும், வெந்த பால்,
மண்டு நறு நெ(ய்)யொடு அந்த விடலையும்,
மைந்தர் அனைவரும், உண்டு, தம்
பண்டி நிறைவுறு பின்பு, பிறிதொரு
பண்டி கெழுமிய, பண்டமே, 46

வீமன் அணிசெய்துகொண்டு, உணவு வண்டியை வனத்திற்கு
ஓட்டிச் சென்று, பகனை நாடுதல்

வையம் முழுதுடை ஐயன் இளவலும்,
வைகலுடன், மனை வைகுவோர்
உய்யும் வகை புகல் ஐயை உரையினை
ஒய்யென் விரைவொடு கைகொளா,
வெய்ய பகன் உடல் பெய்த குருதியின்,
மெய்யை எழில் அணி செய்தனன்—
செய்ய மலர்கொடு, செய்ய துகில்கொடு,
செய்ய கலவையின் மொய் கொடே. 47

துற்ற பல கறி செற்றி அமலை செய்
துப்பு, ஓர் இமகிரி ஒப்பென,
சற்றும் இடன் அற மொய்த்த சகடு இரு
சக்ர உருளைகள் உய்க்கவே,
உற்ற நிரைநிரை பத்திபட வலி
ஒத்த பகடுகள் கட்டினன்;
நெற்றிமிசை ஒரு கொற்ற அடல் அரி
நிற்பதென ஒளிர் பொற்பினன். 48

மண்டலம் கொள் வடிவுடன், அடல் பரிதி,
மண்ணில் வந்ததென, மறுகினில்
கண்ட கண்ட முனி குலம் அடங்க இரு
கண் களிக்க வரு காட்சியான்,
வெண் தரங்கம் என வீசு பேய்இரதம்
மிஞ்சு கானநெறி மீது போய்,
அண்டர் அண்ட முகடு உற வளர்ந்தனன்,
அரக்கன் நின்ற உழி அறியவே. 49

வீமன் பகனைக் காணுதலும், வண்டியில் உள்ள சோற்றை அள்ளி உண்ணுதலும்

களிந்த வெற்பு உதவு நீல மா நதி
அடுத்த குன்றில் ஒரு கழிமுழை,
தெளிந்த பற்களொடு நாவை மென்று நனி
தின்று, வெம் பசி கொள் தீயினால்,
முளிந்து முற்றும் மனம் வேவவேவ, நெடு
மூச்சு எறிந்து, புகை முகனுடன்,
விளிந்தது ஒத்து வழி குழிய நின்று, சுழல்
விழி நிரைத்து, அயரும் வெகுளியான், 50

வெற்று எலும்பின் உயர் ஆசனம்தனில்,
விகங்க நீழலிடை மேவர,
சுற்றும் நின்று பல சம்புகங்கள் துதி
சொல்ல, அல்லல் மிகு துன்முகன்
உற்று நின்ற நிலை கண்டு, உகந்து, 'இவனை
உயிர் ஒழிந்திட உடற்றினல்,
இற்றை உண்டி கெடும்' என்று, பண்டியில்
எடுத்த வல்சி நுகர் இச்சையான், 51

வன்பினல் உரக பதி அளித்த நெடு
வாரி ஆர் அமுதம் உண்ட கோ,
முன் பின் ஆக உயர் சகடு இருந்து, எதிர்
முகந்துகொண்டு, வரை முறையுளே
அன்பினல் அடையும் அன்னம் என்ன, நிறை
அன்னம் முற்றவும் அருந்தினன்;
பின்பின் ஆக இது கண்டு, வெம் பசி கொள்
பகனும் எய்தி, இவை பேசுவான்: 52

அது கண்ட பகன் வீமனை நெருங்கி, வீரமொழி புகன்று, கைகளால் புடைத்தல்

'புலிதனக்கு இடு விடக்கை நின்றது ஒரு
பூனை தின்னுமது போல, நீ
பலி அனைத்தையும் விழுங்கினல், இது
பலிக்குமோ? எளிமை பார்!' என,
ஒலி படக் கிரியில் உரும் எறிந்ததென,
ஓடி வந்து, பிடர் ஒடியவே,
வலி படப் பணை விறல் தடக் கை கொடு
மாறி மாறி முறை வீசினன். 53

பக்கமும் பிடரும் ஒக்க முட்டிகள்
படப் பட, கவள பாரமாய்
விக்க நின்றன, வயிற்று இரண்டு அருகும்
வீழ வீழ, முன் விழுங்கலும்,
'புக்க பண்டமுடன் உன் உடல் தசை
புசிப்பன்; எங்ஙன் இவை போவது?' என்று,
அக் கடுங் கையும் இளைத்து, வெஞ் சினமும்
ஆறி நின்றனன், அரக்கனே. 54

சோறு முற்றும் உண்டபின், வீமன் வீரமொழி புகன்று, அரக்கனைப் போருக்கு அழைத்தல்

அச் சகட்டினில் ஓர் எள்துணைச் சுவடும்
அற்றபின், சிறிதும் அச்சம் அற்று,
உச்சம் உற்ற வெயில் அர்க்கன் ஒத்து, அவனொடு
உத்தரித்து, உரைசெய்து ஒட்டினன்:
'மெச்ச மெச்சும் உலகத்து அரக்கர்களில்
விக்ரமத் திறலின் மிக்க நீ,
கச்ச கச்ச பல கத்தை விட்டு, உனது
கட்டு உரத்தினொடு கட்டுவாய். 55

'சொல்லி என் பயன்? அரக்கன் நீ; மனிதன்
யான்; உனக்கு உரிய தொழில்களாம்
மல்லினும், படை விதத்தினும், செருவில்
வல்ல வல்லன புரிந்து, போர்
வெல்ல நெஞ்சம் உளதுஆகில், வந்து பொரு;
விறல் இடிம்பனையும் வென்று, உனைக்
கொல்ல வந்தனன்' எனப் புகன்று, இரு கை
கொட்டி, வாகுமிசை தட்டினன். 56

இருவரும் பொருதல்

பட்டவர்த்தனர்கள் பொன் சிரத்தின் மலர்
பொற்புடைச் சரணபற்பனும்,
நெட்டிருள்சரனும், வெற்பு வெற்பினொடு
நிச்சயித்து உடல நிற்பபோல்,
வட்டம் வட்டம் வர, ஒட்டி ஒட்டி, உறு
மல் தொழில் செருவில் மட்டியா,
முட்டி யுத்த நிலை, கற்ற கற்ற வகை
முற்ற முற்ற, எதிர் முட்டினர். 57

கரம் கரத்தொடு பிணங்கவும், தமது
கால்கள் கால்களொடு கட்டவும்,
சிரம் சிரத்தினொடு தாக்கவும்,—கொடிய
சிங்க ஏறு அனைய திறலினர்—
உரங்கள் இட்டும், வளர் தோள்கள் இட்டும், எதிர்
ஒத்தி, மல்-சமர் உடன்றபின்,
மரங்கள் இட்டும், உயர் கற்கள் இட்டும், நெடு
வாதினோடு இகலி மோதினர். 58

உலா வரும் தனது தாதை ஒத்த வலி
உடைய காலை கழல் உதையினால்,
விலா ஒடிந்து, தட மார்பு ஒடிந்து, மிடல்
வெரிந் ஒடிந்து, படு வெம் பிணப்
புலால் அளைந்த இரு கவுள் ஒடிந்து, பொரு
புயம் ஒடிந்து, கடை ஒத்த வாய்
நிலா எழும் கொடிய எயிறு ஒடிந்து, செயல்
இன்றி வாள் நிருதன் நிற்கவே, 59

வீமன் பகனைக் கொன்று, அவன் உடலை வண்டியில் இட்டு,
நகருக்கு மீண்டு வருதல்

உண்டி அற்று அயரும் யாதுதானன் அடி-
யுண்டு, மெய்த் தளர்வு ஒழிந்தபின்,
மண்டியிட்டு, எதிர் விழுத்தி, மார்பின், இப
மத்தகத்திடை மடங்கலின்,
திண் திறல் பெரு மிடற்றை வன்பினொடு
திருகி வீசி, ஒரு செங் கையால்,
பண்டியில் கடிதின் இட்டு, மாருதி
புகுந்தனன், பழைய பதியிலே. 60

பகன் உடலை நகரை அடுத்த இடுகாட்டில் இட்டு வீமன் நீராட,
சூரியனும் மறைதல்

ஏக சக்ர வனத்து இருந்த திறல்
யாதுதானனை இமைப்பினில்
சாக, முட்டியின் அடர்த்து, மா முனிவர்-
தம் பதிப்புறன் அடுத்தது ஓர்
வே கரிக் கடு வனத்தில் இட்டு,
மலர் ஓடை மூழ்க, விறல் வீமனும்;
மோகரித்து அவுணரைத் தடிந்து, கடல்,
முளரி நாயகனும் மூழ்கினான். 61

விளக்கு ஏற்றும் நேரத்தில் வீமன் வீட்டை அடைந்து,
எல்லோருடனும் அளவளாவுதல்

வாச மா மணி விளக்கு எடுப்ப, இவன்
வந்து, தாம் உறையும் மனை புகுந்து,
ஈசனோடு உமை எனத் தவம் புரியும்
இருவர் தாள்களும் இறைஞ்சியே,
நேசம் ஆன அருள் அன்னையைத் தொழுது,
தம்முனைத் தொழுது, நெஞ்சுறத்
தேசினோடு இளைஞர் தொழ, மகிழ்ச்சியொடு
தழுவினான், முறைமை திகழவே. 62

நகரத்தார் அகம் மகிழ்ந்து, வீமனைப் பாராட்டுதல்

அகம் மலர்ந்து முனி ஆசி சொற்றிடவும்,
அன்னை ஆர்வ உரை கூறவும்,
முகம் மலர்ந்து உரிய துணைவர் ஆண்மை நிலை
மொழியவும், சமர மொய்ம்பனை,
'சகம் மலர்ந்த திரு உந்தி மால்கொல், இவன்!'
என்று, மற்று உள சனங்களும்,
மிக மலர்ந்து, புனல் ஓடையின் குழுமி,
நனி வியந்து, இசை விளம்பினர். 63

## 5. திரௌபதி மாலை இட்ட சருக்கம்

துருபதன் தன் மகளுக்குச் சுயம்வரநாள் குறித்தலும்,
அரசிளங் குமரர் வந்து திரளுதலும்

இங்கு, இவர், இவ்வாறு இந்த இருக்கையில் இருக்கும் நாளில்,
அம் கண் மா ஞாலம் எங்கும், 'அரக்கு மாளிகையின் வீந்தார்,
பங்கம் இல் குணத்தால் மிக்க பாண்டவர்' என்று மாழ்க,
துங்கவேல் துருபதன்தான் சூழ்ந்தது சொல்லல் உற்றும்: 1

'வரத்தினால் பிறந்தவாறும், வான்மொழி புகன்றவாறும்,
சிரத்தினால் வணங்கிக் கேட்பத் தேசிகன் உரைத்தவாறும்,
உரத்தினர் கெடாதவாறும், உணர்ந்து, தன் பேதை இன்னம்
சரத்தினால் உயர்ந்த வின்மைத் தனஞ்சயற்கு உரியள்' என்னா, 2

'தான் வரித்தவற்கே எய்த உரியள் என் தனயை' என்று,
கான் வரிச் சுரும்பு உண் மாலைக் காவலர்க்கு ஓலை போக்க,
மான் வரிக் கண்ணிக்கு ஏற்ற வதுவை நாள், மலர் பூ ஒன்றைத்
தேன் வரித்தென்ன வந்து, திரண்டது, குமரர் சேனை. 3

சுயம்வரச் செய்தி கேட்டு, பாண்டவர்கள் தாயுடன் புறப்பட்டுச் செல்லுதல்

ஆங்கு அது நிகழ்ந்த மாற்றம், அந்தணன் ஒருவன் வந்தோன்
ஈங்கு இவர்க்கு உரைப்ப, மைந்தர் ஐவரும் யாயும் கேட்டு,
பாங்குடைப் பதியில் வாழும் பார்ப்பன மாக்களோடும்
தாங்க அருங் கொடிய கானம், தம் மனத் தேரில் போனார். 4

வழியில் வியாதன் தோன்றி, அடுத்து நிகழ இருக்கும் செய்தியைப் பாண்டவர்க்குக்
குறிப்பாகக் கூறிப் போதல்

சார தந்திரத்தில் மிக்க தபோதனன், சதுர் வேதங்கள்
பாரதம்தன்னோடு ஐந்தாம் படியினால் பகர்ந்த மூர்த்தி,
நாரத முனியை ஒப்பான், நராதிபர் நடந்து செல்லும்
நீரத நெறியில், வாவி நிறைந்த நீர் என்ன, நின்றான். 5

வணங்கலும், வாழ்த்தி, 'முந்த வந்து நீர் வாழ்வு செய்தீர்;
இணங்கி, நும் கேண்மை கொள்வான் இச்சையால், யாகசேனன்,
அணங்கினை அன்று வேள்வி அழலிடை அளித்தான்; அந்தச்
சுணங்கு அணி முலையாள் நாளைச் சூட்டுவள், தொடையல் மாதோ. 6

'இப் பகல் இரவும் வைகாது ஏகி, ஆங்கு எய்தும்; அங்கண்,
அப் பகல் மன்றல் பெற்றால், தோற்றுதல் ஆண்மை' என்று,
செப்பியே முனிவன் போக, சிறுவரும் பெரிய கங்குல்,
மைப் புறப் பார்த்தன் செங் கை மணி விளக்கு ஆர, போனார். 7

கங்கைத் துறையில், சித்திரரதன் என்பவன் போரிட்டு, அருச்சுனனால் தோல்வியுறல்

புத்திரன் பேரர், கங்கைப் பூந் துறை அடைந்த போதில்,
குத்திர விஞ்சை வேந்தன் குறுகி, வெங் கொடும் போர் செய்ய,
சித்திரத்தேரோன்தன்னை, தேவர் கோன் மதலை, செந் தீ
அத்திரத்து, இருந்தைத் தேரோன் ஆக்கினன், இமைப்பின் அம்மா! 8

தோற்றவன் விசயனுக்குத் தோழனாக, பின்னர், வழியில் தௌமிய முனியைக் கண்டு வணங்கி, அம்முனியுடனே எஞ்சிய வழியையும் கடந்து போதல்

தோற்றவன் திரிந்து மீண்டு, தோழன் அவ் விசயற்கு ஆக,
ஆற்ற அரும் புனலும் யாறும் அவன் துணையாக நீந்தி,
சாற்றும் உற்கச தீரத்துத் தௌமிய முனியைக் கண்டு,
போற்றி, மற்று அவன்தனோடும் புன் நெறிப் புறம் விட்டாரே. 9

உதய காலத்தில் பாண்டவர்க்கு நல் நிமித்தங்கள் தோன்றுதல்

புலர்ந்தன, கங்குல் போதும், பொழிதரு பனியும்; சேர
மலர்ந்தன, மனமும் கண்ணும்; வயங்கின, திசையும் பாரும்;
அலர்ந்தன, தடமும் காவும்; ஆர்த்தன, புள்ளும் மாவும்;
கலந்தன, குருகும் பேடும்; கலித்தன, முரசும் சங்கும். 10

'குன்றமும் கொடிய கானும், கூர் இருள் கங்குல், நீங்கி,
நன்றுநன்று, உதவ வந்தீர்; நடந்து, நீர் இளைத்தீர்போலும்!'
என்று கொண்டு, உவகையோடும், இன் மலர்க் கழுநீர் வாச
மன்றல் அம் தென்றல் வீசி, வழி விடாய் தணித்தது அன்றே. 11

வெறி படு முளரி மொக்குள் விரி பதம் நோக்கிச் சுற்றும்
பொறி வரி வண்டின் ஈட்டம் புறத்து இருந்து இரங்க, வண்டு ஒன்று
இறகரால் வீசி, உள் புக்கு, இன் மது நுகர்தல் கண்டு,
நெறியில் நல் நிமித்தம் ஆக, நெஞ்சுற நினைந்து, சென்றார். 12

வண் துறை மருங்கின், ஆங்கு, ஓர் மாங்கனி வீழ்தல் கண்டே,
தண் துறை மீன்கள் எல்லாம் தம்தமக்கு இரை என்று எய்த,
விண்டு உறை கிழிய ஓடி, வென்று, ஒரு வாளை தன் வாய்க்
கொண்டு உறை வலிமை நோக்கி, குறிப்பினால் உவகை கூர்ந்தார்.

'மாக் குரல் அளக வல்லி வதுவையின் அழகு காண,
தாக்கு உரல் அடி கொள் யானைத் தரணிபர் எவரும் வந்தார்;
வீக்கும் நல் மிளிர் பொன் பூணீர்! விரைவுடன் வம்மின்!' என்று,
கூக்குரல் விளிப்ப போலும், கோகிலக் குரலும் கேட்டார். 14

'நீடுதல் இல்லை; இன்றே, நிருபதி கன்னி மன்றல்
கூடுதல் இவர்க்கு உண்டாகும்; கொற்றவர் குறை பொருதே,
ஓடுதல் உண்மை' என்னு, தோகைகள் ஓகையோடும்
ஆடுதல் நோக்கி நோக்கி, அகம் மகிழ்ந்து, ஏகினரே. 15

பூ எலாம் சுரும்பு மொய்ப்ப, புனல் எலாம் புள்ளு வைக,
மா எலாம் துணையின் மேவ, மரன் எலாம் வல்லி புல்ல,
ஏ எலாம் பயின்ற விற் கை ஏற்று இளஞ் சிங்கம் போல்வார்
கா எலாம், மருங்குதோறும் கண்டு, கண் களித்துப் போனர். 16

துருபதனுக்கு உரிய பாஞ்சால நகரினுள் பாண்டவர் புகுதல்

வாரண மாயை சூழ்ந்த மாயவன் தோற்றம் போலப்
பேர் ஒளி பம்பி ஆர்க்கும் பேசஅருஞ் சிறப்பிற்று ஆகி,
பூரண கும்பம், பொற் கோபுரங்களால் பொலிந்து தோன்றும்,
ஆரவம் மிகுந்த பல் புள் அகழி சூழ் புரிசை கண்டார். 17

மங்கல முழவம் விம்ம, மன்னு பல் இயங்கள் ஆர்ப்ப,
சங்குஇனம் முழங்க, எல்லாத் தானையும் பரந்து சூழ,
எங்கணும் நெருங்கி வைகும் இராச மண்டலங்களோடும்,
துங்க வேல் துருபதன்தன் தொல்லை மா நகரி புக்கார். 18

அப்பொழுது. அந் நகர் இருந்த தோற்றம்

தொடங்கியும், தொடக்கம் தொட்டுத் துகள் அற வளர்ந்தும், மீள
மடங்கியும், செல்லுகின்ற மன்னுயிர் உலகம் எல்லாம்,
முடங்கிய சார்ங்கச் செங் கை முகுந்தன் வாய்ப் புகுந்த காலத்து,
அடங்கிய உதரம் போன்றது, அந்த மா நகரி அம்மா! 19

'குழைப் புறம் கடந்த செங் கண், குறு நகை, கொவ்வைச் செவ் வாய்,
இழைப் பொலி, முலையினளுக்கு இற்றைநாள் வதுவை' என்று,
மழைப் புற மாடம் ஏறி, வருநரை மலர்க் கை காட்டி,
அழைப்பன போன்ற, வீதி அணி கொடி ஆடை எல்லாம். 20

அந் நகரிலே, தாயை ஒரு குலாலன் மனையில் இருத்திவிட்டு,
பாண்டவர் சுயம்வர மண்டபம் சேர்தல்

விண் தலம் புதைத்த பைம் பொன் துகில் இடு விதான நீழல்,
மண்டு அகில் புகையில் மூழ்கி, ஆவண மறுகில் செல்வம்
கண்டு கண்டு, அரிஏறு ஆனின் கவினுடை நெடுந் தோல் போர்த்துக்
கொண்டன செயலார், ஆங்கு, ஓர் குலாலனது இருக்கை சேர்ந்தார். 21

ஆங்கண், நல் தவத்தால் மிக்க அன்னையை இருத்தி, மைந்தர்
தாங்கள் முன் துணையாய் வந்த தாபதர் தம்மோடு எய்தி,
தூங்கணங்குரீஇயின், மஞ்சத் தலம்தொறும் தூங்குகின்ற
தேம் கள் மாத் தெரியல் வேந்தர் சேர்ந்த பேர் அவையில் ஆனர்.

### திரௌபதியின் மனநிலை

'ஆதியில் குந்தி மைந்தர் ஐவர்க்கும் உரியள் ஆம்' என்று
ஓதிய விதியினால், நெஞ்சு உலப்புரு உவகை கூர்வாள்;
'சோதிடம் பொய்யாது' என்றும், 'தோன்றுவர், உரியோர்' என்றும்,
தாதியர் தேற்றத் தேற்ற, தன் மனத் தளர்வு தீர்வாள்; 23

சூட்டிய தொடையல் மாலைத் தோழியர், வைகல்தோறும்,
தீட்டிய படங்களும் தம் சிந்தையும் பொலிவு கொள்ள,
கோட்டிய சிலையினோடும், கொடி மணித் தேரினோடும்,
காட்டிய கோலம் அன்றி, பிறிது ஒன்றும் காண்கிலாதாள்; 24

'ஆண்டு, எரிப் பிறந்த போதே, அன்பினால் எந்தை நேர்ந்த
பூண் தெரி மார்பன், இன்று, இப் பொன் அவை பொலியத் தோன்றி,
ஈண்டு எரி முன்னர் மன்னர் இழிவுற, வேட்டிலானேல்,
மீண்டு எரி புகுவன்' என்னும் எண்ணமே விழையும் நீராள்; 25

### தோழியர் திரௌபதியைக் கோலம் செய்து, சுயம்வர மண்டபத்திற்கு அழைத்து வருதல்

கோண் பிறை நுதலாள்தன்னைக் கோதையர் பலரும் கூடி,
சேண் புனல் பல கொண்டு ஆட்டி, செழுந் துகில் தொழுது சேர்த்தி,
பூண்பன இசையப் பூட்டி, புகை கமழ் தாமம் சூட்டி,
காண்பவர் ஆண்மை தேய, காமவேள் கலகம் செய்தார். 26

'வந்தனர் குமரர் யாரும் வருக!' என மகிழ்ந்து போற்றி,
சந்து அணி முலையினாளை, தாயினும் பரிவு கூர்ந்தோர்,
கந்தனும் உவமை ஆற்றாக் காவலர் காமத் தீயில்
இந்தனம் இடுவது ஏய்ப்ப, வேத்தவை ஏற்றினாரே. 27

### திரௌபதியைக் கண்ட அரசர்களின் நிலையும், திரௌபதி பாண்டவரின் வரவை எதிர் நோக்குதலும்

வெங் கழல், படைக் கை, வேந்தர் விழிகளால், விளங்கும் மேனிப்
பொங்கு அழல் பிறந்த பாவை பொற்பினைப் பொலிய நோக்கி,
பைங் கழைத் தனுவோன் செங் கைப் பகழியால் பாவம் எய்தி,
அங்கு அழல் பட்ட நெய்போல் அனைவரும் உருகினாரே. 28

மங்குலின் மங்குல் மூடி, வயங்கு ஒளி மறைந்து தோன்றாச்
செங் கதிர்ச் செல்வன் போல, சீர் கெழு வடிவம் மாறி,
அங்கு அவர் இருந்த தன்மை அறிந்ததோ—செறிந்த பொய்கைப்
பங்கயம் போன்றதால், அப் பரிவுறு பாவை பார்வை? 29

அப்பொழுது திட்டத்துய்மன், 'சுழலும் எந்திரத் திகிரியின் நடுவிலுள்ள இலக்கை எய்பவருக்கே திரௌபதி உரியள்' என்று அறிவித்தல்

மனக் கடுங் காதல் விம்ம, மாலை தாழ் புயங்கள் வாட,
'எனக்கு எனக்கு' என்று என்று ஏமாந்து இருந்த காவலரை நோக்கி,
சினக் கடம் ஒழுகும் கன்னக் களிற்றினன் திட்டத்துய்மன்,
நினைக்கவும் அரியது ஒன்றை நினைவினோடு உரைசெய்வானே: 30

'சிலை இது; சிலீமுகங்கள் இவை; கடுந் திரிகை வேகத்து
இலை முகத்து உழலுகின்ற எந்திரத் திகிரி நாப்பண்
நிலை இலா இலக்கும் அஃதே; நெஞ்சுற யாவன் எய்தான்,
கலை வலீர்! அவற்கே அந்தக் கன்னியும் உரியள்' என்றான். 31

அது கேட்ட அரசர்களின் நிலை

இச் சொல் பழனப் பாஞ்சாலர்க்கு இறைவன் புதல்வன் இயம்புதல் கேட்டு,
அச் சொல் தம்தம் செவிக்கு உரும்ஏறு ஆகக் கலங்கும் அரவு அன்னார்,
கச்சைப் பொருது, புடை பரந்து, கதித்து, பணைக்கும், கதிர் ஆரப்
பச்சைக் குரும்பை இளமுலைமேல் பரிவால், நாணம் பிரிவுற்றார். 32

கண்போல் அம்பும் நுதல் போலும் கடுங் கார்முகமும், காண்தொறும், அத்
திண் போர் வேந்தர் மனக் கலக்கம் செப்பும் தகைத்து அன்று; ஆனாலும்,
விண் போய் உழன்று சுழல் இலக்கை மெய்யே எய்து, வீழ்த்தி, மலர்ப்
பெண் போல்வாளைக் கைப்பிடிக்கும் பேராசையினால், பேதுற்றார்.

செவிலித் தாயர் அவையிலிருந்த அரசர்களை, 'இவர் இன்னார் இன்னார்' என்று சுட்டிக் காட்டி, அறிவித்தல்

திருந்து ஆர் மன்றல் குழல் அணங்கின் செவிலித் தாயர், கடல் கடைந்து
வருந்தா அமுதம் நிகர்வாளை மயில்போல் கொண்டு, மன் அவை புக்கு
இருந்தார், இருந்த காவலரை, 'இன்னோர் இன்னோர் இவர்' என்று,
முருந்து ஆர் பவளத் துவர் இதழ் வாய் முகிழ் வாள் நகைக்கு மொழிகின்றார்:

'மாற்றம் பிறிது ஒன்று உரையான், இவ் வன் போர் வில்லின் வலி நோக்கி,
சீற்றம் சிந்தை கொண்டு அழல, பொய்யே மலர்ந்த திருமுகத்தான்,
''ஏற்றம்தன்னில் வேறு ஒருவர் இப் பேர் உலகில் இலர்'' என்னத்
தோற்றம் படைத்தோன் தனைக் காட்டி, 'துரியோதனன், மற்று இவன்' என்றார்.

'மணியின் கிரண வெயில் எறிப்ப, மண் ஏழ் தாங்கும் நச்சு எயிற்றுப்
பணியின் முடி நாயகத் தலையின் பாங்கே நிரைத்த பல் தலைபோல்,
துணியும் கொடுமை வகிர் அன்ன துணைவர், துச்சாதனன் முதலோர்,
அணியும் கழற் கால் சுயோதனனுக்கு அருகு ஆசனத்தர், இவர்' என்றார். 36

'உலைவந்து அயரும் சூல் மந்திக்கு உருகா, நிலம் கீண்டு, உதவு குலக்
கலை, வன் பலவின் சுளை கீறி, களிப்போடு அளிக்கும் காந்தாரத்
தலைவன் சகுனி இவன் கண்டாய்; தக்கோர் ஆடாச் சூதுக்கும்,
நிலை வஞ்சனைக்கும், தரணிபரில் யாரே இவற்கு நிகர்?' என்றார். 37

'பேசாது ஒடுங்கும் பேர் அறிவால், பெரும் போர் வலியால், பிறப்பால், மெய்த்
தேசால், இயற்றும் பல படையால், திண் தோள் வலியால், செஞ் சிலைக் கை
ஆசான் மைந்தன் இவன் தனக்கு இங்கு, யாரே உவமை? அமரரிலும்
ஈசனனை மற்று ஒரு சிறிது ஒப்பு எனலாம்; அல்லது இலை' என்றார்.

'பெண்மைக்கு இரதி என வந்த பெண் ஆர் அமுதே! பேர் உலகில்
உண்மைக்கு இவனே; வலிக்கு இவனே; உறவுக்கு இவனே; உரைக்கு இவனே;
திண்மைக்கு இவனே; நெறிக்கு இவனே; தேசுக்கு இவனே; சிலைக்கு இவனே;
வண்மைக்கு இவனே;—கன்னன் எனும் மன்னன் கண்டாய் மற்று இவனே! 39

'அலத்தால் முன்னம் பிளந்த பகை அடர்ப்பான் கருதி, பிளப்புண்ட
சலத்தால் யமுனை பிணித்ததெனத் தயங்கும்படி சேர் தானையினான்,
குலத்தால் உயர்ந்த வசுதேவன் குமரன், களபக் கொங்கையர் மெய்ந்
நலத்தால் மகிழும் சிந்தையினான், நறுந் தார் இராமன் இவன்' என்றார். 40

'இந்தக் குரிசில் யது குலத்துக்கு எல்லாம் திலகம் எனுமாறு
வந்து உற்பவித்து, பொதுவருடன் வளரும் கள்ள மா மாயன்;
முந்த, கஞ்ச மாமன் உயிர் முடித்தான்; இவற்கு முகில் ஊர்தி
அந்தப் புரத்தில் ஆராமம், அந்தப்புரத்துக்கு ஆராமம். 41

'தண்ணம் துளவோன் தனக்கு இளவல் இவன்காண்—மின்னே!—சாத்தகி என்று
எண்ணும் போச குலத் தலைவன், எவரும் சூழ இருக்கின்றான்;
கண்ணன்தன்னை அவமதித்துக் கழறும் புன்சொல் கார்முகத்தைத்
திண்ணென் கருத்தான், ஈங்கு இவன்காண் சேதிப் பெருமான், சிசுபாலன்.

'தார் வண்டு இமிரத் தேன் ஒழுகும் தடந் தோள் வீரன் சராசந்தன்,
போர் வெஞ் சரத்தால் யாவரையும் புறம் கண்டு அன்றிப் போகாதான்;
சீர் வண் மதுராபுரி விடுத்து, துவாரகையினில் சென்று ஒதுங்க,
கார்வண்ணனையும் நெடுங் காலம் வென்றான், இவன்காண்!' என்றாரே.

'பனைக்கைப் பிறை வெண் கோட்டு அயிராபதமே போலும் பகட்டில் இவன்
வினைக்கண் புகுந்தால், எதிர் நின்று வேறு ஆர் இவனை வெல்கிற்பார்?
முனைக்கண் செங் கண் தீ உமிழும் முகத்தான்—மாதே!—பகதத்தன்;
தனக்குத் தானே நிகர் என்னத் தருக்கொடு ஈண்டே இருக்கின்றான்.

'இவன், சல்லியன் என்று உரை சான்ற, இகல் வேல் மன்னர்க்கு ஏறு அனையான்;
இவன், தன் பகைவர் யாவரையும் இமையோர் ஆக்கும் எழில் நீலன்;
இவன், தண் தமிழ் தேர் அடல் வழுதி; இவன், தேர் இரவிகுல வளவன்;
இவன், செந் தழலோன் மரபு ஆகி, ஈர்-ஏழ் உலகும் புகழ் சேரன்,

வில் ஆண்மையினுல் வெங் கருப்பு வில்லோன்தனக்கே நிகர் என்னப்
பல்லார் புகழும் பான்மையினுல், பதினெண் புவிக்கும் பதியாய
எல்லா அரசும், நின்பொருட்டால், ஈண்டே திரண்ட— இன் அமுதச்
சொல்லாய்! நல்லாய்! மென் பூவாய்! தோகாய்! பாவாய்! துரௌபதியே!

'இவரில், தனது தோள் வலியால் அரிஏறு என்ன எழுந்திருந்து, அத்
தவரில் புரி நாண் உற ஏற்றி, தழல் கால் முனை வெஞ் சாயகத்தால்
பவரின் செறிய நிரைத்து உருளும் பல்வாய்த் திகிரிப் பயில் இலக்கைக்
கவரின், செழுந் தார் புனைந்து அவனைக் கைக்கொண்டிடு நீ கடிது' என்ருர்.

அரசர்களில் சிலர் சோர்வுற, சிலர் இலக்கை எய்யக் கிளர்ந்து எழுதல்

முத்த நகை, பவள இதழ், குளிர் வெண் திங்கள்
முகத்தாளைக் கைத்தாயர் மொழிந்தகாலை,
சித்திரம் ஒத்து உணர்வு அழிந்து, தம்தம் பைம் பொன்
திகழ் அரியாசனத்து இருந்தார் சிற்சில் வேந்தர்;
அத் தனுவின் பெருமையையும், இலக்கத்து உள்ள
அருமையையும், கருதாமல் ஆண்மை கூறி,
எத்தனை எத்தனை வேந்தர், ஆசை கூர,
'யான், யான்' என்று, எழுந்திருந்தார், யானைபோல்வார்! 48

கண்ணன் பலராமனிடம் பாண்டு மைந்தர் உரு மாறி இருந்தமை உரைத்து,
கிளர்ந்தெழுந்த தன் குலத்தாரைத் தடுத்தல்

தனு எடுத்து, நாண் பிணிப்பான் கிளரா நின்ற
தன் குலத்தில் அவனிபரைத் தடுத்து, வேதப்
பனுவலுக்கும் தவத்தினுக்கும் உரிய வேள்விப்
பார்ப்பன மாக்களின் இடையே, பாண்டு மைந்தர்
அனு உருக்கொண்டு, உரு மாறி, இருந்த தன்மை
அறிந்தருளி, அலாயுதனோடு அருளிச்செய்தான்—
மனு முறைக்கு வரம்பு ஆகி, வருத்தம் வீட,
மா நிலமீது அவதரித்த வாசுதேவன். 49

அரசர் பலரும் வில் திறம் காட்ட முயன்று, தோல்வியுறுதல்

பலரும் உடன் அகங்கரித்து, மேரு சாரப்
பார வரி சிலையின் நிலை பார்த்து மீண்டார்;
பலரும் ஒரு கையில் பிடிக்க அடங்கா வில்லின்
பருமைதனைக் குறித்து, மனம் பதைக்கப் போனார்;
பலரும் மலர்க் கைப் படுத்திப் பெயர்க்க மாட்டார்,
பணைத் தோள் நொந்து, 'அமையும்' என, பயந்து நின்ருர்;
பலரும் எடுத்து, அணி மணி நாண் பூட்ட வாராப்
பரிசொடு மற்று அதன் வலிமை பகர்ந்தே, விட்டார். 50

வல்லியம்போல் நடந்து, தனு இரு கையாலும்
வாரி எடுத்து, எதிர் நிறுத்தி, மல்லல் வாகுச்
சல்லியனும் நாண் ஏற்ற முடியாது, அந்தத்
தனுவுடனே தன் தனுவும் தகர, வீழ்ந்தான்;
வில்லியரில் முன் எண்ணத் தக்க வின்மை
வேந்து அடு போர்ப் பகதத்தன், வில் வேதத்தில்
சொல்லியவாறு எடுத்து ஊன்றி, மற்றைக் கையால்
தொல் வலி நாணியும் எடுத்து, தோளும் சோர்ந்தான். 51

பூ கதன் ஆகிய அன்றே, பகைவர் எல்லாம்
போற்ற வளர்ந்து, உலகு ஆளப் புனைந்த மௌலி
மாகதனும் வில் எடுத்து, வரி நாண் வில்லின்
மார்பளவும் போக்கினன்; வன் போர் நீலன்,
'சாகதன்' என்று அவை துதிக்க, நெடு நாண் கொற்றத்
தனு ஒரு சாண் எனக் கொணர்ந்தான்; 'சாணே அல்ல,
வேக தனு நால் விரல்' என்று உரைக்க, நாணி
வீக்கினன், வலம்புரித் தார் வேந்தர் வேந்தே. 52

கலை வருத்தம் அறக் கற்ற கன்னன் என்னும்
கழற் காளை, அரன் இருந்த கயிலை என்னும்
மலை வருத்தம் அற எடுத்த நிருதன் என்ன,
மன் அவையில் வலியுடனே வந்து தோன்றி,
நிலை வருத்தம் அற நின்று, பரிய கோல
நீள் வரி நாண் மயிர்க்கிடைக்கீழ் நின்றது என்ன,
சிலை வருத்தம் அற வளைத்து, வளைந்த வண்ணச்
சிலைக் கால் தன் முடித் தலையைச் சிந்த, வீழ்ந்தான். 53

அந்தணர் வடிவுடன் இருந்த அருச்சுனன், அவையில் எழுந்து பேசி,
திட்டத்துய்மனிடம் அனுமதி பெற்று, இலக்கை எய்தல்

அரவ நெடுங் கொடி உயர்த்தோன் முதலா உள்ள
அனைவரும் அங்கு ஒரு தனுவுக்கு ஆற்றார் ஆகி,
உரவு மெலிந்து, எழில் மாழ்கி, செயல் வேறு இன்றி,
உள்ளம் அழிந்து, இருந்ததன்பின், உரும்ஏறு என்ன,
கரவுடன் அந்தணர் நாப்பண் இருந்த கொற்றக்
கரு முகில் வாகனன் புதல்வன், கரிய மேனி
இரவிகுலச் சிறுவனைப்போல் எழுந்து, மன்றல்
இளங்கொடி தம்முனை நோக்கி, இயம்பினனே; 54

'மன் மரபில் பிறந்து, இரு தோள் வலியால், இந்த
மண் ஆளும் அவர்க்கு அன்றி, மறை நூல் வாணர்
தொல் மரபில் பிறந்தவரும் இலக்கு வீழ்த்தால்,
சூட்டுமோ தொடையல், இளந்தோகை?' என்ன,
தன் மரபுக்கு அணி திலகம் ஆன வீரன்,
'தகவு அன்ருே? மன்றலுக்குத் தாழ்வோ?' என்ருன்;
வில் மரபில் சிறந்த நெடு வில்லே, ஈசன்
மேரு கிரி எடுத்ததென, விரைவில் கொண்டான். 55

கிளர் மகுட வய வேந்தர் நாண்கள் எல்லாம்
கீழாக, தனி நெடு நாண் கிளர ஏற்றி,
தளர்வு அறு சாயகம் தொடுத்து, கற்ருேர் யாரும்,
'தனு நூலுக்கு ஆசிரியன் தானே' என்ன,
உளர் திகிரிச் சுழல் இலக்கை, அவையோர்தங்கள்
ஊக்கமுடன் விழ, எய்தான்—உரவுத் தோளான்.
வளரும் அருந் தவ வேள்வி முனிவர் ஆர்த்தார்;
வாச நறு மலர் சொரிந்து, வானேர் ஆர்த்தார். 56

திரௌபதி அருச்சுனனுக்கு மாலே இடுதல்

'தாம் சாரற்கு அரிய தனு வளேத்தான்' என்று,
தரணிபர்தம் முகம் கருக, தனுவினேடும்
பூஞ் சாரல் மணி நீல கிரிபோல் நின்ற
பூசுரனே, 'இவன் அவனே போன்ம்' என்று எண்ணி,
பாஞ்சாலர் பதி கன்னி இரு தன் செங் கண்
பங்கயத்தால் பாங்காகப் பரிந்து நோக்கி,
தேம் சார நறுங் கழுநீர்ச் செய்ய தாமம்
செம் மணி கால் அருவிஎனச் சேர்த்திஞளே. 57

அருச்சுனன் திரௌபதியோடும் சகோதரரோடும் செல்லுதல்

அந்தர துந்துபி முழங்க, சங்கம் ஆர்ப்ப,
ஆனக துந்துபி முதல்வன் ஆதி ஆக
வந்திருந்த பேர் அவையை மதியான் ஆகி,
மாலே இடு பசுஞ் செம்பொன் மாலேயோடும்,
சந்திரனும் உரோகிணியும் என்ன, முன்னர்,
தான் வளேத்த தடஞ் சிலே கைத்தலத்தில் ஏந்தி,
இந்திர சூனுவும் எழுந்து, ஆங்கு ஏகலுற்ருன்—
இரு புறமும் துணேவர் வர, இணே இலாதான். 58

துரியோதனன் தூண்டுதலால் அரசர் கூட்டம் போருக்கு எழுதல்

'பார்ப்பான் வந்து, ஒரு கோடி அரசைச் சேரப்
பரிபவித்து, பாஞ்சாலன் பயந்த தெய்வச்
சீர்ப் பாவைதனை வலியால் கொண்டுபோக,
செயல் இன்றி இருந்தீர்! என் செய்தீர்?' என்று,
வேர்ப்பு ஆடு நுதல் சிவந்த விழியன் ஆகி,
விழியிலான் மகன் கழற, வெகுண்டு, மேன்மேல்,
ஆர்ப்பாகக் கொதித்து எழுந்தது, உகாந்த காலத்து
ஆர்க்கும் மகராலயம்போல், அரசர் ஈட்டம். 59

விசயனும் வீமனும் எதிர்த்துப் பொர, மறையவர்களும்
இவர்களுடன் கூடிப் பொருதல்

முருந்து வாள் நகை, துவர்வாய், முகத்தினுளை
மூத்தோன் பின் நிறுத்தி, அமர் முருக்குமாறு,
மருத்துவான் திரு மகனும் மருத்தின் செல்வ
மைந்தனுமே புரிந்திட்டார்; மறையோர்உள்ளார்
உருத்து, வாய் மடித்து எழுந்து, கோகு தட்டிட்டு,
ஊன்றிய தண்டு எதிர் ஓச்சி, உடன்ற வேந்தர்
கருத்து வார்தக வெருக்கொண்டு ஓட ஓட,
கை உரம் காட்டினர், வளர்த்த கனலே அன்னார். 60

விசயன் மறையவரை விலக்கி, எதிர்த்த கன்னனை வெல்ல,
வீமனிடம் சல்லியன் தோற்று ஓடுதல்

மிகைத்த முனிவரர் முனிந்த உறுதி நோக்கி,
வென்று எடுத்த வில் தடக் கை விசயன், சற்றே
நகைத்து நகைத்து, அவர் அவரை விலக்கி, 'என் முன்
நமன் வரினும் பிளப்பல்' என நவிலாநின்றான்;
புகைத்த கனல் விழிக் கன்னன் தருக்கால் எள்ளி,
பூசுரன் என்று அவமதித்து, புனை வில் வாங்கி,
உகைத்த பகழியும் உகைத்தான்; உரனும், தன் கை
ஒரு கணையால் உடன் பிளந்தான், உரும்ஏறு ஒப்பான். 61

குன்றால் மெய் வகுத்தனைய வீமன், தன்மேல்
கொல் இயல் செய் சல்லியனைக் குத்தி வீழ்த்தி,
கன்றால் முன் விளவு எறிந்த கண்ணன் என்ன,
கால் முடியோடு உற வளைத்து, வான்மேல் வீசி-
நின்றான்; மற்று அவன் அயலே தெறித்து வீழ்ந்து,
நெஞ்சு ஒடிந்தான்; இருவரும் முன் நில்லார் ஆகி,
'வென்றாலும், தோற்றாலும், வசையே, வெம் போர்
வேதியரோடு உடற்றல்!' என, மீண்டு போனார். 62

கண்ணன் விலக்க ஏனைய அரசர்கள் தம்தம் நகரம் போய்ச் சேர்தல்

'வண்ண நூல் முனிவர் அல்லர்; மருத்துவான், மருத்து, நல்கும்
அண்ணல் அம் குமரர் ஆம்' என்று அயிர்ப்புறும் அரசர் யாரும்,
கண்ணனால் விலக்கப்பட்டு, கடி நகர்தோறும், தங்கள்
எண்ணமும் பயனும் வேறு எய்தினர் என்ப மன்னோ. 63

குயவன் வீடு சென்ற பாண்டவர், குந்தியிடம், 'இன்று ஓர் ஐயம் பெற்றோம்; என் செய்வது?' என்று கேட்டல்

அன்று இலக்கு எய்த கோவும், துணைவரும், ஆன வெம் போர்
வென்று, கொற்றவையோடு ஒக்கும் மின்இடைப் பொன்னும் தாமும்
சென்று, மட்கலம் செய் கம்மி செழு மனை முன்றில் எய்தி,
'இன்று பெற்றனம், ஓர் ஐயம்; என் செய்வது, இதனை?' என்றார்.

'ஐவரும் ஒருசேர அருந்தும்' என்று கூறி, உள்ளிருந்து வெளிவந்த குந்தி திரௌபதியைப் பார்த்தல்

உள் இருந்து, அன்னை, மைந்தர் உரைத்த சொல் கேட்டு, 'தேவர்
தெள் அமுது என்ன, மக்காள்! சேர நீர் அருந்தும்' என்னா,
புள்ளினம் ஒடுங்கும் மாலைப் பொழுது இவள் புறம்பர் எய்தி,
கள் அவிழ் கூந்தலாளைக் கரும்பு என விரும்பி, கண்டாள். 65

தான் சொன்ன வார்த்தை குறித்துக் குந்தி இரங்குதலும், தருமன் தேற்றத் தேறுதலும்

'என் நினைந்து, என் சொன்னேன்! மற்று என் செய்தேன்!' என்று சோரும்
அன்னையை வணங்கி, 'நின்சொல் ஆரணப் படியது ஆகும்;
நின் நினைவு அன்றால்; எங்கள் நெஞ்சிலும் நினைவு உண்டு' என்றான்—
தன் நிகர் இலாத கேள்வி சான்ற சீர்த் தருமன் என்பான். 66

பார் அனைத்தினும் தன் நாமம் பரப்பிய பார்த்தன் என்னும்
வீரனைப் பயந்த பாவை, 'விதிவழி இது' என்று எண்ணி,
மாரனுக்கு அரசு நல்கும் மங்கையும் தானும், அந்தக்
கார் இருள் கங்குல், மைந்தர் கட்டுரை கசிந்து கேட்டாள். 67

துருபதன் ஒற்றரால் செய்தி தெரிந்து, மறுநாள் அவர்களை அரண்மனைக்கு அழைத்து, உபசரித்தல்

பொன்-தொடி, கனக மாலை, பொலங் குழை, பூவைதன்னைப்
பெற்ற பூபதி அவ் வீரர் பெருமித வாய்மை எல்லாம்
ஒற்றரால் உணர்ந்து, நெஞ்சத்து உவகையோடு, ஐயம் இன்றி,
மற்றை நாள் வந்து, கொற்ற வாழ் மனை கொண்டு புக்கான். 68

அடுத்த பல் பொருளும் வைக்க, ஆயுதம் அன்றி வேறு ஒன்று
எடுத்திலர் என்றும், வேத முனிவரர் அல்லர் என்றும்,
கொடுத்தன சிறப்பினோடும் குரு மணித் தவிசின் ஏற்றி,
தொடுத்த தார்க் குருக்கள் என்றே துணிந்தனன், யாகசேனன். 69

துருபதன், 'இன்று வதுவை செய்விப்போம்' என்ன, தருமன், 'ஐவரும் இவளை மணப்போம்' என்றல்

'கை வரு சிலையின் வென்று கைப் பிடித்தவனுக்கு இன்றே
மை வரு கண்ணிணை வதுவை செய்திடுதும்' என்ன,
நெய் வரு முனை கொள் கூர் வேல் நிருபனை நோக்கி, 'யாங்கள்
ஐவரும் வேட்டும்' என்றான், அசைவு இலா அறத்தின் மைந்தன். 70

தருமன் சொல்லால் துருபதன் தளர, அப்பொழுது வியாதன் தோன்றி, ஐவருக்கும் மணம் செய்வித்தற்குரிய முறைமையை விளக்குதல்

தருமன் மா மதலை சொல்லால் தளர்வுறு காலை, 'மாலை
நிருப! நின் மனத்தில் ஐயம் நீக்குக! நீக்குக!' என்னாத்
துருபதன் முன்னர் வந்து தோன்றினன்—சுருதி யாவும்
விரை மலர் விதியின் மிஞ்ச விதித்தருள் வியாதன் என்பான். 71

தொழுது பொன்-தவிசின் ஏற்றி, சூழ்ந்தனர் இருந்து கேட்ப,
முழுது உணர் கேள்வி ஞான முனி குலத்து அரசு போல்வான்,
'பழுது அறு கன்னிதன்னைப் பாண்டவர் ஐவருக்கும்
எழுதஅரு மறையின் வேள்வி இயற்றுதற்கு இயற்கை கேண்மோ:

வியாதன் உரைத்த திரௌபதியின் முற்பிறப்பு வரலாறு

'மூள் ஆர் அழல் உற்பவித்தாள் இவள், முன் பவத்தில்,
நாளாயணி என்று உரை சால் பெரு நாமம் மிக்காள்;
வாள் ஆர் தடங் கண் அவட்கு, ஆரணவாணர்க்கு என்றும்
கேள் ஆன மௌற்கல்லியன் என்பவன், கேள்வன் ஆனான். 73

'காதில் கலந்த கடைக் கண்ணிதன் கற்பும் அன்பும்
சோதித்தல் உன்னி, தணியாத துவக்கு நோயன்,
கோதித்த நெஞ்சன், பெரு மூப்பினன், கூர்ந்து நாளும்
வாதித்தல் அன்றி, மகிழா மனை வாழ்வு பூண்டான். 74

'கச்சிற்கு அடங்கா முலையாள்—அக் கணவன் உண்ட
மிச்சில்புறத்து விரல் வீழவும், வீழ்தல் மிஞ்சி,
குச்சித்தல் இன்றி, நுகர்ந்தாள்—கொடுங் காம நோய்கொண்டு
இச்சித்த இன்பம் நுகராமல் இளைத்த மெய்யாள். 75

'அன்பன் தெரிவை வழிபாடு கண்டு, ஆர்வம் எய்தி,
துன்பம் பயந்த பிணியால் அழி தோற்றம் மாற்றி,
தன் பங்கை ஈசன் திறை நல்க முன் சாபம் வாங்கும்
வன்பன் தனக்கும் கிடையாத வடிவு கொண்டான். 76

' ''மின்னே! உனக்கு மிகு கற்புடை மீனும் ஒவ்வாள்;
இன்னே, வரம் வேண்டுவ வேண்டுக, ஈண்டை!'' என்ன,
''நின் நேயம் என்றும் பிரியா நலன் நேர்க!'' என்றாள்,
தன் நேர் இலாத மனைவாழ்வில் தவத்தில் மிக்காள். 77

'குன்றும் நதியும், மரனும் பைங் கொடியும், ஆகி,
துன்றும் துணையாய்ப் பல யோனிகள்தோறும் எய்தி,
நின்றும், சரித்தும், அரும் போகம் நெடிது துய்த்தார்,
என்றும் பிரியாது இருவோரும் இதயம் ஒத்தே. 78

'இந்தப் பிறப்பில் நலம் எய்தி, இறந்த பின்னும்,
சிந்தித்தவண்ணம் இவள் இந்திரசேனை ஆகி,
அந்தப் பதியை அடைந்தாள்; மற்று அவனும் அஞ்சி,
வந்தித்த தொல்லை அரு மா தவம் மன்னி நின்றான். 79

'அன்னோன் அகல, அவன்மேல் அவள் ஆசை விஞ்சி,
''என்னோ புரிவது, இனி?'' என்றலும், ஏந்தல் கூற்றால்,
தன் ஓர் வடிவின் ஒரு கூறு ஒரு தையல் ஆளும்
முன்னோனை நோக்கித் தவம் செய்தனள், மூரல் வாயாள். 80

'ஐந்து ஆனனத்தோன் அருள் செய்ய, அழகில் மிக்காள்,
ஐந்து ஆன சொல்லால், ''கணவன்-தருக, ஐய!' என்றாள்;
ஐந்து ஆன சொல்லான் அளித்தான், மற்று அவனும்—முன் நாள்,
ஐந்து ஆன போகம் இவள் எய்தியவாறு அறிந்தே. 81

'முன் நின்ற தேவன் மொழியின்படி, கங்கை மூழ்கி,
தன்னந்தனி நின்று அழுகின்ற அத் தையல் கண்ணீர்
பொன் அம் கமல வனம் ஆன புதுமை நோக்கி,
''என்?'' என்று, இவளை இமையோர் பதி எய்தினானே. 82

அவனை, 'தொடர்பால் வருக!' என்ன, அவனும், ஆங்கண்
சிவனைச் சிறிதும் மதியாது, எதிர் சென்றகாலை,
'இவனுக்கு என் மேன்மை?' எனச் சீறலும், எஞ்சினான்போல்,
புவனத்து எவரும் நகையாட, புலம்பி வீழ்ந்தான். 83

'வெவ் ஆயுதங்கள் உதவாமல் விபுதநாதன்
இவ்வாறு வீழ, மழுவாளி, இமைப்பில் மீண்டும்,
அவ் வாசவற்குப் பிலம் ஒன்றில் அடைத்த வச்ரக்
கை வாசவர்கள் ஒரு நால்வரைக் காட்டினானே. 84

'வன் பாதலத்தில் வரு நால்வரும், வானின் வந்த
புன் பாகசாதனனும், தன் அடி போற்றி நிற்ப,
'அன்பால் மகிழ்நர் இவட்கு ஐவரும் ஆதிர்!' என்று,
மென் பாவை பங்கன் விதிக்க, புவிமீது வந்தார். 85

'தருமன், பவனன், தினநாதன் தனயர்தம்பால்
வரும் இந்த நால்வர், அவர் நால்வரும்; மாலை மார்பா!
தெருமந்த இந்தச் சிலை வீரன், இத் தேவர்க்கு எல்லாம்
பெருமன்; பிறப்பிற்கு அவனே முன் பிதாவும் ஆனன். 86

'இம் மாது, தொல்லை அரு மா தவத்து எல்லை கண்ட
அம் மாது; இவள் காதலர் ஐவரும் ஆக!' என்று,
தெவ் மாதர் முன் பூண் கவர் மன்னன் தெளியுமாறு
வெம் மா தவத்தோன் பெரு ஞான விழியும் ஈந்தான். 87

வியாதன் மொழியால் மனம் தெளிவுற்ற துருபதன், திரெளபதியை ஐவருக்கும்
ஒரு நல்ல நாளில் மணம் புரிவித்தல்

ஓதாது உணர்ந்து, மறை நாலும் உருவு செய்த,
வேதாவும் ஒவ்வா, வியாதன் மொழி வெள்ள நீரால்,
கோதான நெஞ்சைக் குளிப்பாட்டினன்; கோடி கோடி
தூதான வண்டு துதை மாலை கொள் சோமகேசன். 88

வியப்போடு தொல்லை முனி சொல் தலைமீது கொண்டு,
பயப்போன், மகள்மேல் புரிகின்ற பரிவினுக்கும்,
வயப் போர் நிருபர் பெருமைக்கும் வலிக்கும், ஈடா,
நயப்போடு மன்றல் அயர்வித்தனன், நன்கு ஓர் நாளில். 89

தருமன் முதலிய ஐவரும் முறையே சடங்குடன் திரெளபதியை மணத்தல்

பாடும் சுருதி மறைவாணரும், பாரில் உள்ள
சூடும் கனக முடி வேந்தரும், தொக்கு நிற்ப,
நீடும் கதிர் மா மணித் தூண்கள் நிரைத்த பத்தி
ஆடும் கொடி மண்டபம் எய்தினர், அண்டர் போல்வார். 90

குறிக்கும் பணிலம் முதல் ஆயிரம் கோடியாகப்
பிறிக்கும் கருவி இடம்தோறும் பிளிறி ஆர்ப்ப,
செறிக்கும் கழற் கால் அறன் மைந்தனைச் செம்பொன் வேதி
எறிக்கும் கிரண மணிப் பீடம்அது ஏற்றினரே. 91

இடத் தோள் இவட்கும், வலத் தோள் இவ் இறைவனுக்கும்,
திடத்தோடு உரைத்த குறியின் பயன் சேர்ந்து தோய,
விடத்தோடு அமுதம் கலந்தென்ன மிளிரும் வேற்கண்
வடத்தோடு விம்மும் முலையாளை வலத்தில் வைத்தார். 92

கேள்விக்கு ஒருவன் எனும் தௌமியன் கீத வேத
வேள்விக்கு வேண்டுவன யாவும் விதியின் ஈட்டி,
மூள்வித்த செந் தீக் கரி ஆக, முரசு உயர்த்த
வாள் வித்தகற்கு வரமான சடங்கு செய்தான். 93

பல் மங்கலமும் உடன் வைகிய பண்பினளை
நல் மங்கலப் பூண் துகிலோடு நயந்து சாத்தி,
தன்மம் கலந்த மனத்தோனை அத் தையலோடும்
தொல் மங்கலச் செஞ் சுடர்த் தீ வலம் சூழுவித்தார். 94

கங்குல், பவள வனம்மீது கடல் தரங்கம்
பொங்கி, தரளத் திரள் சிந்திப் பொழியுமாபோல்,
அங்கிப் புறத்து, திருக் காப்பு அணி அம் கை ஏந்தி,
செங் கண் கரிய குழலாள் பொரி சிந்தினளே. 95

இவ்வாறு மன்றல் அயர்வித்தபின், ஈன்ற காதல்
வெவ் ஆர் அழலில் முறை மூழ்கினள் மீண்டு தோன்ற,
மை வார் அளக வடமீன் நிகர் கற்பினளை
அவ்வாறு மற்றை ஒரு நால்வரும் அன்று வேட்டார். 96

யாகசேனன் ஐவர்க்கும் பல வகை வரிசைகள் அளித்தல்

மாரன் கரும்பு வளரும்படி வார்த்த நீரால்
ஈரம் புலராக் கரத்தோருக்கு, யாகசேனன்,
'தேரும், பரியும், களிறும், திரள் சேனை யாவும்,
பாரும், தனமும், உமது' என்று பலவும் ஈந்தான். 97

பாண்டவர் மன்றல் பெற்ற செய்தி அறிந்து, துரியோதனுதியர்
மீண்டு வந்து பொருதல்

'ஆண்டு மன்றல் பெற்று அங்குரித்தார், இகல்
பாண்டு மைந்தர்' எனும் சொல் பரவலும்,
தாண்டு வெம் பரித் தேர்த் தார்த்தராட்டிரர்
மீண்டும் வந்து, அவர்மேல் வினை செய்யவே, 98

போரில் பாண்டவர்க்குத் தோற்று, பகைவர் அனைவரும் தம் ஊருக்கு மீளுதல்

சென்ற சேனையும், திட்டத்துய்மனுடன்
நின்ற சேனையும், நேர் உறு பூசலில்,
கொன்ற சேனை ஒழி குரு சேனையை
வென்ற சேனை வெகுண்டு, வென் கண்டதே. 99

சாலும் வஞ்சச் சகுனியொடு எண்ணிய
நாலு மைந்தரும் நச்சு எயிறு ஆகவும்,
வாலும் மெய்யும் வருக்கங்கள் ஆகவும்,
ஆலும் வெம் பகை ஆடு அரவு ஆனதே. 100

அந்த நாகம் அழல் உமிழ் கண் விடம்
சிந்த, மேல் விடு சீற்றமும் தோற்றமும்,
முந்த, வார் சிலைக் கைம் முகில் வாகனன்
மைந்தன் வாளி மழைகளின் மாய்ந்தவே. 101

சமர வேழ முகாசுரன் சாய்ந்தனன்
குமரனால் என, கோ நகுலன்தனால்,
அமரில் யானை அணி முகத்தோடு மெய்
தமர் பட, புறம்தந்தனன், கன்னனே. 102

முன்னிடச் சமர் மோதும் சகுனியை,
மின்னிடைப் புயங்கம் வெருக் கொண்டென,
தன் இடக் கைத் தனுவொடும் தேரொடும்
பின்னிடப் பொருதான், அவன் பின்னவன். 103

தண் மதிக் குடைத் தம்முனும், தம்பியும்,
எண்ணும் மற்றை இளைஞர்கள் யாவரும்,
கண் உறக் களம் காணும் முன், தீயினால்
வெண்ணெய் ஒத்து உடைந்தார், விறல் வீமனால். 104

விரோசனக் கதிர் மைந்தனும், வேந்தனும்,
சரோசனத் திறல் தம்பியும், மாமனும்,
புரோசனப் பெயர்ப் புன்மதிதன்னை நொந்து,
அரோசனத்துடன் அத்தினம் நண்ணினர். 105

பாண்டவர் பாஞ்சாலத்தில் சிறப்புற்றிருத்தல்

முந்து போரில் முதுகிடும் வேந்தரால்,
விந்தைதன்னையும் மேதக வேட்டபின்,
அந்த மா நகர் ஐவரும், மாமனும்,
வந்த கண்ணனும், அன்புடன் வைகினர். 106

திருதராட்டிரன் பாண்டவர்க்கு அரசு அளிக்கக் கருதி, அவர்களை அத்தினபுரிக்கு வரவழைத்தல்

தும்பை சூடிய வேல் துரியோதனன்
வெம்பு போரில் முதுகிட்டு மீண்டபின்,
தம்பி கூறு தருமனுக்கு ஈயுமாறு,
அம்பிகேயன் அமைச்சரொடு எண்ணினன். 107

தாதினால் பொலி தார் வரை மார்பரை,
தூதினால், தங்கள் தொல் பதி சேர்த்தினன்—
'காதினால் பயன் இன்று' என, கண்கள்போல்
கோதினால் தெரியா மனக் கோளினன். 108

பாண்டவர் அரசு பெறும்பொருட்டு, அத்தினபுரி வந்து தங்குதல்

வீடுமற்கும் விதுரற்கும் ஏற்க, அந்
நாடு முற்றும் நரபதி நல்கவே,
ஆடு பொற்கொடி அந் நகர் வைகினர்—
நீடு வில்-திறலோர் நெடுங் காலமே. 109

# 6. இந்திரப்பிரத்தச் சருக்கம்

திருதராட்டிரன் தருமபுத்திரனுக்கு முடி சூட்டுவித்தல்

அத்தினபுரியில் ஐ-இரு பதின்மர்
ஐவர், என்று இரண்டு அற, தம்மில்
ஒத்தனர் மருவ, தெவ்வர் மெய் வெருவ,
உளம் மகிழ் நாளில், மற்று ஒரு நாள்,
மைத்துனன் முதலாம் தமரையும், தக்க
மந்திரத்தவரையும், கூட்டி,
'இத் தினம் உயர்ந்த தினம்' என, மகுடம்
சூட்டுதற்கு எண்ணினன், இகலோன். 1

'செழு முரசு உயர்த்த வேந்தனுக்கு இன்று
திரு அபிடேக நாள்' என்று,
முழு முரசு அறைந்து, நகரி கோடித்து,
முடி புனை கடி கொள் மண்டபத்தின்
எழு முரசு அதிர, பகீரதி முதலாம்
எத் துறைப் புனல்களும் இயற்றி,
தொழு முரசுடன் வெள் வலம்புரி முழங்க,
சுருதி மா முனிவரும் தொக்கார். 2

அத்தியின் பலகை நவமணி அழுத்தி,
ஆடகத்து அமைத்து, அரி முகத்தால்
பத்தி கொள் பீடத்து அழகுற இருத்தி,
பசும் பொனின் தசும்புகள் நிறைந்த
சுத்த நீர் வியாதன் தௌமியன் முதலோர்
சொரிந்தனர்—சோமன் வந்து உதித்து,
சித்திர கிரியின் நெடு நிலா வெள்ளம்
சீருடன் வழிய, வார்த்தெனவே. 3

உதய மால் வரையில் உதய ராகத்தோடு
உதித்த தேர் உதயன் என்று உரைப்ப,
துதை அளி ததைந்த மாலையான் சென்னிச்
சோதி மா மகுடமும் சூட்டி,
பத யுகம் அரசர் முடிகளால் சிவப்ப,
பகர் விதி முடித்தபின், பலரும்
இதயம் ஒத்து அமிர்த மொழியவர்
அடைவே இரு கை நீராசனம் எடுத்தார். 4

தம்பியர் சூழ, யானைமீது தருமன் நகர் வலம் வருதல்

ஒற்றையோடு இரட்டை வலம்புரி மிழற்ற,
ஒரு குடை மதி என நிழற்ற,
கொற்றவர் முன் பின் போதர, மடவார்
குழுப் பொரி சிந்தி வாழ்த்து எடுப்ப,
இற்றை நாள், எவரும், வாய்த்தவா! என்ன,
ஏழ் உயர் இராச குஞ்சரமேல்,
மற்றை நால்வரும் தன் சூழ்வர, தருமன்-
மைந்தன் மா நகர் வலம் வந்தான். 5

திருதராட்டிரன் ஏவலால் தருமன் முதலியோர் கண்ணனுடன்
காண்டவப்பிரத்தம் சேர்தல்

மா நகர் வலமாய் வந்து, தன் குரவர்
மலர்ப் பதம் முறைமையால் வணங்கி,
கோ நகர் இருக்கை அடைந்தனன்; ஒரு நாள்,
கொற்றவன் ஏவல் கைக்கொண்டு,
பேய் நகர் எனுமாறு யாவரும் வழங்காப்
பிறங்கு நீள் கானிடை அழிந்த
தூ நகர் முன்னோர் இருந்தது ஒன்று, அந்தத்
தொல் நகர் வைகுமா துணிந்தான். 6

அம் கண் மா ஞாலம் முழுவதும் கொடுத்தற்கு
ஆயர்தம் பதியின் அங்குரித்த
செங் கண் மால் முதலாம் கிளைஞரும், வயிரத்
தேர்மிசைச் சேனையும், தாமும்,
வெங் கண் மாசுணத்தோன் எண்ணம் எத் திசையும்
வெளிப்பட, வேந்தர் ஐவரும் போய்,
தங்கள் மா தவத்தால் காண்டவப் பிரத்தம்
என்னும் அத் தழல் வனம் அடைந்தார். 7

கண்ணன் இந்திரனோடு விச்சுவகன்மாவையும் வருவிக்க, இந்திரன்
ஒரு நகரம் அமைக்குமாறு விச்சுவகன்மாவை ஏவுதல்

போய் அவண் புகுந்த பொழுது, பைங் கடலும்,
பூவையும், புயலும், நேர் வடிவின்
மாயவற்கு, 'எவ்வாறு, இவ்வுழி இவர்கள்
வாழ்வது?' என்று, ஒரு நினைவு எய்தி,
நாயகக் கடவுள்தன்னை முன்னுதலும்,
நாக நாயகனொடும் நடுங்கி,
மேய கட்புலன்கள் களித்திட, திருமுன்
நின்றனன், விச்சுவகன்மா. 8

நுண்ணிதின் உணர்ந்தோர் உணர்தரும் சிற்ப
நூல் அறி புலவனை நோக்கி,
திண்ணிதின் அமரர் சேகரன் மொழிந்தான்:
'தேவரும் மனிதரும் வியப்ப,
மண்ணினும், புயங்கர் பாதலம் முதலாம்
மற்று உள உலகினும், நமதாம்
விண்ணினும், உவமை இலதென, கடிது ஓர்
வியல் நகர் விதித்தி, நீ' எனவே, 9

விச்சுவகன்மா சிறந்த நகரை அமைக்க, அது கண்டு யாவரும் வியத்தல்

தேவினும், தேவ யோனியில் பிறந்த
திரளினும், சிறந்த யாவர்க்கும்,
பூவினும், எவ் எவ் உலகினும், முன்னம்
புந்தியால் இயற்றிய புரங்கள்
யாவினும், அழகும் பெருமையும் திருவும்
இன்பமும் எழு மடங்கு ஆக,
நாவினும் புகல, கருத்தினும் நினைக்க,
அரியது ஓர் நலம் பெறச் சமைத்தான். 10

'மரகதம், கோமேதகம், துகிர், தரளம்,
வைரம், வைதூரியம், நீலம்,
எரி மணி, புருடராகம், என்று இவற்றிற்கு
ஆகரம் இந்த மா நகர்' என்று,
அரி முதல் இமையோர் அனைவரும் புகழ்ந்தார்;
'ஆடகப் பொருப்பினை அழித்து,
தரணியில் நகர் ஒன்று அமைத்தவா!' என்று,
தபதியர் யாவரும் வியந்தார். 11

'என் பதி அழகு குலைந்தது' என்று எண்ணி,
இந்திரன் வெறுக்கவும், இயக்கர்
மன், 'பதி பொலிவு சிதைந்தது' என்றிடவும்,
மற்றுள வானவர், 'பதிகள்
புன் பதி ஆகிப் போயின' எனவும்,
'புரை அறு புந்தியால், புவிமேல்
நன் பதி இது ஒன்று இயற்றினன்' என்று,
நாரணாதிகள் துதித்திடவும், 12

கண்ணன் அந்த நகரத்துக்கு இந்திரப்பிரத்தம் என்று பெயரிடுதல்

சந்திராதபமும் தினகராதபமும்
இரு பொழுதினும் எழச் சமைத்த
மந்திராதிகளும், மஞ்சமும், மதிலும்,
மகர தோரண மணி மறுகும்,
கொந்து இராநின்ற சோலையும், தடமும்,
கொற்றவன் கோயிலும், நோக்கி,
இந்திராபதி, அவ் இந்திரன் பெயரால்,
'இந்திரப்பிரத்தம்' என்று இட்டான். 13

இந்திரப்பிரத்த நகரின் மாண்பு

'இமையவர் பதியில் உள்ளன யாவும்
இங்கு உள; இங்கு மற்று உள்ள
அமைவுறு பொருள்கள் அங்கு இல' எனுமாறு,
அமைத்த வான் தொல் பதி அழகைச்
சமைவுற விரித்துப் புகழ்வதற்கு உன்னில்,
சதுர் முகத்தவனும் மெய் தளரும்;
நமர்களால் நவில முடியுமோ? முடியாது;
ஆயினும், வல்லவா நவில்வாம்: 14

விதி மறை முறையில் சாந்தி செய் கடவுள்
வேதியர் ஆரவம் ஒரு சார்;
மதி முறை தவறா அமைச்சர் சொல் விழையும்
மன்னவர் ஆரவம் ஒரு சார்;
நிதி கெழு செல்வத்து அளகையோர் நெருக்கால்
நிறைந்த பேர் ஆரவம் ஒரு சார்;
பதிதொறும் உழவர் வினை பயன் எடுக்கும்
பறை கறங்கு ஆரவம் ஒரு சார்; 15

தோரண மஞ்சத் தலம்தொறும் நடிக்கும்
தோகையர் நாடகம் ஒரு சார்;
பூரண பைம் பொன் கும்பமும், ஒளி கூர்
புரி மணித் தீபமும் ஒரு சார்;
வாரணம், இவுளி, தேர், முதல் நிரைத்த
வாகமும் சேனையும் ஒரு சார்;
நாரணன் வனச பத யுகம் பிரியா
நலம் பெறும் மா தவர் ஒரு சார்; 16

சிற்ப வல்லபத்தில் மயன்முதல் உள்ள
தெய்வ வான் தபதியர் ஒரு சார்;
வெற்புஅகம் மருவி வீற்று வீற்று இருக்கும்
விஞ்சையர் கின்னரர் ஒரு சார்;
அற்புத வடிவின் உருப்பசி முதலாம்
அழகுடை அரம்பையர் ஒரு சார்;
பொற்புடை அமரர் புரியும் மெய்ம் மகிழ்ந்து
பொழிதரு பொன் மலர் ஒரு சார். 17

வரை எலாம், அகிலும், சந்தனத் தருவும்,
மான்மத நாவியின் குலமும்;
திரை எலாம், முத்தும், பவள வண் கொடியும்,
செம் மணிகளும், மரகதமும்;
கரை எலாம், புன்னைக் கானமும், கண்டல்
அடவியும், கைதை அம் காடும்;
தரை எலாம், பொன்னும், வெள்ளியும், பழன
வேலி சூழ் சாலியும், கரும்பும். 18

ஆலையில் கரும்பின் கண்களில் தெறித்த
ஆரம், அவ் வயல் புறத்து அடுத்த
சோலையில் பயிலும் குயிலையும், சுருதிச்
சுரும்பையும், நிரை நிரை துரப்ப;
வேலையில் குதித்த வாளைஏறு உம்பர்
வியன் நதி கலக்கி, வெண் திங்கள்
மாலையில் பயிலும் வானமீன் கொடிபோல்,
வாவியில் குளிக்கும்—மா மருதம். 19

புரிசையின் குடுமிதொறும் நிரை தொடுத்த
பொற் கொடி ஆடையின் நிழலைக்
கிரிமிசைப் பறக்கும் அன்னம் என்று எண்ணி,
கிடங்கில் வாழ் ஓதிமக் கிளைகள்,
விரி சிறைப் பறவின் கடுமையால் எய்தி,
மீது எழும் மஞ்சு எனக் கலங்கி,
பரிசயப்படு தண் சததளப் பொகுட்டுப்
பார்ப்பு உறை பள்ளிவிட்டு அகலா; 20

கயல் தடஞ் செங் கண் கன்னியர்க்கு இந்து-
காந்த வார் சிலையினால் உயரச்
செயல்படு பொருப்பின் சாரலில், கங்குல்
தெள் நிலா எறித்தலின் உருகி,
வியப்பொடு குதிக்கும் தாரை கொள் அருவி
விழைவுடன் படிவன சகோரம்,
நயப்புடை அன்னச் சேவல், பேடு என்று
நண்ணலால் உளம் மிக நாணும். 21

அரி மணிச் சிலையின் சலாகையால் வட்டம்
ஆகவே அமைத்த சாலகம்தோறு,
எரி மணிக் குழையார் வதன மண்டலத்தில்
எழிலுடன் மிளிரும் மைத் தடங் கண்—
விரி மணிக் கதிரோன் அளிக்க முன் களிந்த
வெற்பிடை வீழும் மா நதியின்
புரி மணிச் சுழியில் துணையொடும் உலாவிப்
பொருவன கயல்களே போலும்! 22

'இனத்தினால் உயர்ந்த இந்திரபுரியும்,
இந்திரப்பிரத்தமும், இரண்டும்,
தனத்தினால், உணர்வால், கேள்வியால், அழகால்,
தக்கது ஒன்று யாது?' எனத் துலைகொள்
மனத்தினால் நிறுக்க, உயர்ந்தது ஒன்று; ஒன்று
மண்மிசை இருந்தது; மிகவும்
கனத்தினால் அன்றித் தாழுமோ? யாரும்
கண்டது கேட்டது அன்று இதுவே. 23

நிறக்க வல் இரும்பைச் செம்பொன் ஆம்வண்ணம்
நிகழ்த்திய இரதமே நிகர்ப்ப,
பிறக்கமும் வனமும் ஒழித்து, அவன் அமைத்த
பெரும் பதிக்கு உவமையும் பெறுமல்,
மறக் கடுங் களிற்றுக் குபேரன் வாழ் அளகை
வடக்கு இருந்தது; நெடு வானில்
துறக்கமும் ஒளித்தது; இலங்கையும் வெருவித்
தொடு கடல் சுழிப் புகுந்ததுவே. 24

வாவியும், புறவும், சோலையும், மலர்ந்த
மலர்களும், மணிகளின் குழாமும்,
மேவி எங்கு எங்கும் மயங்கலின் தம்தம்
வேரியும் வாசமும் தூதா,
பூஇனம் சுரும்பை அழைக்கும் வண் பழனப்
புது வளம் சுரக்கும் நாடு அனைத்தும்
ஓவியம் குறித்துப் பூமகள் வடிவை
ஒப்பனை செய்தவாறு ஒக்கும். 25

பாண்டவர் இந்திரப்பிரத்த நகரில் குடி புகுதல்

பரிமள, மதுபம் முரல், பசுந் தொடையல்
பாண்டவர் ஐவரும், கடவுள்
எரி வலம் புரிந்து, முறை முறை வேட்ட
இன் எழில் இள மயில் அன்றி,
வரிசையின் அணுகி உரிமையால் அவனி
மயிலையும் மன்றல் எய்தினர்போல்,
புரி வளை தரளம் சொரி புனல் அகழிப்
புரிசை சூழ் புரம் குடி புகுந்தார். 26

விச்சுவகன்மா காட்ட, பாண்டவர் கோபுரத்தின் மேலிருந்து அந் நகரின் சிறப்பைக் காணுதல்

உரம் குடி புகுந்த திண் தோள் உதிட்டிரன் முதலியோர் அப்
புரம் குடி புகுந்து, தங்கள் பொன் எயில் கோயில் எய்த,
திரம் குடி புகுந்த கல்விச் சிற்ப வித்தகன், தன் நெஞ்சால்
கரம் குடி புகாமல் செய்த கடி நகர் காட்டலுற்றான். 27

நா புரப்பதற்கே ஏற்ற நவிர் அறு வாய்மை வேந்தர்,
கோபுரத்து உம்பர், மஞ்ச கோடியில் நின்று, தங்கள்
மா புரத்து உள்ள எல்லை வள மனை யாவும், மாதர்
நூபுரத்து அரவ வீதி அகலமும், நோக்கினாரே. 28

நகரின் சிறப்பைப் பாண்டவர் பலவாறு வியந்து கூறுதல்

'அரவின் வெஞ் சுடிகை கொண்ட அவிர் மணிச் சோதி மேன்மேல்
விரவி வந்து எறிப்ப, பச்சை மெய் சிவப்பு ஏறிற்று ஆக,
இரவிதன் இரதம் பூண்ட எழு பெயர்ப் பவன வேகப்
புரவியை ஐயுற்றேகொல், புரி வலம் புரிவது?' என்பார். 29

அருளுடை அறத்தின் வாழ்வாம் அந் நகர் இல்லம் எங்கும்
இருளுடை இந்த்ரநீலத்து இயன்ற சாளரங்கள் நோக்கி,
'உருளுடை ஒற்றை நேமி உறு பரித் தேரோன் சீற,
தெருளுடைத் திமிரம் போன சில் நெறி போலும்!' என்பார். 30

சமர் முகப் பொறிகள் மிக்க தட மதில் குடுமிதோறும்
குமர் உறப் பிணித்த பைம்பொன் கொடித் துகில் அசைவு நோக்கி,
'நமர் புரக் கிழத்தி, உம்பர் நாயகன் புரத்தினேடும்
அமர் பொரப் பற் பல் கையால் அழைப்பதுபோலும்!' என்பார்.

தகும்பு உறும் அகிலின் தூபம், சாறு அடு கரும்பின் தூபம்,
அசும்பு அரு மடையின் தூபம், அவி பெறும் அழலின் தூபம்,
விசும்புற நான்கு திக்கும் மிசை மிசை எழுதல் நோக்கி,
'பசும் புயல் ஏழு அன்று; இன்னும் பல உளவாகும்' என்பார். 32

'அடுக்குற நிலம் செய் மாடத்து அணி உறு பெரும் பதாகை,
மிடுக்கினுல் அனிலன் எற்றி, விசையுடன் எடுத்து மோத,
உடுக்களும் நாளும் கோளும், உள்ளமும் உடலும் சேர
நடுக்கு உறுகின்ற, இந்த நகர் வழி போக' என்பார். 33

துதை அளி முரலும் வாசச் சோலையின் பொங்கர்தோறும்,
விதம் உற எழுந்து, காள மேகங்கள் படிதல் நோக்கி,
'கதிர் மணி அகழி மா மேகலையுடை நகர மாதின்
புகை நறு மலர் மென் கூந்தல் போலுமா காண்மின்!' என்பார். 34

ஈட்டிய மணியும் பொன்னும் எழில் பெற, புடைகள்தோறும்
பூட்டிய சிகரி சாலப் புரிசையின் புதுமை நோக்கி,
'கோட்டிய நகரி என்னும் குலக் கொடி மன்றல் எய்த,
சூட்டிய சூட்டுப் போலத் துலங்குமா காண்மின்!' என்பார். 35

'பணிஇனம் பலவும் ஆர்ப்ப, பைங் கொடி நிரைத்த செல்வத்
துணை மணி மாடம் மன்னும் தோரண வீதி யாவும்,
புணை வனம் நெருங்க நீடி, பொழி புயல் கிழிக்கும் சாரல்
இணை வரை நடுவண் போதும் யாறு போல் இலங்கும்!' என்பார்.

தருமன் விச்சுவகன்மாவுக்கு விடை கொடுத்து அனுப்புதல்

கண்ணுறு பொருள்கள் யாவும் கண்டு கண்டு உவகை கூர,
எண் உறு கிளைஞரோடும், யாதவ குமரரோடும்,
பண் உறு வேத வாழ்நர் பலரொடும், வைகி, ஆங்கண்,
விண் உறு தபதிக்கு அம்ம, விடை கொடுத்தருளினனே. 37

கண்ணன், இந்திரன் முதலியோர் தம்தம் பதிக்கு மீளுதலும், தருமன் சிறப்புற அரசாளுதலும்

கேசவன் முதலா உள்ள கிளைஞரும், கேண்மை தப்பா
வாசவன் முதலினேரும், மன்னு தம் பதிகள் புக்கார்;
ஓச வன் திகிரி ஓச்சி, உதய பானுவுக்கும் மேலாம்
தேசவன்தானும், வையம் திசை முறை திருத்தி ஆண்டான். 38

ஒருநாள் நாரதமுனிவன் அங்கு வருதலும், பாண்டவர் அம் முனிவனை உபசரித்தலும்

யாய் மொழி தலைமேல் கொண்டும், இளையவர் மொழிகள் கேட்டும்,
வேய் மொழி வேய்த் தோள் வல்லி மென் மொழி விரும்பலுற்றும்,
வாய்மொழி அறத்தின் மைந்தன் மா நகர் வாழும் நாளில்,
ஆய் மொழிப் பாடல் யாழ் ஓர் அந்தணன் ஆங்கண் வந்தான். 39

இந்த நாரதனைப் போற்றி, இரு பதம் விளக்கி, வாசச்
சந்தனுகருவின் தூபம் தவழ் மணித் தவிசின் ஏற்றி,
வந்தனு விதியில் சற்றும் வழு அற வழிபாடு எய்தி,
அந்த நால்வரும் அவ் வேந்தும், ஆதி வாசவர்கள் ஆனார். 40

வரம் மிகு கற்பினளும் மாமியும் வணங்கி நிற்ப,
சரிகமபதநிப் பாடல் தண்டு தைவரு செங் கையோன்,
இரு செவி படைவீடு ஆக, எம்பிரான் அளிக்கப் பெற்ற
பெரு முனி, அவர்க்கு ஓர் வார்த்தை பெட்புறப் பேசுவானே: 41

நாரதன் சுந்தோபசுந்தர் வரலாறு கூறி, திரௌபதி நிமித்தமாகப் பாண்டவர்க்கு ஒரு நியமம் உரைத்தல்

'முராரியை, முராரி நாபி முளரி வாழ் முனியை, முக் கண்
புராரியை, நோக்கி, முன் நாள், புரி பெருந் தவத்தின் மிக்கார்
சுராரிகள்தம்மில் சுந்தோபசுந்தர் என்று இருவர், தங்கள்
திராரி ஏவலினால் வந்த திலோத்தமைதன்னைக் கண்டார். 42

'காண்டலும், அவள்மேல் வைத்த காதலால் உழந்து, நெஞ்சில்
ஈண்டிய துயரத்தோடும் இருவரும் நயந்த போழ்து, அப்
பூண் தகு பொலிவினாள்தன்பொருட்டு அமர் தம்மில் பூண்டு,
மாண்டனர் என்னும் வார்த்தை மா நிலம் அறியும் அன்றே? 43

'நீவிரும் விதியால் வேட்ட நேயம் உண்டேனும், மன்றல்
ஓவியம் அனையாள்தன்னை ஓர் ஓர் ஆண்டு ஒருவர் ஆக
மேவினிர் புரியும்; அங்ஙன் மேவும் நாள், ஏனையோர் இக்
காவி அம் கண்ணினாளைக் கண்ணுறல் கடன்அது அன்றே. 44

'எண் உறக் காணில், ஓர் ஆறு இருதுவும் வேடம் மாறி,
புண்ணியப் புனல்கள் ஆடப் போவதே, உறுதி' என்று,
வண்ண வில் திறலினர்க்கு வாய் மலர்ந்து அருளி, மீண்டு,
பண்ணுடைக் கீத நாத பண்டிதன் விசும்பில் போனான். 45

நாரதன் உரைத்தபடி ஐவரும் மனைவியுடன் வாழ்தல்

சொன்ன நாள் தொடங்கி, ஐந்து சூரரும், தேவர் நாளுக்கு
இன்ன நாள் அவதி என்றே எண்ணி, ஆங்கு, இரதி கேள்வன்
அன்ன நாள் மலர்ப் பைந் தாமத்து அறன் மகன் ஆதி ஆக,
மின்னனாள்தன்னை வேட்ட முறையினால் மேவினாரே. 46

## 7. அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கம்

தருமனது நீதி தவறாத ஆட்சியில் ஒருநாள், ஒரு மறையவன் வந்து முறையிடுதல்

துன்பம், பயம், மிடி, நோய், பகை, சோரம், கொலை, எய்தாது;
இன்பம், பொருள், அறன், யாவையும் இயல்பு ஆதலின் எய்தி;
தன் பைங் குடை நிழல் மன்பதை, தரியார் முனை மதியா
வன்பன், தனை நிகர் வாழ்வு உற வரு நாள்களில் ஒருநாள், 1

அறை ஓத வனம் சூழ் புவி அரசு ஆன அனைத்தும்
திறையோடு இடம் அற நிற்பது ஓர் திரு வாயில் மருங்கே,
இறையோடு உயர் இரு கையும் எடுத்து, எண்ணுற, 'முறையோ,
முறையோ!' என, ஒரு வைதிக முனி வந்து புகுந்தான். 2

அருச்சுனன் அந்தணனுக்கு அபயம் அளித்து, வில் எடுக்கச் சென்ற இடத்தில்,
தருமனுடன் திரௌபதியைக் காணுதல்

கடை காவலர் குறை கூறலும், விசயன், கடிதில், தன்
புடை காவலர் தொழ வந்து, புவித்தேவனை, 'மறையின்
தொடை காவல! இது என்?' என, அவனும், 'தொடு கழலோய்!
விடை காவலர் நிரை கொண்டனர், வில் வேடுவர்' என்றான். 3

'அஞ்சாது ஒழி, முனி! நீ; உனது ஆனின் கணம் இன்றே
எஞ்சாவகை தருவேன்' என, ஏவுக்கு ஒரு திலகன்,
வெஞ் சாபம் எடுப்பான் வரு விசயன், தருமனுடன்
மஞ்சு ஆர் பொழில் விளையாடிடு மயில் சீறடி கண்டான். 4

காணா, மெய்ந் நடுங்கா, ஒளி கருகா, மனம் மிகவும்
நாணா, விரைவொடு சாயக நாண் வெஞ் சிலை கொள்ளா,
சேணும் நெறி செல்லா, நனி சீறா, அமர் வெல்லா,
மாண் ஆநிரை மீளா, ஓர் இமைப்போதினில் வந்தான். 5

அந்தணனது ஆநிரையை மீட்டு அளித்தபின், தருமனிடம் விடைபெற்று,
அருச்சுனன் தீர்த்த யாத்திரை போதல்

தொறுக் கொண்டவர் உயிரும், தொறு நிரையும், கவர் சூரன்,
மறுக்கம்படு மறையோன் மனம் மகிழும்படி நல்கி,
பொறுக்கும் தவ முனி சொல்படி, புனிதப் புனல் படிவான்,
நிறுக்கும் துலை நிகர் தம்முனை நிகழ்வோடு, பணிந்தான். 6

விசயன் கங்கையில் நீராடும்போது அங்கு வந்த நாககன்னிகையருள் உலூபியை விரும்பி, பில வழியே அவள் பின் சென்று மணத்தல்

ஆடம்பர மன் வேடம் அகற்றி, தொழுதகு தொல்
வேடம் பெறு மறையோருடன் விசயன், புரவிசயன்
சூடம் தரு பாகீரதி தோய் காலையில், அவனை,
சேடன் தல மடவார் புனல் அயர்வான் எதிர் சென்றார். 7

ஓடும் கயல் விழியாரில் உலூபிப் பெயரவளோடு,
ஆடும் புனலிடை நின்றவன், அநுராகம் மிகுந்தே,
நாடும் பில வழியே அவள் பின் சென்று, நலத்தால்
நீடும் கொடி மணம் எய்தினன், முகில் போலும் நிறத்தான். 8

உலூபி இராவானைப் பெற்றெடுத்தல்

இம்மென்று அளி முரல் பாயலில் இன்பத்தை வளர்த்தும்,
பொம்மென் பரிபுர நாள்மலர் பொன் சென்னியில் வைத்தும்,
செம் மென் கனி இதழாளொடு சில்நாள் நலம் உற்றான்;
அம் மென்கொடி அனையாளும் இராவானை அளித்தாள். 9

பின், விசயன் நாகலோகத்திலிருந்து மீண்டு வந்து, இமயமலைத் தீர்த்தங்களில் முழுகி, கிழக்கு நோக்கிச் செல்லுதல்

நாகாதிபன் மகள் மைந்தன் நலம் கண்டு, மகிழ்ந்து,
நாகாதிபன் மகன், மீளவும், நதியின் வழி வந்து,
நாகாதிபன் வண் சாரலின் நல் நீர்கள் படிந்து,
நாகாதிபன் விடும் மும் மதம் நாறும் திசை புக்கான். 10

யமுனை முதலிய நதிகளில் நீராடிய பின், தென் திசை நோக்கி வந்து, திருவேங்கட மலை முதலியவற்றில் நீராடி, இறைவனை வணங்குதல்

நெளிந்து ஆடு அரவு-அணை ஐயன் நிறம் போல நிறக்கும்
களிந்தா நதி முதலாகிய கடவுள் நதி பலவும்,
முளிந்து ஆர் அழல் எழு கான் நெறி, முக் கோலினர் ஆகித்
தெளிந்து ஆறிய பெரியோரொடு சென்று, ஆடினன் அன்றே. 11

பத்திக்கு வரம்பாகிய பார்த்தன், பல தீர்த்தம்
அத் திக்கினும் எத் திக்கினும் ஆம் என்றவை ஆடி,
சித்திக்கு ஒரு விதை ஆகிய தென் நாட்டினை அணுகி,
தத்திச் சொரி அருவித் தட அரவக்கிரி சார்ந்தான். 12

இச்சைப்படி தன் பேர் அறம் எண்-நான்கும் வளர்க்கும்
பச்சைக்கொடி, விடையோன் ஒரு பாகம் திறை கொண்டாள்,
செச்சைத் தொடை இளையோன் நுகர் தீம் பால் மணம் நாறும்
கச்சைப் பொரு முலையாள், உறை கச்சிப் பதி கண்டான். 13

அயனார் புரி மக சாலையும், அணி அத்திகிரிக்கே
மயனார் செய் திருக் கோயிலும், மா நீழலின் வைகு எண்
புயனார் உறை மெய்க் கோலமும், உள் அன்பொடு போற்றி,
பயன் ஆர் புனல் நதி ஏழும், அந் நகரூடு படிந்தான். 14

பெற்றாள் சகத் அண்டங்கள் அனைத்தும், அவை பெற்றும்
முற்றா முகிழ் முலையாளொடு முக்கண்ணர் விரும்பும்
பற்றாம் என, மிக்கோர் இகழ் பற்று ஒன்றினும், உண்மை
கற்றார் தொழும் அருணாசலம் அன்போடு கை தொழுதான். 15

உருகும் கமழ் நெய் பால் இரு பாலும் கரை ஒத்துப்
பெருகும் துறை ஏழ் ஏழு பிறப்பும் கெட மூழ்கி,
கருகும் கரு முகில் மேனியர், கவி ஞானியர் கண்ணில்
பருகும் சுவை அமுது ஆனவர், பாதம் தலை வைத்தான். 16

ஐஆனனன் இயல் வாணனை அடிமைக் கொள, மெய்யே
பொய் ஆவணம் எழுதும் பதி பொற்போடு வணங்கா,
மெய் ஆகம அதிகைத் திரு வீரட்டமும், நேமிக்
கையாளன் அகிந்திரபுரமும் கண்டு, கை தொழுதான். 17

இன்னம் பல பல யோனியில் எய்தா நெறி பெறவே,
முன்னம், பலர் அடி தேடவும் முடி தேடவும் எட்டா,
அன்னம் பல பயில் வார் புனல் அணி தில்லையுள் ஆடும்,
பொன் அம்பல நாதன் கழல் பொற்போடு பணிந்தான். 18

இலங்காபுரி முன் செற்றவன் இரு போதும் வணங்க,
துலங்கு ஆடு அரவு-அணைமேல் அறி துயில் கொண்டவர் பொன்-தாள்,
பொலம் காவிரி இருபாலும் வர, பூதல மங்கைக்கு
அலங்காரம் அளிக்கும் தென் அரங்கத்திடை, தொழுதான். 19

பல தீர்த்தங்கள் ஆடி, மதுரைக்கு வந்த விசயன், பாண்டியனைக் கண்டு உரையாடுதல்

வளவன் பதி முதலாக வயங்கும் பதிதோறும்
துளவம் கமழ் அதி சீதள தோயங்கள் படிந்தே,
இள வண் தமிழ் எழுது ஏடு முன் எதிர் ஏறிய துறை சூழ்,
தளவம் கமழ் புறவம் செறி, தண் கூடல் புகுந்தான். 20

குன்றில் இள வாடை வரும் பொழுது எல்லாம் மலர்ந்த திருக் கொன்றை நாற,
தென்றல் வரும் பொழுது எல்லாம் செழுஞ் சாந்தின் மணம் நாறும் செல்வ வீதி,
நன்று அறிவார் வீற்றிருக்கும் நான்மாடக் கூடல் வள நகரி ஆளும்,
வென்றி புனை வடி சுடர் வேல், மீனவனை வானவர் கோன் மதலை கண்டான்.

அந் நிலத்தினவர் அல்லா அந்தணரோடு இவன் அவனுக்கு ஆசி கூற,
'எந் நிலத்திர்? எப் பதியீர்? எத் திசைக்குப் போகின்றீர்?' என்று போற்றி,
சென்னியர்க்கும் வில்லவர்க்கும் மணிமுடி ஆம் கழல் கால் செழியன் கேட்ப,
'கன்னியைக் கண்ணுற்று, ஆட வந்தனம்' என்றனன், மெய்ம்மைக் கடவுள் போல்வான்.

பாண்டியன் அருச்சுனன் முதலியோருக்குச் சோலையில் விருந்து அளித்தல்

வெய்தின் மகபதி முடியில் வளை எறிந்து, மீண்ட நாள், விண்ணின் மாதர்
கொய்து மலர் தொலையாத குளிர் தருக்கள் ஒரு கோடி கொண்டு போந்து,
மை தவழ் தன் தடங் கோயில் வருதமதன் ஒரு மருங்கு வைத்த காவில்,
கைதவர் கோன், மற்று அவர்க்குப் போனகம் செய்து, அருந்தும் இடம் கற்பித்தானே.

சோலையில் தோழியருடன் விளையாட வந்த பாண்டியன் மகள் சித்திராங்கதையைக் கண்டு, விசயன் காதல் கொள்ளுதல்

வேதியரோடு அக் காவில் இளைப்பாறி இருந்த அளவில் மின் குழாம்போல்
தாதியரும் சேடியரும் தற் சூழ, சிலை மதனன் தனி சேவிக்க,
சோதி அரிச் சிலம்பு அரற்ற, துணைநெடுங் கண் செவி அளப்ப, தொடித் தோள் வீசி,
ஆதி அரவிந்தை என, நிருபன் மகள் விளையாடற்கு ஆங்கு வந்தாள்.

பச்சென்ற திரு நிறமும், சேயிதழும், வெண் நகையும், பார்வை என்னும்
நச்சு அம்பும், அமுது ஊற நவிற்றுகின்ற மட மொழியும், நாணும், பூணும்,
கச்சின்கண் அடங்காத கன தனமும், நுண் இடையும், கண்டு சோர்ந்து,
பிச்சன்போல் ஆயினன்—அப் பெண்கொடி மெய்ந்நலம் முழுதும் பெறுவான் நின்றான்.

புத்திரர் வேறு இல்லாது, புரிவு அரிய தவம் புரிந்து, பூழி வேந்தன்,
சித்திரவாகனன் பயந்த சித்திராங்கதை என்னும் செஞ் சொல் வஞ்சி
பத்திரமும், நறு மலரும், அவயவம்போல் விளங்குவன பலவும் கொய்து,
மித்திர மா மகளிருடன் விரவி, ஒரு செய்குன்றில் மேவினாளே. 26

விசயன் சித்திராங்கதையைத் தனியிடத்துக் கண்டு, கந்தருவ முறையால் இன்பம் துய்த்தல்

முன் உருவம்தனை மாற்றி, முகில் வாகன் திரு மதலை மோகி ஆகி,
தன் உருவம்தனைக் கொண்டு, சாமனிலும் காமனிலும் தயங்கும் மெய்யோன்,
பொன் உருவம் என மலர்ந்து பொலிந்தது ஒரு சண்பகத்தின் பூந் தண் நீழல்,
மின் உருவ நுண் இடையாள் விழி களிக்கும்படி நின்றான், வீரர் ஏறே.

வண்டானம் திரி தடத்து வரி வண்டின் இனம் பாட, மயில்கள் ஆட,
தண் தார் மெய்க் கிளிக் கூட்டம் சான்றோர்கள் உரை பயிற்ற, தமிழ்கள் மூன்றும்
கொண்டாடி, இளம் பூவைக் குழாம் தலை சாய்த்து, உளம் உருகும் குன்றின் ஆங்கண்,
கண்டாள் அக் குமரனை, தம் கொடிக் கயலைப் புறம் காணும் கண்ணினாளே. 28

செந்திருவை அனையாளும், திருமாலை அனையானும், சிந்தை ஒன்றாய்,
வந்து இருவர் விலோசனமும் தடை இன்றி உறவாடி, மகிழ்ச்சி கூர்ந்து,
வெந்து உருவம் இழந்த மதன் மீளவும் வந்து இரதியுடன் மேவுமாபோல்,
கந்தருவ முறைமையினால், கடவுளர்க்கும் கிடையாத காமம் துய்த்தார்.

பின், சித்திராங்கதை தோழியரிடம் வந்து, நிகழ்ந்தவற்றை உரைத்தல்

கூடி இருவரும் ஒருவர் என இதயம் கலந்ததற்பின், குறித்த தூநீர்
ஆடிய வந்ததும், தன்னை அருச்சுனன் என்பதும், இளமான் அறியக்கூறி,
'"நீடியது" என்று ஐயுறுவர்; நீ இனி ஏகு' என உரைப்ப, நெடுங்கண்ணாள் போய்,
சேடியருக்கு, அஞ்ஞான்று நிகழ்ந்த எலாம், மகிழ்ந்து உருகிச் செப்பினளே. 30

சித்திராங்கதை காதல் நோயால் வருந்துதல்

கவுரியர் கோன் திருமகளைக் கண் அனையார் கொண்டுபோய், கன்னிமாடத்து
அவிரும் மணிப் பரியங்கத்து ஐஅமளி ஏற்றிய பின், அனங்கன் போரால்,
நவிருடை மா மயல் உழந்து, நயனங்கள் பொருந்தாமல், நாண் உருமல்,
'தவிர்க!' எனவும் தவிராமல், தன் விரகம் கரை அழிந்து, தளர்ந்தாள் மன்னோ.

தங்கள் மலைச் சந்தனத்தை, 'தழல் குழம்போ, இது!' என்னும்; தாபம் தோன்ற,
தங்கள் கடல் தண் முத்தைக் கண் முத்தால் நீறு ஆக்கும்; தக்கோர் ஆய்ந்த
தங்கள் தமிழ்க் குழல் இசையைத் தன் செவிக்கு, 'விடம்!' என்னும்; தபனன் ஏக,
தங்கள் குலக் கலை மதியை, 'தபனன்' எனும்; என் பட்டாள் தனி பொருதாள்! 32

செவிலித்தாயர் நிகழ்ந்தவற்றை மன்னனுக்கு அறிவித்தலும், அது கேட்டு
மன்னன் மகிழ்தலும்

அங்கு உயிர்போல் இரு மருங்கும் ஆய மட மகளிர் இருந்து, ஆற்ற ஆற்ற,
கங்குல் எனும் பெருங் கடலைக் கரை கண்டாள்; கடல்புறந்தே கதிரும் கண்டாள்;
இங்கு இவள் போய், மலர்க் காவின், எழில் விசயற்கு ஈடு அழிந்த இன்னல் எல்லாம்,
சங்கு எறியும் தடம் பொருநைத் துறைவனுக்குச் செவிலியராம் தாயர் சொன்னார்.

ஐந் தருவின் நீழலில் வாழ் அரியுடனே ஓர் அரியாசனத்தில் வைகி,
புந்தி உற ஒருவரும் முன் பூணாத மணி ஆரம் பூண்ட கோமான்
அந்த உரை செவிப்படலும், 'அதி தூரம் விழைவுடன் சென்று ஆடு தீர்த்தம்
வந்தது, நம் தவப் பயன்' என்று உட்கொண்டான், மகோததியும் வணங்கும் தாளான்.

மையல் நோயால் இரவைக் கழித்த விசயன், துயிலுணர்ந்து,
அந்தணருடன் காலைக் கடன் செய்தல்

வழுதி திரு மகள் கொடுத்த மையலினால், வடிவமும் தன் மனமும் வேறா,
பொழுது விடிவளவும், மதன் பூசலிலே கருத்து அழிந்து, பூவாம் வாளி
உழுத கொடும் புண் வழியே ஊசி நுழைந்தெனத் தென்றல் ஊர ஊர,
விழி துயிலா விசயனும், அவ் விபுதருடன் துயிலுணர்ந்து, விதியும் செய்தான்.

மன்னன் அவையில் சென்று வீற்றிருந்த விசயனைப் பாண்டியன் தழுவி,
'என் மகள் உனக்கு உரியாள்' என்று உரைத்தல்

பஞ்சவரில் நடுப் பிறந்தோன் பஞ்சவன் பேர் அவை எய்தி, பஞ்சபாண
வஞ்சகன் செய் வஞ்சனையால் மதி மயங்கி இருந்துழி, அம் மதுரை வேந்தன்
சஞ்சரிக நறு மலர்த் தார்த் தனஞ்சயன் என்று அறிந்து, எழுந்து தழீஇக் கொண்டு
[ஆங்கண்,
'அஞ்சல்; இனி, உனக்கு உரியாள், யான் பயந்த கடல் பிறவா அமுதம்' என்றான்.

மன்னன் விசயனிடம் ஒரு வேண்டுகோள் விடுக்க, அவனும் அதற்கு இசைதல்

கேண்மதி, ஓர் மொழி: முன்னம் கேண்மையின் நம் குலத்து ஒருவன் கிரீசன் தன்னைத்
தாள் மலர் அன்புறப் பணிந்து தவம் புரிந்தான், மகப் பொருட்டால்; தரித்த
[கொன்றை
நாள்மலரோன் வெளி நின்று, அந் நரபதிக்கு, ''நின் குலத்து நரேசர் யார்க்கும்,
வாள் மருவும் கரதலத்தோய்! ஓர் ஒரு மா மகவு'' என்று வரமும் ஈந்தான். 37

'அன்று உரைத்த வரத்தின் வழி அனேகர் அவனிபரும் மகவு அளித்தார், ஒன்று ஒன்று;
ஒன்று உரைக்க மறுது ஒழி நீ; ஒரு மகவும் பெண் மகவாய் உதித்தது, என்பால்;
நன்று உரைக்கும் மொழியாய்! என் நவ்வி பெறும் மகவு எனக்கே நல்க வேண்டும்'
என்று உரைத்தான்; மன்றல் பெற இருந்தோனும், மாமன் உரைக்கு இசைந்தான்
[அன்றே. 38

சித்திராங்கதைக்கும் விசயனுக்கும் திருமணம் நிகழ்தல்

தெண் திரை கை தொழு கழலோன் திருமகட்கு வதுவை என, சேர சோழர்,
எண் திசையின் முடி வேந்தர் எல்லோரும் முனி கணத்தோர் எவரும் ஈண்ட,
அண்டர் பிரான் அளித்த சிலை ஆண்தகையை அலங்காரம் அனைத்தும் செய்து,
மண்டபம் ஒன்றினில் அறு கால் வண்ண மணிப் பலகையின்மேல் வைத்தார் அன்றே.

கோ மடந்தை களி கூர, புகழ் மடந்தை களி கூர, கொற்ற விந்தை
மா மடந்தை களி கூர, மண வினை ஒப்பனைக்கு உரிய மடந்தைமார்கள்
பூ மடந்தை அனையாளைப் பூட்டிய வெண் தரள மணிப் பூண்களாலே
நா மடந்தை நிகர் ஆக்கி, நாயகன்தன் வலப் பாகம் நண்ணுவித்தார்.

இந்திரனும் சசியும் என, இறையோனும் உமையும் என, எம்பிரானும்
செந் திருவும் என, காமதேவும் இரதியும் என, வெஞ் சிலைவலோனும்
சந்து அணி பூண் முலையாளும், சதுர் மறையோர் சடங்கு இயற்ற, தழல் சான்று ஆக,
துந்துபியின் குலம் முழங்க, சுரிசங்கின் குழாம் தழங்க, துலங்க வேட்டார்.

இருவரும் இன்பம் துய்த்து வாழும் நாளில், பப்புருவாகனன் என்னும் புதல்வனைப்
பெற்றுச் சித்திரவாகனனுக்குக் கொடுத்தல்

நோக்கிய கண் இமையாமல் நோக்கி நோக்கி,
நுண்ணிய மென் புலவியிலே நொந்து நொந்து,
தேக்கிய செங் கனி இதழ் ஆர் அமுது உண்டு உண்டு,
சேர்த்திய கைந் நெகிழாமல் சேர்ந்து சேர்ந்து,
தூக்கிய பொன் துலையின் அநுராகம் மேன்மேல்
தொடர, அரும் பெரும் போகம் துய்த்தார்; முன்னைப்
பாக்கியம் வந்து இருவருக்கும் பலித்தது அல்லால்,
பாயல் நலத்து இப்படி யார் பயன் பெற்றாரே? 42

பல் நாளில் நெடும் போகம் பயின்ற பின்னர்,
பப்புருவாகனன் என்னும் பைதல்-திங்கள்
அன்னுனே அவள் பயந்தாள்; பயந்த போதே,
அம் மகவை உவகையுடன் அவனும் ஈந்தான்;
தென்னு என்று அளி முரல, வேம்பின் தண் தார்த்
தேம் பரிசில் வழங்கு புயத் தென்னர் கோவும்,
'நின்னால் என் மரபு நிலே பெற்றது!' என்று,
நேயமுடன் கவர்ந்து, துயர் நீங்கினனே. 43

பின், அருச்சுனன் சித்திராங்கதையை நீங்கி, வழுதிநாட்டுள்ள தீர்த்தங்கள் பலவற்றில் நீராடுதல்

பார்த்தன், அருச்சுனன், கரியோன், விசயன்,
பாகசாதனி, சவ்வியசாசி, பற்குனன், பார்
ஏத்து தனஞ்சயன், கிரீடி, சுவேத வாகன்,
எனும் நாமம் படைத்த பிரான், யாழோர் இன்பம்
வாய்த்த இதழ் அமுத மொழிப் பேதை தாதை
மனே இருக்க, திரு வழுதி வள நாட்டு உள்ள
தீர்த்தம் முழுவதும் ஆடி, அன்பால் தென்பால்
திருமலேயும் கை தொழுது சிந்தித்தானே. 44

கன்றிய வெங் கரன் முதலோர் களத்தில் வீழ,
கவி குல நாயகன் இதயம் கலங்கி வீழ,
ஒன்று பட மரம் ஏழும், உததி ஏழும்,
ஊடுருவச் சரம் தொடுத்த ஒரு வில் வீரன்,
துன்றி எழுபது வெள்ளம் குரங்கின் சேனே
சூழ் போத, வாய்த்த திருத் துணேவனேடும்
சென்ற வழி, இன்று அளவும் துளவம் நாறும்
சேது, தரிசனம் செய்தான், திறல் வல்லோனே. 45

வன் திரை வெங் களிற்றுஇனங்கள் இரண்டு பாலும்
மலேயாமல் இடும் கணேயமரனே போலும்;
தன் தலேகள் அமிழாமல் எடுப்பான், மேருத்
தாழ் கடலில் நீட்டியது ஓர் தடக் கை போலும்;
அன்றி இரு பூ தலமும் இரு தட்டாக,
அகத்தியன் வாழ் குன்றினேயும், அணி முக்கோணக்
குன்றினேயும், சீர் தூக்கி நிறுப்பதாக,
கோகனதன் அமைத்த துலேக் கோலும் போலும். 46

கன்னித்துறை முதலியவற்றில் படிந்து, சேரன் பதிகள் பல கண்டு, மேல் கடலைக் காணுதல்

அண்டர், 'தம கங்கையினும் வரன் உண்டு' என்று என்று,
அரம்பையரோடு அவனியில் வந்து, ஆடும் கன்னித்
தண் துறையும், தண் பொருநைப் பாவ நாசத்
தடந் துறையும் படிந்து, நதித் தடமே போந்து,
பண்டு மழுப் படையோன் அம் மழுவால் கொண்ட
பாக்கிய பூமியும், சேரன் பதிகள் யாவும்,
கண்டு, மனம் களி கூரச் சென்று, மேலைக்
கடல் கண்டான், உரகதலம் கண்டு மீண்டான். 47

அரம்பையர் ஐவரின் சாபம் நீக்கி, விசயன் கோகன்னத்தை அடைதல்

அந்த நெடுந் திசைப் புனல்கள் ஆடும் நாளில்,
ஐந்து தடத்து அரம்பையர் ஓர் ஐவர் சேர,
இந்திரன் வெஞ் சாபத்தால், இடங்கர் ஆகி,
இடர் உழந்தோர் பழைய வடிவு எய்த நல்கி,
சிந்து திரை நதி பலவும் சென்று தோய்ந்து,
திங்களுடன் அரவு உறவு செய்யும் வேணிக்
கொந்து அவிழும் மலர் இதழித் தொடையோன் வைகும்
கொடி மதில் சூழ் கோகன்னம் குறுகினனே. 48

உடன் வந்த மறையவரைக் கோகன்னப்பதியில் இருத்தி, விசயன் துவாரகை சென்று, சுபத்திரையை மணக்க விரும்பி, துறவு வேடம் பூணுதல்

ஆகன்னம் உறச் செம் பொன் வரை வில் வாங்கி,
அவுணர் புரம் கட்டழித்தோன் அடியில் வீழ்ந்து,
கோகன்ன வளம் பதியில் தன் பின் வந்த
குல முனிவர்தமை இருத்தி, கோட்டுக் கோட்டு
நாகு அன்னப் பெடையுடனே ஆடும் கஞ்ச
நறை வாவி வண் துவரை நண்ணி, ஆங்கண்,
பாகு அன்ன மொழிக் கனிவாய் முத்த மூரல்
பாவை நலம் பெற முக் கோல் பகவன் ஆனன். 49

அடுத்துள்ள இரைவதக கிரியில் விசயன் இருத்தலும், மழை மிகப் பொழிதலும்

வெங் கதிர் போய்க் குட திசையில் வீழ்ந்த பின்னர்,
வீழாமல் மாலையின்வாய் மீண்டும் அந்தச்
செங் கதிர் வந்து எழுந்தது என, மீது போர்த்த
செய்ய ஆடையும் தானும், தீர்த்த வாரிச்
சங்கு அதிரும் மணி வீதி நகரி சூழ்ந்த
தடஞ் சாரல் இரைவதக சயிலம் நண்ணி,
பொங்கு அதிர் பைம் புயல் எழுந்து பொழியும் கங்குல்
போய், ஒரு நீள் வட தருவின் பொதும்பர் சேர்ந்தான். 50

'இந்திரற்குத் திருமதலை மன்றல் எண்ணி,
யாதவர்கோன் வளம் பதியில் எய்தினன்' என்று,
அந்தரத்தை நீலத்தால் விதானம் ஆக்கி,
அண்டம் உற இடி முரசம் ஆர்ப்ப ஆர்ப்ப,
வந்து இரட்டை வரி சிலையால் பஞ்ச வண்ண
மகர தோரணம் நாட்டி, வயங்கும் மின்னல்
முந்துறத் தீபமும் எடுத்து, தாரை முத்தால்,
முழுப் பொரி சிந்தின, கால முகில்கள் அம்மா. 51

விசயன் கண்ணனை நினைக்க, அவனும் அங்கு வந்து, விசயனது எண்ணத்தைத் தெரிந்து, மறுநாள் வருவதாகச் சொல்லி, துவாரகை சேர்தல்

'யாம் கருதி வரும் கருமம் முடிப்பான் எண்ணில்,
இராமன் முதல் யது குலத்தோர் இசையார்' என்று,
பாங்குடனே தனக்கு உயிர் ஆம் துளப மௌலிப்
பரந்தாமன்தனை நினைந்தான், பார்த்தன், ஆக,
பூங் கமல மலர் ஓடை அனையான், தானும்,
பொன் நெடுந் தேர்ப் பாகனுமே ஆகப் போந்து,
நீங்கு அரிய நண்பினனாய், நெடு நாள் நீங்கு
நேயத்தோன் நினைவின்வழி நேர்பட்டானே. 52

யதி ஆகி அவண் இருந்த தோழன்தன்னை
யது குல நாயகன் பரிவோடு இறைஞ்ச, அன்பால்
அதியான நெடுஞ் சுருதி ஆசி கூறி,
ஆகம் உறத் தழீஇ, மகிழ்வுற்று, ஆல நீழல்
மதி ஆர் செஞ் சடை முடியோன் என்ன வைகி,
வந்தவாறு உரைப்ப, நெடுமாலும் கேட்டு,
துதியாடி, 'காலையிலே வருதும்' என்று,
சொற்று, இமைப்பில் மீளவும் போய், துவரை சேர்ந்தான். 53

இந்திரவிழாக் கொண்டாடப் பலராமன், சுபத்திரை முதலியோர் பரிவாரத்துடன் இரைவதக கிரிக்கு வருதலும், யாவரும் அங்கு இருந்த அருச்சுன முனிவனைத் தொழுதலும்

ஆதவன் வந்து உதிப்பதன் முன் மற்றை நாளில்
அணி நகர் வாழ் சனம் அனைத்தும் அந்தக் குன்றில்
மாதவனது ஏவலினால், மழைக் காலத்து,
வாசவற்கு விழா அயர்வான் வந்தகாலை,
யாதவரில் போசரில் மற்று உள்ள வேந்தர்
யாவரும் சூழ்வர, நறுந் தார் இராமன் வந்தான்;
சூது அடர் பச்சிளங் கொங்கை, பச்சை மேனி,
சுபத்திரையும் தோழியர்கள் சூழ, வந்தாள். 54

முக்கோலும், கமண்டலமும், செங்கல் தூசும்,
முந்நூலும், சிகையுமாய் முதிர்ந்து தோன்றும்
அக் கோலம் அனைவரும் கைதொழுது, நோக்கி,
அருள் நலம் பெற்று அகன்றதன் பின், அனைத்து உலோகத்து
எக் கோல யோனிகட்கும் உயிராய், தோற்றம்
ஈர்-ஐந்தாய், பாற்கடலினிடையே வைகும்
மைக் கோல முகில் வண்ணன்தானும் எய்தி,
மன வணக்கம் புரிவோனை வணங்கினனே. 55

கண்ணன் அருச்சுன முனியைத் தனியே கண்டு, சுபத்திரையைப் பெறச் சூழ்ச்சி உரைத்து, பின் சுபத்திரையை அழைத்து, முனிவனுக்குப் பணிவிடை செய்யுமாறு அவளைப் பணித்தல்

துன்னி இருவரும் ஒருப்பட்டு இருந்தகாலை,
சுபத்திரை அத் தடங் குன்றின் சூழல் ஓர் சார்,
மின்னிய பைம் புயலின் எழில் இரேகை போல
வெளிப் படலும், மெய் புளகம் மேன்மேல் ஏறி,
கன்னி இளந் தளிர்க் கடம்பு மலர்ந்தது என்னக்
கண்ட விழி இமையாத காட்சி காண,
மன்னிய மா தவத்தோனை மந்த மூரல்
மாதவன் மைத்துனமையினால் மகிழ்ச்சி கூர்ந்தே, 56

'அடிகள் திருவுளத்து எண்ணம் எம்மனோர்கள்
அறியின் இசையலர்; பலர் இங்கு அறிவுறாமல்,
கடி அயர்வுற்று உம் பதி கொண்டு அடைக!' என்றும்,
'காவலர்க்குக் கடன்' என்றும், கசியக் கூறி,
கொடி இடை வெங் களப முலைக் கன்னி மானைக்
கூய், 'அணங்கே! மெய்ம்மை உறக் கொண்ட கோலப்
படிவ முனிக்கு இரு பருவம் பணித்த ஏவல்
பரிவுடன் நீ புரி' என்று பணித்திட்டானே. 57

தன் மனையில் வந்துள்ள அருச்சுன முனியின் மாயவேடத்தைச் சுபத்திரை அறியாது, தோழியருடன் தனி அறையில் துயிலுதல்

உள் அடங்கிய காம வெங் கனல் புறத்து ஓடிக்
கொள்ளை கொண்டு உடல் மறைத்தென, கூறையும் தானும்
மெள்ள வந்து, தன் கடி மனை மேவிய வேடக்
கள்ள வஞ்சனை அறிந்திலள், கற்புடைக் கன்னி. 58

'ஈங்கு வந்தது என் தவப் பயன்' என்று கொண்டு எண்ணி,
ஆங்கு உவந்து ஒரு மனையிடை அருந் தவன் துயில,
தூங்கு கண்ணினள் சுபத்திரை, தோழியர் பலரும்
பாங்கு வைக, மற்று ஒரு மனை புகுந்து கண்படுத்தாள். 59

அருச்சுனன் விரகக் கனலால் பல நாள் வெதும்புதல்

புடவி எங்கணும் புதைய, வான் பொழிதரு புனலால்,
அடவி ஆர் அழல் அவியவும், அவிந்திலது, ஐயோ!—
தடவி வாடை மெய் கொளுத்திட, தனஞ்சயற்கு அணங்கின்
விட விலோசனக் கடை தரு விரக வெங் கனலே. 60

மதன லீலையில் பழுது அற வழிபடும் பாவை
வதன வாள் மதி வந்து முன் நிற்கவும், மருண்டு, அச்
சதனம் மேவரும் தபோதனன்தனக்கு, வெம் மோக
விதன வல் இருள் விடிந்திலது, ஆர் இருள் விடிந்தும். 61

அற்றை நாள் முதல் அநேக நாள், அகில் மணம் கமழும்
கற்றை வார் குழல் கன்னிகை வழிபடக் கருத்தால்,
'இற்றை மா மதன் பூசலுக்கு என் செய்வோம்!' என்று என்று,
ஒற்றை அன்றில்போல் மெய்ம் மெலிந்து, உள்ளமும் உடைந்தான்.

அருச்சுன முனியின் அவயவநலம் கண்டு, சுபத்திரை ஐயுறுதல்

நல் இலக்கணம் பலவுடை அவயவ நலத்தால்,
வில் இலக்கணத் தழும்புடைக் கரங்களால், மிகவும்
தொல் இலக்கணம் பலவுடைச் சுபத்திரை, ஒரு தன்
இல்லில் அக் கணவனை, 'இவன் யார்கொல்!' என்று அயிர்த்தாள்.

சுபத்திரை-அருச்சுனன் உரையாடல்

மங்கை, அங்கு ஒரு நாள், அவன் மலர் அடி வணங்கி,
'எங்கும் வண் புனல் ஆடுதற்கு ஏகினீர் எனினும்,
தங்கும் மா நகர் யாது?' என, தபோதனன்தானும்,
'எங்கள் மா நகர் இந்திரப்பிரத்தம்' என்று இசைத்தான். 64

என்ற காலையில், இந்திரன் மதலையை ஒழிய,
நின்ற பேரை அந் நெடுங் கணாள் வினவலும், நிருபன்,
'வென்றி மன்னவர் யாரையும் வினவினை; மின்னே!
மன்றல் அம் தொடை விசயனை மறந்தது என்?' என்றான். 65

'இந்திரப்பிரத்தத்தில் விசயனை ஒழிந்த ஏனையோரை மட்டும் நீ வினவியது ஏன்?'
என்ற அருச்சுன முனிக்குச் சுபத்திரையின் தோழி மறுமொழி கூறுதல்

'யாழின் மென் மொழி, எங்கள் நாயகி இவள், அவனுக்கு
ஊழின் அன்புடை மன்றலுக்கு உரியள் ஆதலினால்,
வாழி வெஞ் சிலை விசயனை மறைத்தனள்' என்னா,
தோழி நின்றவள் ஒருத்தி, கை தொழுதனள், சொன்னாள். 66

' ''பங்குனன் பெருந் தீர்த்த நீர் படிவதற்காகப்
பொங்கு தெண் திரைப் புவி வலம் போந்தனன்'' என்றே,
அங்கு நின்று வந்தவர் உரைத்தனர்; அவன் இப்போது
எங்கு உளான் எனத் தெரியுமோ, அடிகளுக்கு?' என்றாள். 67

பாங்கிக்கு அருச்சுன முனி உரைத்த மறுமொழியிலிருந்து, அவன் அருச்சுனனே எனச் சுபத்திரை உணர்தல்

பாங்கி நல் உரை தன் செவிப் படுதலும், 'விசயன்
தீங்கு இலன்; பல திசைகளும் சென்று, நீராடி,
கோங்கு இளங் கொழு முகை நிகர் கொங்கையாள் பொருட்டால்,
ஈங்கு வந்து நும் இல்லிடை இருந்தனன்' என்றான். 68

யதி உரைத்த சொல் கேட்டலும், யாதவி நுதல் வாள்
மதி வியர்த்தது; துடித்தது, குமுத வாய் மலரும்;
புதிய கச்சு அணி குரும்பைகள் அரும்பின, புளகம்;—
பதி இடத்து அரிவையர்க்கு உளம் ஆகுலம் படாதோ? 69

அருச்சுனன் காதல் மிகச் சுபத்திரையின் கையைப் பற்றுதலும், அச் செய்தியைச் சேடியர் சென்று தேவகிக்கு அறிவித்தலும்

உகவை முத்த மென் பவளமும் நீலமும் ஒளிர,
அகவு பச்சிளந் தோகைபோல் நின்ற அவ் அணங்கை,
மிக விருப்ப நோய் வளர்தலின், மெலிந்த தோள் விசயன்,
தகவுடைத் தன தடக் கையால் வளைக் கரம் தகைந்தான். 70

தகைந்தபோது, உயிர்ச் சேடியர், 'தவிர்க!' எனச் சில சொல்
பகர்ந்து போய், ஒரு மாதவிப் பந்தரில் புகுந்து,
புகுந்த நீர்மையைத் தேவகி அறியுமா புகன்றார்;
அகைந்த பல் பெருங் கிளைஞரில் ஆர் கொலோ, அறிந்தார்? 71

யாதவர் யாவரும் வேறிடம் சென்றிருந்தமையால், தேவகி ஒழிந்தோர்க்கு அச் செய்தி தெரியாமை

அறிவு உருவகை, அலாயுதன் முதல் வடமதுரை
செறியும் யாதவர் யாரையும் தன்னுடன் சேர்த்து,
மறி கொள் செங் கையன் விழா அயர்வான், பெருந் தீவில்,—
உறியில் வெண் தயிர் உண்டவன்—கொண்டு சென்றுற்றான். 72

அருச்சுனனும் சுபத்திரையும் நினைந்தபடி இந்திரனும் கண்ணனும் வந்து சேர்தல்

உற்ற கங்குலில் யாவரும் தணந்தவாறு உணர்ந்து,
பெற்ற தன் பெரும் பிதாவினை முன்னினன், பெரியோன்;
சிற்றிடைப் பெருங்கொங்கையும் தம்முனைத் தியானம்
முற்ற முன்னினள்; இருவரும் முன் முன் வந்துற்றார். 73

இந்திரனும் இந்திராணியும் மகிழ்ந்து இவ் இருவருக்கும் கலன் அணிய, கண்ணனது முயற்சியால் சுபத்திரை-அருச்சுனன் திருமணம் நடைபெறுதல்

இந்திராணியோடு எய்திய இந்திரன்தன்னை
இந்திராபதி எதிர் கொள, துவரை மா மூதூர்ச்
சந்திராதவ மண்டபத்து இடு பொலந் தவிசில்
வந்து இரா, வணங்கிய திருமகனுடன் மகிழ்ந்தான். 74

பொரு அரும் புருகூதனும், புலோம கன்னிகையும்,
இருவரும் தம கலன்களால் இவர் இருவரையும்
மரு வரும்படி அணிதலின், அணி கெழு வனப்பால்,
ஒருவரும் பிறர் ஒப்பலர் என்னுமாறு உயர்ந்தார். 75

பால், அருந் ததி, நறு நெய், ஆய்ப் பாடியில் கள்ளத்-
தால் அருந்து அதி விரகனது அருளினல், விரைவில்
சால் அருந்ததி தலைவனும், தலைபெறும் பல நுண்
நூலரும், ததி உறப் புகுந்து, ஆசிகள் நுவன்ருர். 76

தொடங்கி நாத வெம் முரசுடன் சுரிமுகம் தழங்க,
சடங்கினல் உயர் ஆகுதித் தழலவன் சான்ரு,
விடங்கினல் மிகு விசயன் அக் கன்னியை வேட்டான்;
மடங்கினர் தம பதிதொறும், அவ்வழி வந்தார். 77

முன்னம் யாவையும் முடித்தருள் மொய் துழாய் முடியோன்,
கன்னன் ஆர் உயிர் கொள வளர் காளையைத் தழீஇக்கொண்டு,
'அன்ன மென் நடை அரிவையர்பொருட்டு நீ இன்னம்
என்ன என்ன மா தவ உருக் கொள்ளுதி!' என்ருன். 78

கண்ணன் உரைத்தபடி சுபத்திரை தேர் செலுத்த, அருச்சுனன்
இந்திரப்பிரத்தம் நோக்கிச் செல்லுதல்

காமற் பயந்தோன்தனது ஏவலின், காம பாலன்
வாமப் பதிதன்னினும் வாசவ மா பிரத்த
நாமப் பதியே திசை ஆக நடக்கல் உற்ருன்,
தாமக் குழலாள் தனித் தேர் விட, சாப வீரன். 79

கண்ணன் பலராமனுக்குச் செய்தி சொல்ல, அவன் யாதவருடன் அருச்சுனனைத்
தொடர்ந்து சென்று பொருதல்

'வென்றித் துவரை நகர் காவலர்தம்மை வென்று,
மன்றல் குழலின் இளையாளை வலிதின் எய்தி,
குன்றச் சிறகர் அரிந்தோன் மகன் கொண்டுபோனன்'
என்று, அப் பலற்குக் கடல்வண்ணன் இயம்பினனே. 80

சேல் ஆம் பிறப்பின் திருமால் இது செப்பும் முன்னே,
காலாந்தகனும் வெருவும் திறல் காளைதன்னை,
நீலாம்பரனும், யது வீர நிருபர் யாரும்,
நால் ஆம் படையோடு எதிர் சூழ்ந்து, அமர் நாடினரே. 81

தடுத்தவர்களை வென்று, அருச்சுனன் சுபத்திரையுடன் இந்திரப்பிரத்தம் சேர்தல்

'அஞ்சேல்! அமரில் நுமர்தம்மையும் ஆவி கொள்ளேன்;
செஞ் சேல் அனைய விழியாய்!' எனத் தேற்றி, அந்த
மஞ்சே அனைய தடந் தேர் அவள் ஊர, வந்த
வெஞ் சேனை முற்றும் புறந்தந்திட, வென்று, போனன். 82

மடை பட்ட வாளை அகில் நாறும் மருத வேலி
இடை பட்ட தங்கள் வள நாடு சென்று எய்தி, ஆங்கு,
தொடை பட்ட திண் தோள் அறன் காளை துணைவரோடு
நடைபட்டு உருகி, எதிர்கொள்ள, நகரி புக்கான். 83

கண்ணன் பலராமனுடன் இந்திரப்பிரத்தம் சென்று உவகைமொழி கூறி,
மணமக்களுக்கு வரிசை செய்தல்

முன் போர் விளைத்த முசலப் படை மொய்ம்பினனும்,
தன்போல் உயர்ந்தோர் இலன் ஆன தடங் கண் மாலும்,
பின் போய், இனிய மொழி ஆயிரம் பேசி, மன்றற்கு
அன்போடு உதவும் உபசாரம் அனைத்தும் ஈந்தார். 84

பலராமன் துவாரகைக்கு மீள, கண்ணன் அருச்சுனனுடன்
இந்திரப்பிரத்தத்தில் இருத்தல்

ஞாலத் தெரிவை களி கூர நடாத்து செங்கோல்
தாலத் துவசன் துவராபதிதன்னில் வைக,
நீலக் கடல்கள் இரண்டு ஆம் என, நெஞ்சொடு ஒத்த
சீலத்தவனோடு அவண் வைகினன், செங் கண் மாலே. 85

சுபத்திரை அபிமன்னுவைப் பெறுதல்

பல் நாள் இவர் இப் பதி சேர்ந்த பின், பங்க சாத
மின் ஆளும் மார்பற்கு உயிர் போலும் விசயன் என்பான்
நல் நாளில் நன்மை தரும் ஓரையில், நல்க, வஞ்சி
அன்னாளிடத்தில் அபிமன்னு அவதரித்தான். 86

திரௌபதியிடம் ஐவர்க்கும் ஐந்து புதல்வர்கள் தோன்றுதல்

வேதம் சிறக்க, மனு நீதி விளங்க, இப் பார்
ஆதங்கம் ஆற, வரும் ஐவரின் ஐவர் மைந்தர்,
பூதங்கள் ஐந்தில் குணம் ஐந்தும் பொலிந்தவாபோல்,
ஓது அங்கியில் உற்பவித்தாள்வயின் உற்பவித்தார். 87

படைக்கலம் முதலியன பயின்று சிறந்த ஆறு புதல்வரினும் அபிமன்னு சிறத்தல்

அம் மாதுலனும், பயந்தோரும், அழகில் மிக்க
இம் மா மகாருக்கு இயற்றும் விதி ஏய்ந்த பின்னர்,
தெம் மாறு வின்மை முதலாய செயல்கள் யாவும்
கைம் மாறு கொண்டு நனி கைவருமாறு கண்டார். 88

அரிதில் பயந்த அறுவோருளும், ஆண்மைதன்னால்
இருதுக்களின்மேல் இள வேனிலின் தோற்றம் ஏய்ப்ப,
மருதுக்கு இடை போம் மதுசூதன் மருகன், 'வெம் போர்
விருதுக்கு ஒருவன் இவன்' என்ன விளங்கினனே. 89

வசந்த காலத்தின் வருகை

உரனால், அழகால், உரையால், மற்று உவமை இல்லா
நர நாரணர்க்கு நலம் கூர்தரு நண்பு போல்வான்,
அரனார் விழியால் அழிந்து அங்கம் அநங்கம் ஆன
மரனாருடன் நண்பு இசைந்தன்று, வசந்த காலம். 90

## 8. வசந்த காலச் சருக்கம்

சூரியன் உத்தராயணத்திற்குத் திரும்புதல்

நனி ஆடல் அனற்கடவுள், யமன், நிருதி, நன்னு திசை, நாள்கள்தோறும்
முனியாமல் நடந்து இளைத்து, 'முன்னையினும் பரிதாபம் முதிர்ந்தது' என்று,
தனி ஆழித் தனி நெடுந் தேர்த் தனிப் பச்சை நிறப் பரியை, சயில ராசன்
பனியால் அவ் விடாய் தணிப்பான், பனிப்பகைவன் பனிசெய்வோன் பக்கம்சேர்ந்தான்.

வசந்த காலத்தின் ஆட்சி

கலக்கம் உற, இள வேனில் கலகம் எழுந்திடும் பசுந் தன் காவு தோறும்,
சிலைக்கு அணி நாண் முறுக்குவபோல் தென்றலின் பின் சுழல் அளிகள் சேர ஓட,
உலைக் கனலில் கருங் கொல்லன் சிறு குறட்டால் தகடு புரிந்து ஒதுக்கி, மாரன்
கொலைக் கணைகள் சமைப்பனபோல், குயில் அலகால் பல்லவங்கள் கோதுமாலோ!

செங்காவி, செங்கமலம், சேதாம்பல், தடம்தொறும் முத் தீக்களாக,
பைங் காவின் நெடுஞ் சினைக் கை மலர் நறுந் தேன் ஆகுதிகள் பலவும் வீழ்க்க,
உங்கார மதுகரங்கள் ஓங்காரச் சுருதி எடுத்து ஓத, வேள்வி
வெங் காமன் இரதியுடன் புரிந்து, தன தென்றல் அம் தேர்மேற் கொண்டானே!

கண்ணனும் அருச்சுனனும் தம் தேவியருடன், நகரத்தவரோடு கூட,
வேனில் விழாக் கொண்டாட ஒரு சோலையை அடைதல்

தேவியரும் திருமாலும், செழு மலர்த் தார்த் தனஞ்சயனும் தேவிமாரும்,
மேவி, அனந்தரம், வேனில் விழவு அயர்வான் முரசு அறைந்து, வீதிதோறும்,
ஓவியமும் உயிர்ப்பு எய்த, உபேந்திரனும் இந்திரனும் உவமை சால,
பூஇனமும் சுரும்பும் எனப் புரம் முழுதும் புறப்பட, வண் பொங்கர் சேர்ந்தார்.

சோலையில் மகளிர் பூக் கொய்து விளையாடுதல்

கொண்டல் எழ, மின் நுடங்க, கொடுஞ் சாபம் வளைவுற, செங் கோபம் தோன்ற,
வண் தளவும் நறுங் குமிழும் வண்டு அணி காந்தளும் மலர, மலைகள்தோறும்
தண் தரள அருவி விழ, தையலார் வடிவுதொறும்—சாயல் தோகை—
கண்டு, 'நமக்கு இளவேனில் கார்காலம் ஆனது' எனக் களிக்குமாலோ!

பாராமல், நகையாமல், பாடாமல், ஆடாமல், பாதம் செங்கை
சேராமல், முக ராகம் வழங்காமல், இகழாமல், செவ் வாய் ஊறல்
நேராமல், நிழல் அதனை நிகழ்த்தாமல், மலர்ந்து, அழகு நிறைந்த நீழல்
ஆராமம்தொறும், தங்கள் அவயவம் போல்வன கொய்தார்—அணங்கு போல்வார்.

மாற்றுத பனிநீரால், மான்மத குங்கும மலய வாசச் சந்தின்
சேற்றால், அச் சோலை எலாம், செங்கழுநீர்த் தடம் போன்ற; சிந்தைத் தாபம்
ஆற்றுத காதலருக்கு அமுதான இளநீரால், அடர்ந்த பூகத்
தாற்றால், அம் மரகதச் செந் துகிரால், அப் பொழில்போன்ற, தடங்கள் எல்லாம்.

### அருச்சுனன் முதலியோர் தேவிமாரோடு நீர் விளையாடுதல்

மெய் கொண்ட மொழி விசயன் மெய்யின் எழில் இமையாமல் மேன்மேல் நோக்கும்
மை கொண்ட குழல் ஒருத்தி, மற்று அவன் செங் கையில் சிவிறி மழை கண்டு அஞ்சிப்
பொய்கொண்டு வகுத்தனைய மருங்கு அசைய, தனபாரம் புளகம் ஏற,
கைகொண்டு முகம் புதைத்து, தன் விரல் சாளரங்களிலே கண்கள் வைத்தாள்.

நங்கை அங்கு ஓர் கொடிஅனையாள் வதன மதி சல மதியாய் நடுங்குமாறு
பங்குனன் தன் திருச் செங்கைப் பங்கயத்தின் சிவிறியினால், பரிவு கூர,
குங்குமம் கொள் புனல் விடவும், இமையாமல், புனல்வழியே கூர்ந்த பார்வை
செங் கலங்கல் புதுப் புனலுக்கு எதிர் ஓடி விளையாடும் சேல்கள் போலும்!

நறை கமழ் தண் துழாய் மாலை நாரணற்கு நண்பான நரனார் செங் கை,
உறையும் மலர்ச் செந்திருவும் ஒவ்வாத பொற்புடையாள் ஒரு பொற்பாவை
நெறி தரு பைங் குழலின்மிசை வீசிய நீர், பெருக்கு ஆற்றின் நிறை நீர் வற்றி,
அறல் படு நுண் கரு மணலின் அரித்து ஒழுகும் சின்னீரோடு அமைந்தது அம்மா.

விளிந்து மயில் புறங்கொடுக்கும் மெல்லியலாள் ஒருத்தி, நெடு வேயும் பாகும்
சுளிந்து வரும் கட களிற்றுச் சுவேதவாகனன் கடகத் தோளின் மீது,
தெளிந்த நறுங் கத்தூரிச் சேறு படு சிவிறியின் நீர் சிந்தும் தோற்றம்,
களிந்த கிரிமிசைக் கடவுள்-காளிந்தி பரந்ததெனக் கவினும் மாதோ!

பிறை அனைய திலக நுதல் பேதை இளம் பிடி ஒருத்தி, பிடித்த செங்கை
நறை கமழும் பொலஞ் சிவிறி நண்ணிய செஞ் சிந்தூர நாரம் வீச,
அறை கழல் வெஞ் சிலைத் தடக் கை அருச்சுனன்தன் திரு முகத்தில் ஆனபோது,
நிறைமதிமேல் வாள் இரவி கரங்கள் நிரைத்து ஓடுவபோல் நிறத்த மாதோ!

### கண்ணனும் அருச்சுனனும் மனைக்கு மீளுதல்

பாண்டு மதலையும் காதல் பாவையரும், துழாயோனும் பாவைமாரும்
ஈண்டு பெருஞ் சனத்துடனே இவ்வண்ணம் இடந்தோறும் இனிதின் ஆடி,
ஆண்டு, வரி சிலை மதனும் அவன் படையும் சேவிப்ப, அழகு கூர,
மீண்டு, தம மனைதோறும் நிரை நிரை வாள் விளக்கு ஏந்த மேவினரே.

### இளவேனில் அகல, முதுவேனில் தோன்றுதல்

நெடு வேனில் புகுதர மேல், இளவேனில் அகன்றதற்பின், நிகர் இல் கஞ்சப்
படு ஏய் வெள் வளையமும், தண் பட்டு ஆலவட்டமும், செம்பளிரச் சேறும்,
உடு ஏய் நித்திலத் தொடையும், ஊடு உறு மண்டபத் தடமும், ஒழுகி நீண்ட
வடு ஏய் கண் மடந்தையர்க்கும் மகிழ்நருக்கும் அமைந்தன, வான் மனைகள் எல்லாம்.

### மடவாரைக் கூடிய கணவரும், கணவரைப் பிரிந்த மடவாரும் உற்ற நிலை

திலக நுதல் குறு வியர், தம் செவிப் பூவில் அளிஇனத்தின் சிறகர்க் காற்றால்
புலர, மது நுகர் மாதர் புன்முறுவல் இதழ் ஊறல் புதிதின் மாந்தி,
இலகு பரிமள புளக ஈர முலைத் தடம் மூழ்கி, இரதி கேள்வன்
கலகமிடும் பரிதாபம் அகற்றினர்—இனிமையுடன் கலந்த கேள்வர்.

மார வசந்தனை அகன்று, வயங்குறு வெங்கோடையினால் மறுகி, ஆற்றாது, ஆர் அமளி மது மலரில், ஆர வடங்களில், பனிநீர் ஆரச் சேற்றில் ஈர நெடுங் குழல் இசையில், இயங்கிய சாமரக் காற்றில், இள நிலாவில், பேர் அழலும் புகுந்தது எனப் பிணங்கினர்—தம் கேள்வர்ப் பிரிந்த மாதர்.

காற்றும் நீரும் கோடையில் வறட்சியுற்ற நிலை

கோடை வெயில் சுடச் சுட மெய் கொளுந்தி இறந்தன போல, கொண்டல், கோடை, வாடை, சிறு தென்றல், எனும் மாருதங்கள் எம் மருங்கும் வழக்கம் இன்றி, ஆடையில், வெண்சாமரத்தில், ஆலவட்டத்தினில், உயிர்ப்பில், அழகு ஆர் நெற்றி ஓடை முக மத கயத்தின் தழை செவியில், பல் இறகில், ஒளித்தமாதோ.

தாழி நறுங் குவளை அம் தார்த் தருமன் மகன் அருட் புனலும், தரங்க வேலை ஊழி நெடும் பெரும் புனலும், உடலில் உறு வெயர்ப் புனலும், ஊறி ஊறிப் பாழிதொறும் இறைக்கின்ற பைம் புனலும், அல்லது, வெம் பருவம்தன்னால் பூழி படு கமர் வாய நானிலத்துப் புகலுதற்கு ஓர் புனலும் உண்டோ?

கண்ணனும் அருச்சுனனும் உடன் இருத்தல்

நீகாரம் மழை பொழிய, நித்தில வெண் குடை நிழற்ற, நீல வாள்-கண், பாகு ஆரும் மொழி, மடவார் மணிக் கவரி இரு மருங்கும் பயில வீச, கார்காலம் புகுந்து செழுங் காள முகில் இரண்டு ஒருபால் கலந்ததென்ன ஆகாரம் அழகு எறிப்ப, இருவரும் ஆங்கு உடன் இருந்தார், ஆவி போல்வார்.

## 9. காண்டவ தகனச் சருக்கம்

தம் எதிரே வேதியர் வடிவில் வந்த அக்கினிதேவனைக் கண்ணனும் அருச்சுனனும் உபசரித்தலும், அக்கினிதேவனது வேண்டுகோளும்

இனிய பால் முகந்து ஒழுக்கும் ஆகுதி என இலங்கு முப்புரி நூலும், தனது வெஞ் சிகைக் கொழுந்து எனப் புறத்தினில் தாழ்ந்த செஞ் சடைக் காடும், புனித வெண் புகை மருங்கு சுற்றியதெனப் புனைந்த ஆடையும், ஆகி, மனித வேதியர் வடிவுகொண்டு, அவர் எதிர், வன்னி வானவன் வந்தான்.

வந்த அந்தணன் வரவு கண்டு, இருவரும் வந்து, எதிர் வணங்கி, தம் சிந்தை அன்பொடு, வேதிகை எனத் திகழ் செம்பொனின் தவிசு ஏற்ற, அந்தணாளனும், குழிந்த பொற் கண்ணினன், அவி மணம் கமழ் வாயன், 'உந்து வெம் பசி பெரிது; வல்லே எனக்கு ஓதனம் இடுக!' என்றான்.

'உண்டற்கு உரிய உணவு அளிப்போம்' என்று இருவரும் உவகையோடு உரைக்க, அக்கினி தேவன் தான் விரும்பும் உணவுபற்றி எடுத்துரைத்தல்

கரிய மேனியர் இருவரும், 'செய்ய பொற் காய மா முனி! உண்டற்கு உரிய போனகம் இடுதும், இக் கணத்து' என, உவகையோடு உரைசெய்தார்;— அரியஆயினும், வழங்குதற்கு ஏற்றன அல்லஆயினும், தம்மின் பெரியஆயினும், அதிதிகள் கேட்டன மறுப்பரோ, பெரியோரே? 3

'அளித்தும்' என்ற சொல் தன் செவிப் படுதலும் பெற்றனன்போல் ஆகி,
'ஒளித்து வந்தனன்; இரு பிறப்பினன் அலேன்; உதாசனன் என் நாமம்;
களித்து வண்டு இமிர் தொடையலீர்! எனக்கு உணுக் காண்டவம் எனும் கானம்;—
குளித்து அருந்துதற்கு இடம் கொடான்—அவ் வனம் கொண்டல் வாகனன் காவல்.

'மிடைந்த நால் வகை மகீருகங்களும், நெடு வெற்புஇனங்களும் துன்றி,
அடைந்த தானவர், அரக்கர், பேர் உரகருக்கு ஆலயங்களும் ஆகி,
குடைந்து சோரி கொள் வாள் உகிர் அரி முதல் கொடு விலங்கினம் மிக்கு,
கடைந்த கூர் எயிற்று ஆல தக்ககனும் வாழ் கானனம் அது கண்டீர்!

'புகுந்து யான் முகம் வைக்கின், ஏழ் புயலேயும் ஏவி, அப் புருகூதன்
தொகும் தராதல இறுதிபோல் நெடும் புனல் சொரிந்து அவித்திடும் என்னை;
முகுந்தன் ஆநிரை புரந்தவாறென ஒரு முனைபட விலக்கின் பின்,
மிகுந்த தாகமும் எண்ணமும் முடிந்திடும்; வேண்டுவது இது' என்ருன். 6

'உன் இச்சைப்படி கொள்க!' என்ற அருச்சுனனுக்குக் கண்ணன் அருளால் வில் முதலியவற்றை அக்கினிதேவன் கொடுத்தல்

என்ற போதில், 'உன் இச்சையின்படி உணு ஈந்தனம், இமைப் போழ்தில்;
சென்று கொள்க!' எனத் தனஞ்சயன் கூறலும், சிந்தை கூர் மகிழ்வு எய்தி,
மன்றல் அம் துழாய் மாயவன் அருளினல், வடிக் கணை மாளாமல்
துன்று தூணியும், சாபமும், இரதமும், சுவேத வாசியும், ஈந்தான்.

அருச்சுனன் போர்க்கோலம் பூண்டு, தேர் ஏறி, நாண் ஒலிசெய்தல்

ஈந்த வானரப் பதாகை நட்டு, ஈர்-இரண்டு இவுளியும் உடன் பூட்டி,
ஆய்ந்த வன் தொழில் பாகனும் அருணனில் அழகுறும்படி தூண்ட,
காய்ந்த சாயக நாழிகை கட்டி, அக் காண்டிவம் கரத்து ஏந்தி,
வேய்ந்த மாமணிக் கவசமும் அருக்கனில் அழகுற மேற்கொண்டான். 8

நெஞ்சில் மேலிடும் ஊக்கமோடு, அணி திகழ் நெடும் புயம் பூரித்து,
சிஞ்சினீமுகம் தெறித்தனன்; தெறித்தலும், தெறித்த பேர் ஒலி, கானின்
விஞ்சி வாழ்வன சத்துவம் அடங்க, உள் வெருவுற, உகாந்தத்து
மஞ்சின் நீடு உரும் ஒலி எனப் பரந்தது, வான் முகடுற மன்னே! 9

அக்கினி காண்டவ வனத்தில் பற்றி, அதை வளைத்துக் கொள்ளுதல்

ஆழிவாய் ஒரு வடவையின் முகத்திடை அவதரித்தனன் என்ன,
ஊழிவாய் உலகு அனைத்தையும் உருக்குமாறு உடன்று எழுந்தனன் என்ன,
'வாழி, வாழி!' என்று அருச்சுனன் கரத்தையும் வார் சிலையையும் வாழ்த்தி,
பாழி மேனியை வளர்த்தனன், பாவகன்; பவனனும் பாங்கானன்.

மூள மூள, வெம் பசியொடும் சினத்தொடும் முடுகி, வெய்துற ஓடி,
வாளமாக ஓர் பவள மால் வரை நெடு வாரியை வளைந்தென்ன,
காள மா முகில் ஊர்தி நந்தனம் நிகர் காண்டவம்தனை, அண்ட
கோளமீது எழ வளைந்தனன், வரை படி கொண்டலும் குடர் தீய.

புகையும் அனலும் மண்டி மேலே எழுந்து ஓங்கிய தோற்றம்

ஆன ஆகுலம்தன்னொடு தப்புதற்கு அணிபடப் பறந்து ஓங்கும்
தூ நிறத்தன கபோதம் ஒத்தன, இடை இடை எழும் சுடர்த் தூமம்;
கான மேதியும், கரடியும், ஏனமும், கட கரிக் குலம்தாமும்,
வானில் ஏறுவ போன்றன, நிரை நிரை வளர்தரு கருந் தூமம். 12

வரைத் தடம்தொறும் கதுவிய கடுங் கனல் மண்டலின், அகல் வானில்
நிரைத்து எழுந்த செம் மரகத கனக வாள் நீல வெண் நிறத் தூமம்,
தரைத் தலத்தினின்று அண்டகோளகை உறச் சதமகன் தடஞ் சாபம்,
உரைத்த தன் வளைவு அற நிமிர்ந்து, அழகுற ஓடுகின்றது போலும்.

கருதி, 'ஆயிர கோடி வெம் புயங்கம் இக் கானிடை உள' என்று,
பருதி சூழ்வர வெருவு பல் குவடுடைப் பருப்பதங்களின் சாரல்,
சுருதி வேள்வி நூறு உடையவன் சிறகு அறத் துணித்த வாய்தொறும் பொங்கிக்
குருதி பாய்வன போன்றன, கொளுந்திய கொழுந் தழற் கொழுந்து அம்மா! 14

கோத்திரங்களின் கவானிடைக் கதுமெனக் கொளுந்தி உற்று எரிகின்ற
தீத் திறங்கள், செங் காந்தளும், அசோகமும், செங் குறிஞ்சியும், சேரப்
பூத்த ஒத்தன; அன்றியும், குலிக நீர் பொழி அருவியும் போன்ற;
பார்த்த கண்கள் விட்டு ஏகலா வகை நிறம் பரந்த தாதுவும் போன்ற. 15

தளைத்த பாதவத் தலைதொறும் பற்றின சருகு உதிர்த்து, இளவேனில்
கிளைத்து, மீளவும் பொறி அளி எழ வளர் கிசலயங்களும் போன்ற;
திளைத்த வேர் முதல் சினை உற எரிவன தீப சாலமும் போன்ற;—
வளைத்த கானிடை மெலமெல உள் புகு வன்னியின் சிகா வர்க்கம்.

தழைத்த பேர் ஒளித் திவாகரன் கரங்கள் போய்த் தடவி, அவ் அடவிக்கண்
பிழைத்த கார் இருட் பிழம்பினை வளைந்து, உடன் பிடித்து, எரிப்பன போலும்—
முழைத்த வான் புழை ஒரு கரத்து, இரு பணை, மும் மதப் பெரு நால் வாய்,
மழைத்த குஞ்சர முகம்தொறும் புக்கு, உடன் மயங்கிய பொறி மாலை. 17

வனத்தில் வாழும் பல பிராணிகள் எரியால் அழிதல்

அரி எனும் பெயர் பொருமையின்போல் விரைந்து அழல் கொழுந்து உளை பற்ற,
கிரி முழைஞ்சுகள்தொறும் பதைத்து ஓடின, கேசரிக் குலம் எல்லாம்;
விரி உரோம வாலதிகளில் பற்றலின், விளிவுடைச் சவரங்கள்
எரிகொள் சோக வெங் கனலினால் நின்று நின்று இறந்தன, சலியாமல்.

எப் புறத்தினும் புகுந்து தீச் சூழ்தலின், ஏகுதற்கு இடம் இன்றி,
தப்புதல் கருத்து அழிந்து, பேர் இரலையோடு உழைஇனம் தடுமாற,
மெய்ப்புறத்து வெண் புள்ளி செம் புள்ளி ஆய்விடும்படி, விரைந்து ஓடி
அப் புறத்து வீழ் பொறிகள், அவ்வவற்றினை அலங்கரித்தன அன்றே.

காமுடைப் புறக் கழைகளின் துளைதொறும் கால் பரந்து இசைக்கின்ற
ஏழ் இசைக்கு உளம் உருகி, மெய் புளகு எழ, இரைகொளும் அசுணங்கள்,
தாழ் அழற் சுடர் சுடச் சுட, வெடித்து எழு சடுல ஓசையின் மாய்ந்த;
ஊழியில் புயல் உருமினால் மடிந்திடும் உரகர்தம் குலம் போன்ற. 20

அனைய போதில், அவ் விபின சாலங்களின் ஆர் தருக்களின் நீண்ட
சினைகள்தோறும் வாழ் சிகாவல கலாபமேல் செறிதரு தீச் சோதி,
பனையின் நீள் உடல் பணிகளை அலகினால் பற்றலின் படர் பந்திப்
புனையும் மா மணி நிழல் பரந்து எழுந்தெனப் பொலிந்து இலங்கின மாதோ.

'ஆசுகன்தனோடு அடவியை வளைத்தனன், ஆசுசுக்கணி; மேன்மேல்
வீசுகின்றன புலிங்க சாலமும்; புகல் வேறு எமக்கு இலது' என்று
பாசிளங் கிளி, பூவைகள், வெருவி மெய் பதைத்து, உளம் தடுமாறிப்
பேசுகின்ற சொல் கேட்டலும், நடுங்கின, பிற பறவைகள் எல்லாம்.

நெஞ்சில் ஈரமும் நீதியும் குடி புகா நிருதர் சென்னியில் வன்னி,
குஞ்சி நீடுற வளர்வபோல், அசைந்து செங் கொழுந்து விட்டன, மேன்மேல்;
வஞ்சி நேர் இடை அரக்கியர் நக முழு மதி சிவப்பு உறத் தீட்டும்
பஞ்சி போன்றன, அவர் அவர் பத யுகம் பற்றிய சிகை வன்னி. 23

முப்புரங்களை முக்கணன் முனிந்த நாள், மூவர் அம் முழுத் தீயில்
தப்பினார் உளர்; காண்டவ அடவி வாழ் தானவர் யார் உய்ந்தார்?
பைப் புறத்து அணி மணி ஒளி பரந்தெனப் பல் தலைகளில் பற்றி
வெப்பு உறுத்தலின், உரகரும் தங்கள் வாய் விடங்கள் கொன்றென வீழ்ந்தார்.

காண்டவம் தீப்பற்றியது உணர்ந்த இந்திரன் அங்கு வந்து, கண்ணனும் அருச்சுனனும் எரிக்கு உதவியாய் நிற்றலைப் பார்த்தல்

புகை படப் படக் கரிந்தன, பொறியினால் பொறி எழுந்தன, வானின்
மிகை படைத்த அச் சுரபதி ஆயிரம் விழிகளும், கணப் போதில்;
தகைவு அறக் கழை முதலிய தருக்களின் சடுல ஆரவம் மிஞ்சி,
திகை அனைத்தினும் பரத்தலின், செவிகளும் செவிடு பட்டன, சேர.

விரதம் மேற்கொண்டு செம் பொன் மால் வரையை
    விரி சுடர் சூழ்வருவதுபோல்,
இரதம் மேற் கொண்ட அநுசனும் சுதனும்
    இமைப்பினில் பன் முறை தேர்ந்து,
சரதம் மேற்கொண்டு சரிப்பதும், தனது
    தாவகம் பாவகன் புகுந்து
பரதம் மேற்கொண்டு நடிப்பதும், கருதிப்
    பார்த்தனன், பாகசாதனனே. 26

முந்தி வார் சிலைக் கைப் பற்குனன் தொடுத்த
முரணுடை மூரி வெங் கணைகள்
உந்தி, வாள் உரகர் சூடிகா மகுட
கோடிகள் உடைத்தலின், உடைந்து,
சிந்தி மீது எழுந்த மணிகளும், அனலின்
சிகைகளில் தெறித்து எழு பொறியும்,
இந்திராலயத்திற்கு ஏற்றிய தீபம்
என்ன நின்று இலங்கின, எங்கும். 27

தக்ககனைக் குறித்துக் கவன்ற இந்திரன், தீயை அவிக்க மேகங்களை ஏவி,
தானும் சேனையுடன் போருக்குப் புறப்படுதல்

'தானவர் புரங்கள் நீறு எழ முனிந்த
தமனியச் சிலைக் கை வெள் ஊர்தி
ஆனவன் நமது புரத்தையும் சுடுவான்
அழன்றனன் போலும்!' என்று அஞ்சி,
வானவர் நடுங்க,—வானவர்க்கு அரசு ஆம்
வலாரியும் மனன் உறத் தளர்ந்து,
'கானவருடனே தக்ககன் என்னும்
கட்செவி கெடும்' எனக் கரைந்தான். 28

பரந்து எழு புகையால் தம் தம வடிவம்
பண்டையின் பதின் மடங்கு ஆகச்
சுரந்திடும் புயல்கள் அனைத்தையும், 'நெடு நீர்
சொரிந்து, அவித்திடுக!' எனச் சொல்லி,
நிரந்தரம் அருகு விடாது தன் நிழல்போல்
நின்ற வானவரையும் ஏவி,
புரந்தரன்தானும் ஈர்-இரு மருப்புப்
பொருப்பின் வெம் பிடர்மிசைப் புகுந்தான். 29

மேகங்கள் கிளர்ந்து எழுந்து மழை பொழியவும், அனல் அவியாது மிகுதல்

ஏ அக விருத்தச் செவ்வியின் தனுவுக்கு
ஏற்ற நாண் முறுக்கி விட்டென்ன,
சேவக இமையோர் எண் திசா முகத்தும்
செஞ் சுடர் வாள் விதிர்த்தென்ன,
பாவகன் பகு வாய் நா விதிர்த்தென்ன,
பரந்த அப் பாவகற்கு உணவு ஆம்
தாவகம் முழுதும் வளைந்துகொண்டு எழுந்த,
சலதர சஞ்சலா சாலம். 30

ஏறிய களிறு பிளிறு நீடு ஒலியும்,
எடுத்த வில் தெறித்த நாண் ஒலியும்,
சூறிய இமையோர் பெரு நகை ஒலியும்,
துந்துபிக் குழாம் அதிர் ஒலியும்,
கூறிய அனலன் சடுல வல் ஒலியும்,
குறை பட, திசைதொறும் மிகுந்த—
ஊறிய புவன பவன வேகத்தோடு
உருமுடை முகிலின்வாய் ஒலியே. 31

'தூமமும் எமது; பவனனும் எமது
தோழன்; அத் தோயமும் எமதே;
யாமும் இங்கு இவற்றேடு ஒன்றுதல் ஒழிதும்;
ஈர்-இரு பொருள்களும் பிரிந்தால்,
மா முகில் எனும் பேர் எங்குளது? அடர்த்து,
வாசவன் என் செயும், எம்மை?
ஆம் முறை அறிதும்' என்று கொண்டு அறவும்
அகங்கரித்தனன், வெகுண்டு அழலோன். 32

'மூண்ட வெங் கனலை உருமின் வெங் கனலால்
முருக்கி, எம் கால் கையால் நெருக்கி,
ஆண்டவன் களிற்றின் கரம் நிகர் தாரை
அருவியின் கணங்களால் அவித்து,
பாண்டவன் பகழி தொடுக்கினும், கண்ணன்
பருப்பதம் எடுக்கினும், எங்கள்
காண்டவம் புரத்தும்' என்று கொண்டு இழிந்து
பொழிந்தன, கணம் படு கனங்கள். 33

காலைவாய் அருக்கன் பனி நுகர்ந்தென்ன,
கட்டு அறக் காண்டவம் என்னும்
பாலைவாய் உள்ள சராசரம் அனைத்தும்
நுகர்தலின், பைம் புனல் வேட்டோன்,
வேலை ஏழையும் மொண்டு ஏழு மா முகிலும்
விதம் படப் பொழிந்த தாரைகளால்,
தாலு ஏழினையும் நனைத்தனன்; நனைத்தும்,
தணிந்ததோ, தன் பெருந் தாகம்? 34

'எக் கடல்களினும் இனிப் பசை இலது' என்று,
ஏழ்-இரு புவனமும் நடுங்க,
தொக்க அடல் உருமோடு எழும் எழு கொண்டல்
சோனை அம் சுருவையால், முகந்து
மைக் கடல் வெளுக்கக் கறுத்த மெய்ம் மகவான்
வழங்கிய ஆகுதி அனைத்தும்,
நெய்க் கடல் சொரிந்தது என்னுமாறு அருந்தி,
நீடு வான் முகடு உற நிமிர்ந்தான். 35

மழையைத் தடுக்க, அருச்சுனன் அம்பினால் சரக்கூடம் அமைத்தல்

தொழு தகு விசயன், தானு ஏழ் உடையோன்
சுடர் முடி நனைந்திடுவதன் முன்,
எழு முகில்இனமும் பொழிதரு மாரி
யாவையும் ஏவினால் விலக்கி,
முழுது உலகமும் தன்னிடத்து அடக்கிய வான்
முகடு உற முறை முறை அடுக்கி,
குழுமு வெங் கணையால் கனல்-கடவுளுக்குக்
கொற்ற வான் கவிகையும் கொடுத்தான். 36

ஆழ் தரு பரவை ஏழும் வற்றிடுமாறு
அழித்த கார் உமிழ்ந்திடு நெடு நீர்
தாழ்தரு சரத்தால் மேய்ந்ததற்கு இடை ஓர்
தனித் திவலையும் பொசியாமல்,
வீழ்தரும் அருவி, பாவகன்தனக்கு
விசயன் அன்று அளித்த பொன்-குடைக்குச்
சூழ்தர நிரைத்துத் தூக்கிய முத்தின்
சுடர் மணித் தொடையல் போன்றனவே. 37

மண்டி மீது எழுந்த வன்னியின் சிகைகள்,
இந்திரன் மதலை வாளிகளால்
கண்ட கூடத்திற்கு அமைத்த செம் பவளக்
கால் தகு தூண் திரள் காட்ட,
அண்ட கூடத்திற்கு இந்திரன் பளிங்கால்
அமைத்த பல் ஆயிர கோடி
சண்ட தூணங்கள் போன்றன, பரந்து
தனித்தனி முகில் பொழி தாரை. 38

தக்ககன் மனைவியை அம்பு எய்து அருச்சுனன் வீழ்த்தலும், அவனது மகவை இந்திரன் காத்தலும்

தக்ககன்தன்னைக் கூயினர் தேடி,
சாயக மண்டபம் சுற்றி,
மிக்க விண்ணவர்கள் திரிதர, அவன்தன்
மெல்லியல், மகவையும் விழுங்கி,
அக் கணம்தன்னில் அந்தரத்து எழலும்,
வீழ்த்தினன், அம்பினுல் துணித்துச்
செக் கனல் உருவச் சென்னியை—உரகர்
கன்னியைத் திருமணம் செய்தான். 39

மருவு அயில் சதகோடியின் இறை, ஐரா-
வதத்தின் மும் மதத்தினுல் நனைத்து,
கரு வயிற்று எழிலித் தாரையால், வருணக்
கடவுள்தன் கணைகளால், அவித்து,
செருவயின் புரள ஒதுக்கி, அத் தோழன்
சிறுவனைச் சென்று எடுத்து அணைத்தான்;
ஒருவயின் பிறந்தோன் ஆதலின், மகவா-
னுடன் உடன்றிலன், உதாசனனே. 40

அன்னை வாயொடு தன் வாலதி துணியுண்டு
அலமரும் அச்சுவசேனன்-
தன்னை வாசவன் போய் வீடு கண்டுழி, அத்
தனஞ்சயன், தனது வெங் கணையால்,
முன்னை வானவரை முனை முகந்தன்னில்
முதுகிட முதுகிட முருக்கி,
பின்னை வாரிதங்கள் ஏழையும் பொருது,
பின்னிடப் பின்னிடப் பிளந்தான். 41

தப்பிய தக்ககன் புதல்வனுன அச்சுவசேனன் கன்னனை அடுத்து அம்பாக இருத்தல்

தீர மால் பொருது வீடு கண்டதன் பின்,
செக்கர் மெய்த் தக்ககன் பயந்த
பார மாசுணம், 'அவ் விசயனுக்கு யாவர்
பகை?' எனப் பலரையும் வினவி,
'சூரன் மா மதலை சரணமே அரணம்
நமக்கு' எனத் தொழுது போய் எய்தி,
வீர மா முனை வெம் பகழி ஆகியது; எம்
மேதினியினும் பெரு வார்த்தை. 42

தக்ககனைக் காணுமையால் இந்திரன் வெகுண்டு பொர, ஏனைய தேவர்களும் உடன் வந்து பொருதல்

தோழன் மா மகனைக் கண்டபின், தனது
தோழனை ஒருவயின் காணுன்,
வேழ மா முகத்தில் கைத் தலம் புடைத்தான்,
விழிகள் ஆயிரங்களும் சிவந்தான்;
யாழ மாதிரத்தின் எதிர்ஒலி எழுமாறு
எயிற்று இள நிலவு எழ நகைத்தான்;
தாழ மா நிலத்தில் நின்று அமர் விளைக்கும்
தன் பெருந் தனயனை முனிந்தான். 43

மேக சாலங்கள் இளைத்ததும், திளைத்து
மேலிடு விண்ணவர் அணிந்த
யூக சாலங்கள் உடைந்ததும், கண்டான்,
உருத்து எழுந்து உள்ளமும் கொதித்தான்,
ஏக சாபமும் தன் ஏக சாயகமும்
இமைப்பு அளவையின் விரைந்து எடுத்தான்,
பாகசாதனனும்; ஏனைய திசையின்
பாலரும் பகடு மேற்கொண்டார். 44

தேவரும், கோடி தேவருக்கு ஒருவர்
சிரங்களாய் நின்ற முப்பத்து
மூவரும், தம்தம் வாகம் மேற்கொண்டு
முந்துற வந்து வந்து அணிந்தார்;
யாவரும் புவனத்து, 'இன்றுகொல் உகத்தின்
இறுதி!' என்று இரங்கினர் நடுங்க,
மே வரும் மனிதர் இருவரோடு அநேக
விபுதரும் வெகுண்டு போர் விளைத்தார். 45

துவாதசாதித்தர் முதலியோர் அருச்சுனனுக்குத் தோற்று ஓடுதல்

பச்சை வாசிகளும் செய்யன ஆக,
பாகரும் பதங்களே அன்றித்
தச்ச வாளிகளால் கரங்களும் இழந்து,
தனிப் பெருந் திகிரியும் தகர,
உச்ச மா மகத்தில் பண்டு ஒடிந்து ஒடியாது
ஒழிந்தன பற்களும் ஒடிய,
அச்சமே துணையா, அருக்கனும் ஒழிந்த
அருக்கர் பன்னொருவரும் அகன்றார். 46

மாறு பட்டுழி அப் பற்குனன் கணையால்
மழுக்களும் சூலமும் உடைய,
நீறுபட்டு உடலில் நீற்றுடன் படிய,
நெடுங் கொடி ஊர்தி ஏறுகளும்,
ஏறுபட்டு அழிய, சடையில் வார் நதியால்
ஏறிய தூளி வான் நெறியும்
சேறு பட்டிடுமாறு ஓடினர் மீள,
பதினொரு திறல் உருத்திரரும். 47

எண்ணிய வசுக்கள் எண்மரில் கங்கை
என்னும் யாய் வயிற்றில் உற்பவித்த
புண்ணியன் ஒழிந்தோர் எழுவரும், தங்கள்
புய வலிமையின் பொருதிடுவார்
நண்ணிய அமரில், விசயன் வெங் கணையால்
நாப் புலர்ந்து, உள்ளமும் நடுங்கி,
அண்ணிய நிலயம் புகுந்தனர்என்றால்,
நிற்பரோ, ஆயுள்வேதியரே? 48

அருண வெங் கனலோன் கனலொடு கலந்தான்;
ஆசுகன் அவற்கு நண்பு ஆனான்;
கருணை இல் யமனும் கானிடை மடியும்
கணத்திலே கவலை உற்றனனால்;
வருணனும் கடல்கள் வறத்தல் கண்டு அழிந்தான்;
மதியும், அம் மதி முடித்தவனும்,
இருள் நிற அரக்கன்தானும், ‘இங்கு இவரோடு
எங்ஙனம் பொருதும்!’ என்று இளைத்தார். 49

அருச்சுனன் அம்புகளால் மேகங்கள் சிதறி வெளிறி மீளுதல்

சொல் மழை பொழிந்து, நாள்தொறும், தனது
தோள்வலி துதிக்கும் நாவலர்க்குப்
பொன் மழை பொழியும் கொங்கர் பூபதிதன்
பொற் பதம் பொருந்தலர் போல,
கல் மழை பொழியும் காள மா முகிலும்,
கடவுளர்த் துரந்தவன் கரத்தில்
வில் மழை பொழிய, கற்களும் துகளாய்,
மேனியும் வெளிறி, மீண்டனவே. 50

இந்திரனோடு அருச்சுனன் கடுமையாகப் போர் செய்கையில், ஆகாயவாணி எழுதல்

மாயவன்தனக்கு நேய மைத்துனனும்
மைந்தன் அத் தந்தையை மதியான்,
தூய வெங் கணையால் அவன் இடித் துவசம்
துணித்து, அமர் தொடங்கும் அவ் அளவில்,
காயம் எங்கணும் நின்று ஒலி எழப் பரந்து,
காயம் இல் கடவுள், அக் கடவுள்-
நாயகன்தனக்குப் பரிவுடன் நவை தீர்
நல்லுரை நவின்றதை அன்றே: 51

'தமரினும் இனிய தக்ககன் முதலே
தப்பினன், குரு நிலம் சார்ந்தான்;
குமரனும், நும்மால் உய்ந்தனன்; தூமக்
கொடியனும் கொண்டலுக்கு அவியான்;
நமர்களில் இருவர், நரனும் நாரணனும்;
நமக்கும் இங்கு இவர் சிறிது இளையார்;
அமரினை ஒழிமின், அமரினை ஒழிமின்,
அமரரும் அமரர் நாதனுமே!' 52

ஆகாசவாணி கேட்ட இந்திரன் போரைத் துறந்து துறக்கம் போதல்

என்றுகொண்டு உரைத்த மொழி செவிப்பட்ட
எல்லையில், இரவி முன் இருள்போல்
துன்று தன் சேனைச் சுர கணம் சூழச்
சுரபதி துறக்கம்அது அடைந்தான்;
வென்று வெங் களம் கொண்டு அருச்சுனன் தனது
வெற்றி கொள் சங்கமும் குறித்தான்;
அன்று செந்திருமால் அருச்சுனன் பொருத
ஆண்மை கண்டு அதிசயித்தனனே. 53

தேவர், முனிவர், முதலியோர் அருச்சுனனைப் புகழ்தல்

வட மதுரையினும் தென் மதுரையினும்
மதிகுல நிருபர் கன்னியரைக்
கடி மணம் புரிந்தோன் வின்மையின் வன்மை
கண்ணுறக் கண்ட வானவரும்,
'புடவியில் ஒருவரொடும் இனிப் பூசல்
பொரேன்!' எனப் போன வாசவனும்,
முடி சடை மவுலி நாரதன் முதலாம்
முனிவரும், முடிவு அறப் புகழ்ந்தார். 54

அக்கினியிலிருந்து தப்பிப் பிழைத்தவர்கள்

மாசுணத்து அரசன் மந்திரம் அமைத்த
வனத்திடை இருந்த மா மயனை
ஆசுசுக்கணி சென்று அடர்த்தலும், வெருவி,
'அருச்சுனா, அபயம்!' என்று அரற்ற,
தேசுடைத் திகிரிச் செங் கண் மால் கருணை
செய்தனன்—தீவினை உறினும்,
பேசுதற்கு அரிய பெரியவர் நினைக்கின்,
யார்கொலோ பிழைத்திடாதவரே? 55

அழைத்து அடல் விசயன்தனை, 'துணை செய்க!' என்று
ஆறு-பத்து யோசனை ஆகித்
தழைத்த அவ் வனத்தை, கனத்தை வென்கண்டு,
தழலவன் நுகர்ந்திடுகாலை,
பிழைத்தவர், மயனும், தக்ககன் மகவும்,
பெருந் தவன் ஒருவன் முன் கருப்பம்
இழைத்த நுண் சிறகர்க் கருநிறக் குரீஇயின்
இனங்களும், அன்றி, வேறு இலரால். 56

அக்கினிதேவன் கண்ணனையும் அருச்சுனனையும் வாழ்த்தித் துறக்கம் செல்ல,
அவ் இருவரும் இந்திரப்பிரத்தம் சேர்தல்

என் பிற புகல்வது?—ஈர்-எழு புவனம்
எம்பிரான் அருந்தியது என்ன,
தன் பசி தணியக் காண்டவ வனத்தில்
சராசரம் உள்ளவை அனைத்தும்
வன்புடன் அருந்தி, உதரமும் குளிர்ந்தான்;
வன்னி, தன் வடிவமும் குளிர்ந்தான்;
அன்புடை இருவர்க்கு ஆசியும் புகன்றான்;
அசைந்து போய்த் துறக்கமும் அடைந்தான். 57

அமரரை முதுகு கண்ட காவலரும்
அவர்அவர் ஆண்மைகள் உரைசெய்து,
அமரில் அன்று எடுத்த பல் பெருங் கொடியால்
அலங்கரித்து அமைத்த தம் தேர்மேல்,
தமருடன் துணைவர் நால்வரும், நகரச்
சனங்களும், மகிழ்ந்து எதிர்கொள்ள,
தமரமும் முரசும் முழங்க, வெண் சங்கம்
தழங்க, வந்து, அணி நகர் சார்ந்தார். 58

# 10. இராயசூயச் சருக்கம்

கடவுள் வாழ்த்து

பாண்டவர்கள் புரிந்த தவப் பயன் ஆகி அவதரித்து, பகைத்து மேன்மேல்
மூண்ட வினை முழுவதுவும் முனைதோறும் முரண் முருக்கி, முகில் புகாமல்,
காண்டவமும் கனல் வயிற்றுக் கனல் தணிய நுகருவித்து, காக்குமாறே
பூண்டருள் எம் பெருமானைப் போற்றுவார் எழு பிறப்பும் மாற்றுவாரே.

பாண்டவர் முன்னிலையில் மயன் வந்து வணங்கி, குருபதிக்கு மண்டபம் ஒன்று அமைத்துத் தருவதாகக் கூறுதல்

வியன் உம்பர் பல கணமும் சுரபதியும் சென்று, எழில் கொள் விசும்பில் மேவ,
நயனங்கள் முதலான ஐம் புலனும் மனமும்போல் நகரி எய்தி,
பயன் மிஞ்சு தொழிலினராய்ப் பாண்டவரும் திருமாலும் பயிலும் வேலை,
மயன் என்பான் வாய் புதைத்து, வளம் பட, வந்து, ஒரு மாற்றம் வழங்கினனே:

'உம்மால் இன்று அரு வினையேன் உயிர் பிழைத்தேன்; நீர் தந்த உயிர்க்கு வேறு ஓர்
கைம்மாறு வேறு இல்லை;—குருகுலம்போல் எக் குலமும் காக்குகிற்பீர்!—
தெம் மாற உலகு ஆளும் செங்கோன்மைக் குரு பதிக்கு, சிற்பம் வல்லோர்,
"அம்மா!" என்று அதிசயிப்ப, அரிய மணி மண்டபம் ஒன்று அமைக்கின்றேனே.

'மேல் நாள், இவ் வுலகு ஆண்ட விடபருவன், அசுர குல வேந்தர் வேந்தன்,
தான் ஆண்மையுடன் பொருது, தரியலரைத் திறை கொணர்ந்த தாரா பந்தி-
போல் நாளும் ஒளி வீசும் பல மணிகள் விந்து எனும் பொய்கைதன்னில்
ஆனமல் கிடப்பன உண்டு; அவை இதற்கே உபதானம் ஆகும் என்றான்.

மயன் குறித்தபடி மணிகள் கொணருமாறு தருமன் ஏவ, விரைவில் ஏவலர் கொண்டுவருதல்

என்பதன் முன் முப்பதின்மேல் இரட்டி கொள் நூறுயிரவர் எடுத்த பாரம்
வன்புடனே தரித்து, வரை அசைந்தாலும் அசையாத வயிரத் தோளார்.
அன்பு மிகும் விழிக் கருணை அறன் புதல்வன் ஏவலினுல், அசுரத் தச்சன்
தன் பணி ஈது எனப் பணிப்ப,ஒரு நொடியில் கொடு வந்தார்; தளர்வு இலாதார்.

மயன் மண்டபம் கட்டி முடித்து, தருமன் தம்பியர்க்குக் கதையும் சங்கும் கொடுத்தல்

மீது அடுக்கிப் பசும் பொன்னால் சுவர் செய்து, மரகதத் தூண் வீதி போக்கி,
ஓது இடத்தில் சுருங்காமல் செழுந் துகிர் உத்தரம் பரப்பி, உலகு ஓர் ஏழும்,
'மாது இடத்தான் வைகுதற்கு வாய்க்குமதோ இது!' என்ன, வரம்பு இல் கேள்விச்
சோதிடத்தோர் நாள் உரைப்ப, சுதன்மையினும் முதன்மை பெறத் தொடங்கினனே.

மனத்தாலும், திருத் தகு நூல் வரம்பாலும், உரம் பயில் தோள் வலியினாலும்,
இனத்தாலும், தெரிந்து, தனது எண்ணிய எண்ணினுக்கு ஏற்ப, எண் இல் கோடித்
தினத்தாலும் செயற்கு அரிய செழு மணி மண்டபம் ஈர்-ஏழ் திங்கள் செய்தான்;
தனத்தால் மிஞ்சிய தருமன் தம்பியர்க்குத் தண்டுடன் வெண் சங்கும் ஈந்தான்.

மயன் ஆக்கிய மண்டபத்தில் தருமன் குடி புகுதல்

அத் தபதி தன் குறிப்பால் அமைத்த பெரு மண்டபத்தின் அளவு நீளம்
வித்தரமோடு உயர்ச்சி எனும் வனப்பு அனைத்தும், கண்டோர்கள், வியந்து கூற,
கொத்து அலர் தார் மணி முரசக் கொடி உயர்த்தோன் கனற் பிறந்த கொடியும் [தானும்,
எத் தமரும் மன மகிழ, குடி புகுந்தான்—இறைஞ்சலருக்கு இடி ஏறு அன்னான்.

நாரதன் அவைக்கு எழுந்தருள, தருமன் எதிர் சென்று வணங்கி உபசரித்தல்

தம்பியர்கள் நால்வருடன், தண் துழாய் முடியோனும் தானும் ஏனை
அம் புவி மன்னரும், முனிவர் அனைவரும், சூழ்தர இருந்த அமயம்தன்னில்,
தும்புரு நாரதன் என்னும் இருவரினும், நாரதனும் தோன்றல் தோன்ற,
பைம் பொன் மலர் தூய், எதிர் போய்ப் பணிந்து, இறைஞ்சி, என் செய்தான் பாண்டு [மைந்தன்?

ஏற்றினன், ஆசனத்தில்; தனித்தனியே உபசாரம் யாவும் தந்து,
மாற்றினன், வழி இளைப்பு; மலர் அயன்போல் இருந்தோனை மகிழ்ச்சி கூர்ந்து,
போற்றினன்; 'நீ வர, யான் புரி தவம் யாது!' எனப் புகழ்ந்தான்;—பொதியில் தென்றல்
காற்றினால் அரும்பு நறுஞ் சூதம்போல் புளகு அரும்பும் காயத்தானே.

'யான் புரிந்த தவம் உலகில் யார் புரிந்தார், அவனிபரில்?—இசையின் வீணைத்
தேன் புரிந்த தெள் அமுதால் அமுது உண்டோர் செவி இரதம் தெவிட்டுவிப்பாய்!
மான் புரிந்த திருக் கரத்து, மதி இருந்த நதி வேணி, மங்கை பாகன்
தான் புரிந்த திருக் கூத்துக்கு இசைய, மகிழ்ந்து இசை பாடும் தத்வ ஞானி!'

'இராயசூயம் செய்யுமாறு பாண்டு மொழிந்தான்' என்று தருமனிடம் நாரதன் தெரிவித்தல்

எனத் தருமன் மகன் கூற, இளையோர்கள் தனித்தனி நின்று இறைஞ்ச, நீலக்
கனத்து அனைய திருமேனிக் கண்ணனும் தன் மனம் களிப்பக் கண்ணின் நோக்க,
மனத்தில் அழுக்கு அணுகாத மா தவத்தோன் உதிட்டிரற்கு, 'இம் மாட கூடம்
தனத்தில் மிகு குபேரன் எழில் அளகையினும் இலது!' என்று சாற்றினனே.

'''மண்மிசை நால்விரல் நிற்கும் மணி மகுடத்து அணி அரங்கில், மண் உளோரும்
விண்மிசை வாழ்நரும் நெருங்க, விராய அரு மறைச் சடங்கின் இராயசூயம்
கண்மிசை மா மணி நிகர் என் கான்முளையைப் புரிவி'' என, 'காலன் ஊரில்'—
பண்மிசை வீணையின் கிழவன்—'பாண்டு மொழிந்தனன்' எனவும் பகர்வுற்றனே.

நாரதன் அகன்றபின், கண்ணன், 'வெள்ளி தொடங்கும்முன் சராசந்தனைக் கொல்ல வேண்டும்' எனல்

தந்தை மொழி தனயருக்குச் சாற்றி, முனி அகன்றதன் பின் தம்பி ஆன
இந்திரனும், தன் மனத்தில் எண்ணமும் ஈண்டு ஆகும் என எண்ணிக் கூறும்:
'அந்த நரமேத மகம் இயற்றுதற்கு என்று அவனிபரை அடைய வாரி,
பந்தம் உறு பெருஞ் சிறையில் படை கெழு வேல் சராசந்தன் படுத்தினனே.

'சதகோடிதனக்கு ஒளித்துத் தடங்கடலில் புகும் கிரிபோல், தளர்ச்சி கூர்ந்து,
சத கோடி முடி வேந்தர் தங்கள் உயிர் கொண்டு ஒளித்தார், சமருக்கு ஆற்றார்;
சத கோடி சுரும்பு அரற்றும் தாராய்! அச் சராசந்தன்தன்னை இவ்வே
சத கோடி இப மதுகைச் சதாகதிசேய்தனை ஒழியச் சாதிப்பார் யார்?

தருமன் ஒருப்பட, கண்ணன் வீமனுடனும் அருச்சுனனுடனும் வேதியர் வடிவில் சென்று, சராசந்தனின் அவையைச் சார்தல்

'ஆர மணம் கமழ் அசலம் அநேகம் உள ஆனாலும், அலையின் கூல
வாரிதியை மதிப்பதற்கு வல்லது மந்தரம் அன்றி மற்றும் உண்டோ?
போர் விசயம் இவனுடன் முன் பொருதோரில் யார் பெற்றார்? போதும், இப்போது
ஆரண மா முனிவரராய்' எனப் புகன்றான்; அறன் மகனும், 'அஃதே' என்றான்.

அரி விரசும் துழாய் மகுடத்து அரியும், இரண்டு அரிகள் அருள் ஆண்மையோரும்,
எரி விரசும் நெடுங் கானம் இரு தினத்தில் விரைந்து ஏகி, என் இல் காவல்
கிரிவிரச நகர் எய்தி, கிரித் தடந் தோள் மகதேசன் கிளரும் கோயில்
கரி விரசும் கோபுரப் பொன் திரு வாயில் புகுந்து, உரைத்தார், காவலோர்க்கே:

' ''வந்தனர், முனிவர் மூவர்'' என்று உரைமின்,
மன்னவற்கு' என, அவர் உரைப்ப,
'தந்திடும்' எனலும், புகுந்து, நீடு அம் பொன்-
தவிசு இருந்து, ஆசியும் சாற்ற,
கந்து அடர் குவவுத் தோளில் விற் குறியும்,
காட்சியும், கருத்து உற நோக்கி,
'அந்தணர் அல்லீர்; யாவர் நீர்?' என்றான்;
அவ் உரைக்கு அமலனும் உரைப்பான்: 18

'நீவிர் அந்தணர் அல்லீர்; வேறு யார்?' என்ற சராசந்தனுக்குத் தாம் வந்த காரணத்தைக் கண்ணன் எடுத்துரைத்தல்

'யான் விது குலத்தில் யாதவன்; இவரோ,
குருகுலத் தலைவனுக்கு இளையோர்;
மான்மத மலர்த் தார் மன்ன! கேள்: ஒருவன்
வாயுவின் மதலை; மற்று ஒருவன்,
வான் மதில் உடுத்த பொன் நகர்க்கு இறைவன்
மதலை; நின் வள நகர் காண்பான்,
கான் மதக் களிற்றாய்! முனிவராய் வந்தோம்,
காவலர்க்கு அணுக ஒணாமையினால்.' 19

வெருளி பொங்கச் சராசந்தன் வீமனைப் போருக்கு வலிய அழைத்து, தன் மகன் சகதேவனுக்கு மணி முடி சூட்டிவிட்டு, போருக்கு எழுதல்

என்றுகொண்டு உண்மை யாதவன் உரைப்ப,
இரு புய வலியின், எண் திசையும்
சென்றுகொண்டு அடர்த்து, தெவ்வர்தம் உயிரும்
திறைகளும் முறை முறை கவர்ந்து,
வென்றுகொண்டு, அணிந்த வாகையோன், 'தினவு
மிக்கன, எமது இணை மேருக்
குன்றுகொண்டு அமைந்த தோள்கள்; எம்முடன் நீர்
குறித்து அமர் புரியும்' என்று உரையா, 20

'நீ எனில், ஆண்டு ஓர் ஒன்பதிற்று-இரட்டி,
நெடுஞ் சிறைக் கலுழன் முன் நெறிக்கொள்
ஈ என ஓடி, மதுரை விட்டு, ஆழி
எயில் துவாரகைப் பதி புகுந்தாய்:
நோய் என அசுரர்க்கு உடைந்து, பொன்-காவில்
நுழை தரும் நூறு மா மகத்தோன்
சேய் எனின், இளையன்; வீமனை விசும்பில்
சேர்த்துவன்!' என விழி சிவவா, 21

மந்திரச் சுற்றத்தவர்களை அழைத்து,
மதலையை, 'மகிதலம்தனக்கு ஓர்
இந்திரன்' எனவே, மணி முடி புனைந்து, அன்று,
யாவரும் தேவரும் வியப்ப,
மந்தரகிரியும் விந்தமும் தம்மில்
மலைவபோல், மல் அமர் மலைவான்,
சந்து அணி தடந் தோள் கொட்டி, ஆர்த்து, எழுந்தான்,
தழல் உமிழ் விழிச் சராசந்தன். 22

சராசந்தனும் வீமனும் மற்போர் புரிந்து தளர்தல்

யாளி வெம் பதாகை வீமனும் அவனும்,
யாளியும் யாளியும் எனவே,
தாளினும், சமர மண்டலங்களினும்,
தாழ் விரல் தடக் கை முட்டியினும்,
தோளினும், சென்னித்தலத்தினும், மற்போர்
சொன்ன போர் விதம் எலாம் தொடங்கி,
நாளினும் திங்கள் ஒன்றினில் பாதி,
நள் இரவினும், சமர் நடத்தி, 23

பூதலம் நடுங்க, எழு கிரி நடுங்க,
போதகத்தொடு திசை நடுங்க,
மீதலம் நடுங்க, கண்ட கண்டவர்தம்
மெய்களும் மெய் உற நடுங்க,
பாதலம் நடுங்க, இருவர் மா மனமும்
பறை அறைந்து அயர்வுடன் நடுங்க,
சாதல் அங்கு ஒழிந்த இடர் எலாம் உழந்து,
தங்களில் தனித்தனி தளர்ந்தார். 24

தெளிவு பெற்று எழுந்த வீமன் சராசந்தனது உடலை இரு கூறுகப் பிளந்து எறிதல்

கொல்ல என்று எண்ணும் இருவரும், ஒருவர்
ஒருவரைக் கொல்லொணுமையினல்,
மல் அமர் வலியும் இரு புயவலியும்
இழந்து, மா மகிதலத்து உறலும்,
கல் அடர் செம் பொன் வரையின் முக் குவடு
காலுடன் பறித்த கால் கண்டு,
நல்ல தன் மைந்தற்கு உணர்வு மீண்டு எய்த,
நலத்துடன் நல்கியது அன்றே. 25

மீளவும் மிருக துவசன் உற்று எழுந்து,
விதலையின் விழுந்த மேவலனே,
தாளொடு தாள்கள் வலி உற, தன் பொன்
தடக் கையால் முடக்கு அறப் பிடித்து,
வாள் உகிர் வாளால் கனகனைப் பிளந்த
வண் துழாய் மணம் கமழ் மௌலிக்
கோள் அரி எனவே பிளந்து, எறிந்து, அண்ட
கோளமும் பிளக்க, நின்று, ஆர்த்தான். 26

பிளவுபட்ட சராசந்தனின் உடற்கூறுகள் ஒன்றுபடவே, அவன் கிளர்ந்து பொர, வீமன் மீண்டும் அவனைப் பிளந்து, கண்ணன் குறிப்பித்தபடி பிளவுகளை அடி முடி மாறுபட இடுதல்

பிளந்து எறி பிளவு மீளவும் பொருந்தி,
பிளிறு மா மத கரி நிகர்ப்பக்
கிளர்ந்து, வெஞ் சமரம் தொடங்கலும், தனது
கேதனக் கேசரி அனையான்,
வளர்ந்த திண் புயத்தின் வலியினல், முன்னை
மல் அமர் எழு மடங்கு ஆக
உலைந்திட மலைந்து, வீழுமாறு உதைத்தான்;
ஓர் இரண்டு ஆனதால், உடலம். 27

சீறி, அக் குரிசில் கீண்ட பேர் உடலை,
'சென்னி தாள் செவ்வையின் இடாமல்
மாறி இட்டிடுக!' என்று, ஆர் உயிர்த் துணையாய்
வந்த மா மரகத வடிவோன்
கூறி இட்டிடாமல் குறிப்பினுல் உரைப்ப,
குறிப்பை அக் குறிப்பினுல் குறித்து,
வேறு இடப் புவியின்மிசை எறிந்தனனுல்;
வீமன் வல்லபத்தை யார் உரைப்பார்! 28

இறந்த சராசந்தனைக் குறித்து அருச்சுனன் கண்ணனை வினவுதல்

சந்தச் சிகரச் சந்து அணியும் தடந் தோள் ஆண்மைச் சராசந்தன்,
முந்தப் பொருத மல் அமரில், முரணேடு அழிந்து முடிந்ததன்பின்,
இந்தப் புதுமைதனை வியவா, ஏத்தா, இறைஞ்சா, யதுகுல மா
மைந்தற்கு ஒரு வாசகம் உரைப்பான், மணித் தார்ப் புய வாசவன் மைந்தன்:

'இன்று ஆர் அமரின் இவன் கையால் இறந்தோன் உடலம் ஒன்றியதும்,
ஒன்ருது இரண்டு பட்டதும், யாம் உணரும்படி நீ உரைத்தருள்வாய்—
குன்ருல் அன்று மழை தடுத்த கொற்றக் கவிகைக் கோபாலா!'
என்ருன்; என்ற பொழுது, அவனும் இறந்தோன் சரிதம் இனிது உரைப்பான்:

கண்ணன் கூறிய சராசந்தன் வரலாறு

'வானேர் பகைவர்களில் ஒருவன் மகத குலத்து, மாரதப்பேர்
ஆனேன் வயிற்றில் அவதரித்தான்; அவன்காண், இந்த அடல் வேந்தன்;
மீனேததி சூழ் மேதினியின் வேந்தர் குலத்தை, வேரோடும்,
தான் ஓர் ஆழி தனி நடத்தி, தடிந்தான், அணிந்த சமர்தோறும். 31

'எண்ணற்கு அரிய முடி வேந்தர் எண்ணுயிரவர் பசு ஆக,
மண் இத்தனையும் தன் குடைக்கீழ் வைக்கும்படி, மா மகம் புரிவான்
கண்ணி, சிறையினிடை வைத்தான்; கண் ஆயிரத்தோன் முதலாக
விண்ணில் பயிலும் தேவர்களும், இவன் பேர் சொல்ல வெருவுவரால்!

'இவனைப் பயந்தோன் மகவு ஒன்றும் இன்றி, சண்டகௌசிகப்பேர்த்
தவனைப் பணிந்து, வரம் வேண்ட, தவனும், தான் வாழ் தடஞ் சூதத்து,
அவனிக்கு அரிய தீம் கனி ஒன்று அளித்தான்; அளித்த அக் கனியை
நவ நித்தில வாள் நகை இருவர் இல் வாழ்பவர்க்கு நல்கினனுல். 33

'காசித் தலைவன் கன்னியர், தம் கண்போல் வடு முற்றிய கனியை
ஆசின் பிளந்து, தம் கொழுநன் அருளால், அமுது ஒத்து இனிது அருந்த,
மாசு அற்று இலங்கும் மகவு இருவர்வயினும் பகிர்ந்து வளர்ந்ததன் பின்,
பாசத்துடனே ஓர் ஒருவர் பயந்தார், வடிவில் பப்பாதி. 34

'ஒருவன் இருவர் உதரத்தும் உடன் உற்பவித்த உற்பாதம்
வெருவி, மகத குல வேந்தன் வியல் மா நகரின் புறத்து எறிய,
புரிசை வாயில், கண்டு, அவற்றைப் புசிப்பாள் எடுத்து, பொருத்தினளால்—
தருமம் உணரா மனத்தி, ஒரு தசை வாய் அரக்கி, சரை என்பாள்.

'தன்னால் ஒன்றுபடுதலும் அத் தனயன்தன்னை, ''சராசந்தன்
என்று அழைத்தி'' என, மகதத்து இறைவற்கு அளித்து, அங்கு ஏகினளால்;
அந் நாள் முதல் அப் பெயர் படைத்தான்; அதனால், இவ்வாறு ஆனது' எனச்
சொன்னான்; அது கேட்டு, உளம் மகிழ்ந்தார், சுரர் கோ மகனும் துணைவனுமே.

கண்ணன் முதலிய மூவரும் இந்திரப்பிரத்தத்திற்கு மீளுதல்

வினை முற்றியபின், மூவரும் நல் வினையே புரி போர் மன்னவரை
இனைதல் சிறை விட்டு, இகல் மல்லால் இறந்தோன் மகனை எழில் மகுடம்
புனைவித்து, அந்த நகரீசன் பொன்-தாள் வணங்க, அவன் ஏறும்
துனை பொன் நடந் தேர் ஊர்ந்து, அறத்தின் சுதன் வந்து எதிர் கொண்டிட, மீண்டார்.

திக்குவிசயம் செய்யச் செல்வது குறித்து அருச்சுனன் அவையில் உரைத்தல்

கருதற்கு அரிய நிதி அனைத்தும் கவர்ந்தோர் காட்ட, கண்டு உவந்த
முரசக் கொடியோன் முன், வேதம் மொழிந்தோன் முதலாம் முனிவரரும்
அரசக் குழாமும் ஈண்டிய பேர் அவையில், கடவுள் அரசு ஈன்ற
வரி வில் குமரன் மாதிரங்கள் வெல்வான் ஏகும் வகை உரைத்தான்:

'சுருதிப் படியே வர ராயசூயப் பெயர் மா மகம் தொடங்கக்
கருதி, குணபால் எம்முன்னும், வட பால் யானும், கால்-திசைக்கும்
நிருதித் திசைக்கும் நடு எம்பி இவனும், சிலை வேள் நிரை மணித் தேர்
வரு திக்கினில் இவ் இளையோனும், மலைவான் எழுக வருக!' என.

வீமன் முதலிய நால்வரும் திக்குவிசயத்திற்குப் புறப்படுதலும், கண்ணன் துவாரகையை அடைதலும்

என்னும் சேனையுடன் விரைவின் எழுந்தார், இவர் ஈர்-இருவோரும்;
விண்ணும், கடவுள் ஆலயமும் முதலா உள்ள மேல் உலகும்,
மண்ணும், புயங்க தலம் முதலாம் மற்று எவ் உலகும், மாதிரமும்,
துண்ணென்றிட்ட, ஐந்து வகைப் பெரும் பேர் இயத்தின் துவனியினால்.

நானம் கமழும் செங்கழுநீர் நறுந் தார் வேந்தர் நால்வரையும்,
மானம் பெறு திண் சேனையுடன், வளர் மாதிரத்து வகுத்து ஏவி,
மீனம், கமடம், ஏனம், நரஅரியாய், நரராய், மெய்ஞ் ஞான
ஆனந்தமும் ஆகிய நாதன், அன்றே, துவராபதி அடைந்தான். 41

வீமன், அருச்சுனன், முதலிய நால்வரின் திக்குவிசயம்

வான் மருச்சுதனும், ஈர்-இரண்டு கடல் வய வருதினியின் வர்க்கமும்,
நால் மருப்பு, ஒரு கை, மும் மதத்து, வய நாகம் மேவி வளர் திசையின் வாழ்
கோன் மதிக்க, நெடு வங்கமும், திகழ் கலிங்கமும், தெறு குலிங்கமும்
தான் மலைத்து, முனை முரண் மிகுத்து வரு தரியலாரை முனை தள்ளியே,

மற்றும் மற்றும் அவண் மருவு பாடைகளின் மன் குலத்தொடு தடிந்து, மேல்
உற்ற உற்றவரை, யானம் யாவையும் ஒடிந்து இடிந்து பொடியுண்ணவே,
இற்ற இற்ற பல தலைகளால், அலை எறிந்து மோதி வரு குருதியால்,
முற்ற முற்ற வரைஇனமும் வார் குருதி நதியுமாய் எழ, முருக்கியே,

அந்த அந்த அவனிபர் எலாம், 'அபயம், அபயம்!' என்று அடி வணங்கவே,
வந்த வந்த நிதி யாவையும் சிகர வட மகீதரம் எனக் குவித்து,
'எந்த எந்த நரபாலர் பாரில் நிகர்' என்ன என்ன, அவர் இறை எனத்
தந்த தந்த வித தந்திமீது கொடு, தங்கள் மா நகரி சாரவே, 44

விசைய வெம் பகழி விசயன், வெவ் விசையொடு, இரு நிதிக் கிழவன் மேவி வாழ்
திசை அடைந்து, கதிர் இரவி என்னும்வகை சீறி, மாறு பொரு தெவ்வர் ஆம்
நிசை அழிந்து வெளி ஆக, நால் வகை நெருங்கு சேனையொடு நிலனும் நின்று
அசைய, வன்பினுடன் ஏகினான்—எழு பராகம் எண் திசை அடைக்கவே.

பாரதப் பெயர் கொள் வருடம் ஆதி, பல பாரின் உள்ள நரபாலரை,
பேர் அற, குலமும் வேர் அற, பொருது, பிஞ்ஞகன் கிரியும் இமயமும்
சேர மொத்தி, அவண் உள்ள கந்தருவர் கின்னரேசர் பலர் திறை இட,
போர் அடர்த்து, உகம் முடிந்தகாலை எழு புணரி என்ன நனி பொங்கியே,

விந்த மால் வரையும், ஏமகூடமுடன், நிடத நாம நெடு வெற்பும், மா
மந்தராசலம், விசால மாலிய மணித் தடஞ் சிகர மலையுடன்,
கந்தமாதனமும், நீல சைலமும், எனப் புகன்ற பல கிரியில் வாழ்
அந்தராதிபர் நடுங்க, மேரு கிரி அப் புறத்து நனி அணுகியே, 47

அத் திசைக்கண் அரசான உத்தர குருக்கள் மேன்மையை அடக்கி, 'மேல்
எத் திசைக்கும் இவன் அன்றி வீரர் இலர்' என்று தேவரும் இயம்பவே,
மெத்து இசைப் பனி நிலா எழ, சமர விசய கம்பமும் நிறுத்தினான்;—
முத்து இசைக்கும், மதி, வெண்குடைக் கடவுள் முதல்வனான அரி புதல்வனே.

கரிகள் கோடி, இரதங்கள் கோடி, பவனத்தினும் கடுகு கவன வெம்
பரிகள் கோடி, நவகோடி மா மணிகள், பல் வகைப் படு பசும் பொனின்
கிரிகள் கோடி எனவே, கவர்ந்து, எழு கிரிப் புறம் தெறு கிரீடி வந்து,
அரிகள் கோடி கிளர் சோலை சூழ் தமது செல்வ மா நகரி அணுகினான்.

வடாது சென்ற வரி சிலை மகிபனினும் எழு மடங்கு மிகு வலியுடன்
குடாது சென்று, இளைய வீர மா நகுலன், 'நகுலன்!' என்று குலைகுலையவே'
அடாத மன்னரை அடர்த்து, அடுத்தவரை, 'அஞ்சல்!' என்று அமர் உடற்றினான்
இடாதவன் தனம் எனக் கரந்தனர்கள், ஏனை மன்னவர்கள் யாருமே.

மாளவத்திெைாடு கர்ப்படம், பொர வகுத்து எதிர்ந்த திரிகர்த்தமும்,
தாள வண் புடை இருட் பிழம்பு எழ, அருக்கனின் பெரிது சுடர் எழ,
தாள வண் கதியுடைத் துரங்க ரத கச பதாதியொடு, தகு சினம்
மூள வந்து, எதிர் மலைந்த மன்னவரை முதுகு கண்டு, அமர் முருக்கியே,

கூற்று இசைக்கும் என உடன் வரும் கடிய கொடிய சேனையொடு குமரனும்,—
காற்று இசைக்கும் என வருணனும், தனி கருக் குலைந்து, உளம் வெருக் கொள,
தோற்றுஇசைக்கும் வகை கொண்டு மற்று அவர்கள் சொரிதரும் திறைகள் வாரி, அம்
மேல் திசைக்கும் ஒரு மேரு உண்டு என உயர்த்தினன், நிகர் இல் வீரனே.

அளவு இலாத திறையோடும், அத் திசை உதித்தது ஓர் இரவி ஆம் என,
துளவ மாலை கமழ் மௌலி நாதன் உறை துவரை எய்தி, உயர் சுருதியின்
கிளவியால் முனிவர் தொழு பதம் தொழுது, கேசரித் துவச வீரனுக்கு
இளவல், மீளவும், அரிப்பிரத்த நகர் எய்தி, மன்னனை இறைஞ்சினன்.

குன்று இசைத்த கச ரத துரங்கம பதாதி சூழ இறைகொள்ளவும்,
நின்று இசைத்துவரு பல பணைக் குலம் இரைக்கவும், கொடி நிரைக்கவும்,
துன்று இசைப் பனி நிலா எழக் கவிகை எண் இலாதன துலங்கவும்,
தென் திசைப் படர்தல் மேயினன்—நகுல நிருபனுக்கு இளைய செம்மலே.

அத் திசைக்கண் இரு கடலினுக்கு நடுவான மண்டலம் அனைத்தினும்,
மத்திகைப் புரவி மண்டலேசரும், வயங்கு மா மகுட மகிபரும்,
புத்தி கைக்க அமர் பொருது, அழிந்து, திறை பொழிய, வாரி, வளர் புய கிரிப்
பித்திகைத் தொடையல் நீலன் என்னும் நரபதி பெரும் பதி புகுந்தபின்,

அந்த மா நகரி காவலான சுடர் அங்கி சீறி, எதிர் பொங்கி, மேல்
வந்த வீரன் மிகு சேனை யாவையும் மயங்க, வெம் புகை இயங்கவே,
கந்து சீறு களி யானை மன்னன் அது கண்டு, வெங் கனல் அவிப்பது ஓர்
இந்து மா முக சரங்கள், ஏழு நெடு நாவினன் அழிய, ஏவினன். 56

அஞ்சி, அந்த அழலோனும், அப்பொழுது ஓர் அந்தணாளன் வடிவு ஆகியே,
வஞ்சி அம் தொடையல் மன்னன் முன்பு வர, வந்த மா முனியை, மன்னன், 'நீ
எஞ்சி நின்று, சுடுகின்ற காரணம் இது என்னை?' என்னலும் இயம்பினன்—
மஞ்சு இவர்ந்த புகை வானவன் தனது வரவும், நீலன் வழிபாடுமே.

நீலன் இட்ட திறையான கோல மணி நீலம் ஆதி நவ நிதியமும்,
சால மிக்க தமனியமும், வெள்ளி, உயர் சாரல் விந்த சயிலப் புறத்து,
ஏல நெட்டடவி முறிய மோதி, வெளியாக ஏழ் கடலையும் கடைக்
காலம் முற்றி எழு கால் எனும்படி, கலக்கினன், எழு கலிங்கமும். 58

சென்னி நாடு, குட கொங்க நாடு, திறை கொண்டு, தென்னன் உறை செந்தமிழ்க்
கன்னி நாடு உறவுடன் புகுந்து, மணி நித்திலக் குவைகள் கைக்கொளா
மன்னி, நாடு கடல் கொண்ட கைம் முனிவன் வைகும் மா மலயம் நண்ணினன்—
மின்னி நாடுற விளங்கு வெஞ் சமர வீர வாகை பெறு வேலினன். 59

செகத்து இயங்கு தனி ஆழி ஐவரினும் இளைய காளையொடு சேனை அந்
நகத்து இயைந்த பொழுது, அவனி பவ்வம் உறு நவ் எனத் தலை நடுங்கவே,
மிகத் தியங்கி, நெடு மேரு வெற்பின்மிசை மேவு வானவர்கள், மீளவும்
அகத்தியன்தனை வடக்கு இருத்தும் வகை உன்னினார்கள், சமமாகவே. 60

கல் நிலம்கொல் என வலிய மெய் பெறு கடோற்கசன்தனை அழைத்து, 'நீ
தென் இலங்கை திறைகொண்டு, மீள்க!' என, இளைய தாதை உரைசெய்யவே,
மின் இலங்கு அணி எயிற்று அரக்கர் குல வீரனாகிய விபீடணன்-
தன் நிலம் கொதிகொளப் புகுந்து, ஒரு சழக்கு அற, சமர் உழக்கினன்.

'யாரையோ? உரைசெய் நீ!' எனத் திறல் நிசாசராதிபன் இயம்பலும்,
'பாரை ஏழினையும் முழுதுடைக் குருகுலத்து மேன்மை பெறு பாண்டுவின்
பேரன் யான்; விறல் இடிம்பன் மா மருகன்' என, அரக்கர் பெருமான் மனத்து
ஊரும் ஆதரவினோடு அழைத்து, அவனை உவகையோடு மிக உறவு உற,

'நீ இலங்கையிடை வந்தது என்கொல்?' என, 'நீதியால் உயர் உதிட்டிரன்
ராயசூயம் எனும் நாம மா மகம் இயற்றுவான் விறலொடு எண்ணினன்;
நேயமான இளையோர்கள் நால்வரும் நெடுந் திசாமுகம் அடங்க வென்று,
ஏய மா நிதி திரட்டல் உற்றனர்கள்; யானும், நின் நகரி எய்தினேன்.

'அற்பு அனைத்து உலகும் எண்ணவே, அறன் அளித்த மன்னன் அழல் வேள்வியின்
கற்பனைக்கு உதவி தருக!' என, பழைய கால் விழுத்த நெடு வேலை வீழ்
வெற்பனைப் புகல, அந்த வீடணன் அளித்த நீடு உயர் வியன்தலைப்
பொற்பனைத்தரு ஓர் ஏழும் ஏழும் உடனே கவர்ந்து, கழல் போற்றியே,

மீள வந்து இளைய தாதை பாதம் முடிமீது வைத்து, ஒளி விளங்கு பொன்
பாளை அம் பனைகள், பற்பராகம் முதலான பல் மணி, பரப்பினன்,
நாள் இரண்டில்; இமையோரொடு ஒத்த பெரு ஞான பண்டிதனும், நல் அறன்
காளை பைங் கழல் வணங்கினன், தனது பதி புகுந்து நனி கடுகியே.

ஆல் வரும் புரவித் திண் தேர் அறன் மகன், அநுசர் ஆன
நால்வரும் சென்று, திக்கு ஓர் நால்-இரண்டினும் தன் செய்ய
கோல் வரும் படியே ஆக்கி, கொணர்ந்தன திறைகள் கண்டான்.
மேல்வரும் இராயசூய வேள்வி நாம் விளம்பக் கேண்மோ: 66

யாகத்திற்குக் கண்ணன் முதலியோரைத் தருமன் அழைக்க, அனைவரும் வருதல்

இரணியன் இரணியாக்கன் என்ற தானவரை வென்று, ஆங்கு,
அரணிய இலங்கை மூதூர் அரக்கனை அநுசனோடும்
மரணம் உற்றிட, முன் சீறி, மாமனை மலைந்து, மற்றை
முரணிய பகையும் தீர்ப்பான், மூர்த்தியாய்ப் பிறந்துளோனை, 67

விரைவினில் கொணருமாறு வீணை நாரதனைப் போக்கி,
தரணியர்க்கு எல்லாம் ஓலை தனித்தனி தூதின் போக்கி,
வரனுடைச் சுருதி நான்கும் வகுத்தவன் ஆதிஆன
இருபிறப்பாளர் யார்க்கும் உலூகனை ஏவினானே. 68

தானவர் தச்சன் வந்து சமைத்தது ஓர் சிற்பந்தன்னை
வானவர் தச்சன் கண்டு மகிழும் மண்டபத்தின், வேந்தர்
ஆனவர் எவரும் ஈண்டி, அந்தணர் எவரும் ஈண்டி,
மானவர் எவரும் ஈண்டி, வரம்பு அற நெருங்கினாரே. 69

வந்தோர்களை வரவேற்று, கண்ணனையும் பலராமனையும் தம்பியருடன் சென்று
தருமன் எதிர்கொள்ளுதல்

வர வர, வந்த வந்த முனிவரை வணங்கி, ஆசி
திரமுறப் பெற்று, வேந்தர் சிறப்பு எலாம் திருக்கண் நோக்கி,
நரபதிதானும் மற்றை நால்வரும், நீலமேனி
இரவியை அனையான்தன்னை, உவகையோடு, எதிர்கொண்டானே.

கர கதக் களிறு போலும் கனிட்டர் ஈர்-இருவரோடும்
துரகதத் தடந் தேர் விட்டு, துழாய் மணம் கமழும் பொன்-தோள்
மரகதக் கிரி அன்னானை வணங்கினன் தழுவி, வெள்ளைத்
திருநிறத்தவன்தன் செம்பொன் திருப்பதம் இறைஞ்சினானே. 71

கண்ணனது பவனியைக் கண்ட மாதர்கள் நிலை

இரு புடை மருங்கும் திக்கு ஓர் எட்டையும் வென்றோர் போத,
நிருபதி தேரில் போத, நேமியான் களிற்றில் போத,
சுரர் பெருந் தச்சன் செய்த தொல் நகர் வீதி புக்கார்;
வரு திருப் பவனி கேட்டார், வள நகர் மாதர் எல்லாம். 72

ஈர் அடிகளினும் செம்பஞ்சு எழுதுவார், எழுதும் முன்னர்,
ஓர் அடி எழுதி, மின்போல் ஒல்கி வந்து, இறைஞ்சுவாரும்;
ஆர் அமுது அனைய கண்ணின் அஞ்சனம் எழுதுகின்ற
சீரிய கோலும், கையும், திருத்தகத் தோன்றுவாரும்; 73

விரி துகில் வேறு உடாமல், விரை கமழ் தூ நீர் ஆடி,
சுரி குழல் மேகம் மாரி துளித்திட எதிர்கொள்வாரும்;
கரதல மலரில் சங்கும், கலாபமும், சிலம்பும், ஆர்ப்ப,
தெருவுஎலாம் தாமே ஆகி, சீறடி சிவப்பிப்பாரும்; 74

வார் குழைப் பற்பராக மணி விளக்கு ஏற்றுவாரும்;
நேர் இழை மருங்குல் வாட்டும் நிறை குடம் பூரிப்பாரும்;
கார் இளங் கமுகும், பச்சைக் கதலியும், நிரைத்து, தோள் ஆம்
தோரணம் நாட்டுவாரும்; தூ மலர் சிந்துவாரும்; 75

மாதர்கள் எவர்க்கும் முன் போய் வணங்குதற்கு உன்னி, சிந்தை
ஆதரவுடனே வந்தும், ஆவணம் அணுகுருமல்
சூது அடர் கொங்கை, பொன்-தோள், சுரி குழல், சுமக்கல்ஆற்ருப்
பேதுறு மருங்குலோடும் பித்துறு பிடி அன்ஞரும்; 76

இவ் வகை குழுக்கொண்டு ஆங்கண், எழுவகைப் பருவ மாதர்,
செவ்வியும், அழகும், தேசும், செய்ய பூந் திருவோடு ஒப்பார்,
மெய் வழி நின்ற போக மேகமே அனையான்தன்னை
மை வழி கண்ணின் நோக்கி, மனன் உற வணங்கினரே. 77

மாடம் பயிலும் மணித் தோரண வீதி,
நீடு அஞ்சனக் கண் நெருங்கித் தடுமாற,
ஆடம்பரக் கொண்டல் அன்னனை, ஆபாத
சூடம் கருதி, தொழுதார்—சில மாதர். 78

கங்கை தரு பொற் கழலான் மணி மார்பில்
கொங்கை முகுளம் குழையும்படியாக,
சங்கை அற, மெய் தழுவுதற்குத் தம்மினும் தம்
செங் கை மலர் பதற, சென்ருர்—சில மாதர். 79

வண்டு மலர் கரும்பு ஆம் வண்ணப் படையானைக்
கண்டனைய கண் நிறைந்த காயா மலர் வண்ணன்,
செண்டு தரித்தோன், திருப்பவளத்து ஆர் அமுதம்
உண்டு, மனத்தினல், உய்ந்தார்—சில மாதர். 80

வஞ்சம் பயில் சகட வாள் அசுரன் மாள, விறல்
கஞ்சன் பட, உதைத்த காலானைக் கண்டு, உருகி,
அஞ்சு அம்பு மெய் உருவ, ஐம் புலனும் சோகம் உற,
நெஞ்சம் தடுமாற, நின்ருர்—சில மாதர். 81

தங்கள் குல முன்றில் தலையாய மும் மதத்து
வெங் கண் மதமாமிசை வருவோன் மெய்ந் நோக்கி,
அம் கண் மிளிர, அரும் புருவ வில் முரிய,
திங்கள்நுதல் வேர்வு ஓட, நின்ருர்—சில மாதர். 82

கால முகிலும் மலர்க் காயாவும் அன்ன திருக்
கோலம் உடையோன் குலவு மணிப் பூண் மார்பின்
மாலை நறுந் துளப மன்றலுக்கு, வாள் நயன
நீல வரி வண்டு ஆகி, நின்றார்—சில மாதர். 83

கண்ணன் குந்தியைப் பணிந்த பின், அரசவையில் வீற்றிருந்து,
பாண்டவருடன் அளவளாவுதல்

மங்கையர் பலரும் இங்ஙன் மன்மத பாணம் நான்கின்
இங்கித இன்பம் எய்தி, இன் உயிரோடு நிற்ப,
பங்கு உற வந்த அந்தப் பாண்டவர் ஐவரோடும்,
கொங்கு அவிழ் துளபத் தாரான், குந்தி வாழ் கோயில் புக்கான். 84

கொற்றவர் ஐவர்தம்மைக் குருகுலம் விளங்குமாறு
பெற்றவள் பாதம் போற்றி, பிறப்பு இறப்பு அறுக்க வல்லோன்,
மற்று அவள் வாழ்த்த வாழ்த்த, மனம் மகிழ்ந்து, அழலின் வந்த
பொற்றொடி பணிவும், ஏனைப் பூவையர் பணிவும், கொண்டான்.

அரசவைக்கு அணிசெய் சிங்க ஆசனத்து இருத்தி, வெற்றி
முரசுடைத் துவச வேந்தன் முகம் மலர்ந்து இருந்த காலை,
விரை செயப் புரவித் திண் தேர் வீமனை முதலோர், எங்கும்
உரை செலக் கவர்ந்த செல்வம் காட்டி நின்று, உரைசெய்தாரே.

சராசந்தன் மகனும் வீடுமன் முதலிய வேந்தர்களும் வருதல்

முன் நரமேதம் செய்வான் முடிச் சராசந்தன் என்னும்
கின்னரர் பாடும் சீரான், கிளப்ப அருஞ் சிறையில் வைத்த
அந் நரபதிகளோடும், அவன் மகன் மாகதேசன்,
எந் நரபதிகளுக்கும் இரவியே என்ன, வந்தான். 87

அரும் பனைக் கொடியோன் ஆதி அரவு உயர்த்தவன் ஈறு ஆகும்,
பொரும் படைச் சேனை வெள்ளப் பூருவின் குலத்து உளோர்கள்,
கரும் பனைத் தடக் கை வெங் கண் கரி முதல் சேனையோடும்,
இரும்பினைக் குழைக்கும் நெஞ்சர் யாவரும், ஈண்டி மொய்த்தார். 88

இந்திரபுரிக்கும், இந்த இந்திரபுரிக்கும், தேவர்,
அந்தரம் அறிவுறுமல், அதிசயித்து உவகை கூர,
செந்திரு மடந்தைக்கு உள்ள செல்வங்கள் அனைத்தும் சேர
வந்தது போலும், வேள்வி மா நகர்த் தோற்றம் அம்மா! 89

அந்தணர்கள் யாகசாலையில் வந்து கூடுதல்

தோரண வீதிதோறும், தூரிய முழக்கம்தன்னின்
ஆரண முழக்கம் மிஞ்ச, அந்தணர் ஆகி உள்ளோர்,
காரணம் உணர்ந்தோர், வேள்விக் கனல்முகமாகத் தேவர்
பாரணம் பண்ண இட்ட பைம் பொன் வேதிகையில் சேர்ந்தார்.

யாகசாலையின் தோற்றம்

சுடும் அனல் கலுழனக, சுருதியின்படியே, கோட்டி,
நடுவுற, திசைகள் நான்கும் நான்கு வெள் ஏறு கோட்டி,
வடு அறச் சமைத்த சாலை மண்டபம்தன்னை நோக்கின்,
கடவுளர்க்கு அமைத்த யாக தலம் எனக் கவினிற்று அம்மா! 91

திருந்த மெய்ஞ் ஞானமும் தெளிந்த தெய்வத
அருந் தவ முனிவர் பேர் அவையின் மேன்மையால்,
பெருந் தகை நாபி அம் பெருமன் வாழ்வுபோன்று
இருந்தது—குருபதி யாக சாலையே. 92

யாதவ குலத்தினுக்கு இறைவன் ஆகிய
மாதவன் இணை அடி வணங்கி, மற்று உள
பூதலத்து அரசு எலாம் பொருந்து பொற்பினல்,
ஓத நீர் வண்ணன் வாழ் உலகு போன்றதே! 93

வியாத முனிவன் தனி இடத்தில் பாண்டவர்க்கு உரைத்த செய்திகள்

விதியினும் உயர்ந்த தொல் வியாதன், மேதினி
பதிகள் ஆகிய திறல் பாண்டு மைந்தரை,
'மதியினில் ஒரு புடை வருக!' என்று, அன்பினல்,
திதி உறச் சில்மொழி செவியில் செப்பினன்: 94

'இங்கிதத்து இந்திரர் என்பர் யாவரும்,
சங்கரன் விதியினல், தரணி பாலர் ஆய்,
வெங் கனல் தோன்றிய மின்னை, ஐவரும்,
மங்கலம் புவிமகள் வழக்கின் எய்தினீர்; 95

'ஓர் ஒரு தலைவராய், ஓர் ஓர் ஆண்டு, உளம்
கூர் உவகையினெடும் கொழுநர் ஆயினீர்;
ஆர் அழல் பிறந்த மான் அறத்தின் மைந்தற்குப்
பேர் அழல் வளர்த்திடும் பெற்றி பெற்றனள். 96

'மைந்தர் நீர் நால்வரும்; மகம் செய் வேந்தனே
தந்தையும்; தாயும், இத் தரும வல்லியே;
இந்த வான் பிறப்பினுக்கு, இற்றை நாள் முதல்,
குந்தியும் பாண்டுவும் என்று கொண்மினே.' 97

முனிவன் மொழிந்தபடி, தருமனுக்கும் திரௌபதிக்கும்
வேள்விக்குரிய கோலம் செய்தல்

கனல் வரு மின்னையும் கணவன்தன்னையும்,
முனிவரன் மொழிந்திட, முகூர்த்தம் ஆனபின்,
புனை முடி, திருக் குழல், புழுகும், நானமும்,
இனிமையின் சாத்தினர், எண் இல் மாதரே. 98

கதியொடு பிறை தவழ் கடுக்கைக் காட்டு நல்
நதி தரு புனல்கொடு நானம் ஆட்டினார்;
விதிமுறை அறிந்தவர், வேள்விக்கு ஏற்பன,
பதியுடன் அணிந்தனர், பாவைதன்னையும். 99

தம்பியர் முதலியோருக்குத் தருமன் கடமைகளை வகுத்தல்

மாலை முன் வணங்கி, கங்கை மைந்தனை வணங்கி, யாக
சாலையை நோக்கும் வேந்தன், தம்பியை நோக்கி, 'முந்நீர்
வேலையின் மணலின் சாலும் மிகு சனம் அருந்த, தேவர்
ஆலயத்து அமுதம் அன்ன அடிசில் நீ அளித்தி' என்றான். 100

'நாவியின் மதமும், சாந்தும், நறும் பனி நீரும், தாரும்,
வாவியில் காவில் உள்ள மலர்களும், மற்றும் யாவும்,'
மேவிய வரி வில் ஆண்மை விசயனை, 'நல்குக!' என்றான்;
தூ இலை, பளிதம், ஏனைத் துணைவரை வழங்கச் சொன்னான். 101

'தானமும் தியாகம்தானும் தபனன் மா மதலையான
மானவன் கொடுக்க!' என்றான்; 'வரம்பு இலா நிதிகள் யாவும்
கானல் அம் கடல் சூழ் வையம் காவலன் காவல்!' என்றான்;
ஏனையோர் பலரும் வேந்தன் ஏவலின் முறை நின்றாரே. 102

தருமன் திரௌபதியுடன் ஓமகுண்டத்தின் முன் அமர்ந்திருந்த காட்சி

தழல் வளர் ஓம குண்டத் தலத்தினில், வலத்தில், ஆதித்
தழல் வரு பாவை வைக, தருமன் மா மதலை, ஆங்கண்,
தழல் புரை வேதவாணர் தாள் இணை வணங்கி, தானும்
தழல் என இருந்தான், எல்லா வினைகளும் தகனம் செய்வான். 103

கட கரி உரிவை போர்த்த கண்ணுதற் கடவுள், மாறி,
இடம் வலமாக, பாகத்து இறைவியோடு இருந்தவாபோல்,
உடல் கலை உறுப்புத் தோலின் ஒளித்திடப் போர்த்து, வேள்விக்
கடனினுக்கு உரிய எல்லாம் கவினுறச் சாத்தினானே. 104

தருமன் இராயசூயம் வேட்டல்

பொங்குறும் ஓமச் செந் தீப் புகையினைப் போர்த்தது என்ன,
பைங் கடல் பருகு மேகம் பரிதியை மறைத்தது என்ன,
அங்கு உறுப்புடனே வெங் கோட்டு அரிணத் தொக்கு அருணமேனி
எங்கணும் புதைப்ப, வேள்வித் தொழிலிலே இதயம் வைத்தான்.

தருமன் மா மதலை, அந்தச் சடங்கு சொற்படியே தொட்டு,
புரிவுடைத் திசைகள் நான்கும் புற்களால் காவல் செய்து,
விரி சுடர்த் திகள் மூன்றும் விண்ணவர் முகங்கள் ஆக,
சுருவையால் முகந்த நெய்யை, சுருதியால், ஓமம் செய்தான். 106

முழுது உணர் வரம்பு இல் கேள்வி முனிவரர் குழாமும், என்றும்
அழிவு இலா மலரோன் ஆதி அமரர்தம் குழாமும், சூழ,
எழு சுடர் முத் தீப் பொங்க, எழு பகல் ஓமம் செய்தான்—
பழுது அறு பாண்டு செய்த மா தவம் பலித்தது ஒப்பான். 107

வேள்வி முடிவில் தருமன் தானமும் தியாகமும் செய்து, அபவிரதம் ஆடுதல்

இம் முறை, இராயசூய மா மகத்துக்கு
எழுதொணு நான்மறை உரைத்த
அம் முறை இமையோர் ஆனவர்க்கு எல்லாம்
அரும் பெறல் அவி உணவு அருளி,
மும் முறை வலம் வந்து, இருவரும் சுவாகை-
முதல்வனை முடி உற வணங்கி,
தெம் முறை அரசர் இடு திறை அனைத்தும்
தானமும் தியாகமும் செய்தான். 108

ஏழு நாள், இவ்வாறு, இமையவர் எவர்க்கும்
இமகிரிதனில் அயன் வேட்ட
ஊழி மா மகம்போல், இயற்றி, எண் திசையின்
உயர் புனல் யாவையும் சொரிய,
ஆழிவாய் முகிலும் மின்னுமே என்ன,
அரும் புனல் ஆடிய பின்னர்,
வாழி பாடினர்கள், நாரதன் முதலோர்;
மங்கலம் பாடினர், புலவோர். 109

'முதற்பூசைக்கு உரியார் யார்?' என வீடுமனைத் தருமன் வினவுதல்

பெயர் பெறும் முனிவர் எவர்க்கும் எண்-இரண்டு ஆம்
பேர் உபசாரமும் வழங்கி,
உயர்வு அற உயர்ந்த வேள்வியின் உயர்ந்தோன்,
உயர் குலப் பாவையும் தானும்,
மயர்வு அறு ஞான வடிவமாய் நின்ற
மாயனை மனனுற வணங்கி,
அயர்வு அறு கங்கை மகன் பதம் பணிவுற்று,
அறன் மகன் வினவினன் அம்மா! 110

'பரிதியும் மதியும் வன்னியும் முதலாம்
பல் வகைக் குலத்தும் உற்பவித்த
நரபதி குழாத்தில் யாவரே பெறுவார்,
நவிலும் முற்பூசை, மற்று?' என்ன,
சுருதிய வசுக்கள் எண்மரில் ஒருவன்,
கங்கையின் திருமகன், தெய்வச்
சுருதி மா மகம் செய் புனிதனை நோக்கி,
தொல் முனிவரரையும் நோக்கி, 111

விடுமன் முனிவரைக் கேட்க, வியாதன், 'கண்ணனே முதற்பூசைக்கு உரியான்' எனல்

'ஆர்கொலோ, அக்ர பூசனைக்கு உரியார்,
அரசரில்? அந்தணிர்! உரைமின்—
பார் எலாம் தம்தம் குடை நிழல் புரக்கும்
பார்த்திவர் யாரையும் உணர்வீர்;
தார் உலாம் மார்பீர்!' என்றலும், வியாதன்
தருமன் மா மதலையை நோக்கி,
'காரின் மா மேனிக் கரிய செந் திகிரிக்
கண்ணனுக்கு உதவு' எனக் கதித்தான். 112

முனிவன் உரையை வேந்தர்கள், 'நன்று!' என்ன, சிசுபாலன் சினந்து
கண்ணனைப் பழித்து உரைத்தல்

என்ற போது அந்த வேத்தவை இருந்தோர்
யாவரும் இருந்துழி இருந்து,
'நன்று, நான்மறையோர் சிகாமணி உரைத்த
நவிர் அறு நல் உரை!' என்றார்.
சென்ற போர்தோறும் வென்றியே புனையும்
சேதிப பதி சிசுபாலன்
கன்றினன், இதயம்; கருகினன், வதனம்;
கனல் எனச் சிவந்தனன், கண்ணும். 113

'பூபாலர் அவையத்து முற்பூசை பெறுவார், புறங்கானில் வாழ்
கோபாலரோ?' என்று உருத்து, அங்கு அதிர்த்து, கொதித்து, ஓதினன்—
காபாலி முனியாத வெங் காமன் நிகரான கவின் எய்தி, ஏழ்
தீ பால் அடங்காத புகழ் வீர கயம் அன்ன சிசுபாலனே. 114

'சூரன் குலத்தோர், குபேரன் குலத்தோர், சுடர்ப் பாவகப்
பேரன் குலத்தோர்கள், முதலோர் இருந்தார்கள், பெயர் பெற்ற பேர்;
வீரம்கொலோ? வாகு சாரம்கொலோ? செல்வ மிச்சம்கொலோ?
பூர் அம்பு ராசிப் புவிக்கு என்றும் முதுவோர்கள் பொதுவோர்கொலோ?

'பராசர முனிவன் மதலை ஆம்படியே
பகர்ந்தனை, பழுது இலா மாற்றம்;
இராச மண்டலத்தின் மரபினுல், வலியால்,
ஏற்றமும் தோற்றமும் உடையோன்,
சுராசுரர் வியக்கும், கஞ்சனை மலைவான்,
சூரன் மா மகன் வயிற்று உதித்தான்;
தராதலமிசையே பிறந்து, இவன் கற்றது,
எத்தனை இந்திரசாலம்! 116

'சொற்றவா நன்று, சுகன் திருத் தாதை!
சூதிகைத் தோன்றிய பொழுதே,
பெற்ற தாய்தானும் பிதாவும் முன் வணங்க,
பேசலா உரை எலாம் பேசி,
கற்ற மாயையினுல் கன்னி அங்கு இருப்ப,
கார் இருள், காளிந்தி நீந்தி,
அற்றை நாள் அண்டர் ஆனவர்க்கு
எல்லாம் அரசனுக்கு அரு மகவு ஆனுன். 117

'ஈன்ற தாய் வடிவம் கொண்டு, உளம் உருகி,
இணை முலைத் தடத்து அணைத்து, அமுதம்
போன்ற பால் கொடுப்ப, பொழி முலைப் பாலோ,
பூதனை உயிர்கொலோ, நுகர்ந்தான்?
சான்ற பேர் உரலால் உறிதொறும் எட்டாத்
தயிருடன் நறு நெய் பால் அருந்தி,
ஆன்ற தாய் கண்டு வடத்தினின் பிணிப்ப,
அணி உரலுடன் இருந்து அழுதான்! 118

'பாடினுன் மறுகு, பெரு நகை விளைப்ப;
பாவையர் மனைதொறும், வெண்ணெய்க்கு
ஆடினுன்; அவர்கள் முகம்தொறும் எச்சில்
ஆக்கினுன்; கன்று முன் ஓட
ஓடினுன்; ஆவின் பேர் இளங் கன்றை
உயிருடன் ஒரு தனி விளவில்
சாடினுன்; அரவின் முதுகையும், புள்ளின்
தாலுவோடு அலகையும், பிளந்தான்! 119

'பின்னிய குஞ்சிக் கோவலர் பயந்த
பேதையர் பலரையும், களிந்த
கன்னியின் மருங்கும், ஓரையின் மருங்கும்,
கலை எலாம் நாணிடக் கவர்ந்தே,
முன்னிய இன்பச் செருக்கிலே மயக்கி,
மூரி வில் காமனும் ஆனன்;
அன்னியன் அல்லன்; மற்று-இவன் பெருமை
அரசரில் ஆர் அறியாதார்? 120

'அண்டர்க்கு எல்லாம் அரசு ஆன ஆகண்டலனுக்கு அண்டர் இனிது
உண்டற்கு அமைத்த பால் அடிசில் உண்டான், ஒரு நாள், ஒரு தானே;
கொண்டல் கல்மாரியை, முன்னம், கோவர்த்தனமே குடையாக,
சண்ட ப்ரசண்ட வேகமுடன், தடுத்தான்; ஏறு படுத்தானே. 121

'பம்பிப் பரந்த புல் மேயும் பசுவின் கன்றும், கோபாலர்-
தம் புத்திரரும், அம்புயத்தோன் தன் மாயையினுல் ஒளித்திடும் நாள்,
'எம் புத்திரரும், எம் கோவின் இளங் கன்றினமும்' எனத் தெளிய,
வம்பின் புரிந்த மாயை இவன் அல்லால், யாவர் வல்லாரே! 122

'அதிரப் பொரும் போர் அஞ்சினனோ? அஞ்சாமைகொலோ? தெரியாது;
மதுரைப் பதியும், தன் கிளையும், வாழ்வும் துறந்து, வாரிதிவாய்
எதிர் ஒப்பிலாத துவாரகை என்று இயற்பேர் படைத்த மா நகரில்,
முதிரப் பொரும் போர்த் தம்முனுடன் இருந்தான், பல் நாள், முரண் அறுத்தே. 123

'கஞ்சன் எனும் மாமனொடு காளை அமர் செய்தான்;
வஞ்சனையினுல், அமரும் எத்தனை மலைந்தான்?
தஞ்சம் எனவே மருவு தமரில் ஒருதானே
மிஞ்சி, விரகால், உரிய மேதினி புரந்தான். 124

'அன்னையும், தாதைதானும் அருஞ் சிறை அகத்து வைக,
முன் இரு-மூவர் முன்னோர்தங்களை முருக்குவித்தான்;
பின் ஒரு தமையன்தன்னை, ''பெற்ற தாய் இருவர்'' என்று என்று,
இந் நிலம் சொல்ல வைத்தான்; இவனை வேறு யாவர் ஒப்பார்?' 125

என்றுகொண்டு எண்ணி, நாவுக்கு இசைந்தன உரைகள் எல்லாம்
ஒன்றின் ஒன்று உச்சமாக, உயர்ச்சியும் தாழ்வும் தோன்ற,
கன்றிய மனத்தினோடும் கட்டுரைசெய்தான்—மன்றல்
தென்றல் அம் சோலை சூழும் சேதி நாடு உடைய கோவே. 126

கண்ணன் சினத்துடன் தேரில் ஏறி, சிசுபாலனைப் போருக்கு அழைத்தல்

திண்ணிய நெஞ்சினனான சிசுபாலன், தன் நெஞ்சில் தீங்கு தோன்ற,
எண்ணிய மன் பேர் அவையின் இயம்பிய புன் சொற்கள் எலாம் எண்ணி எண்ணி,
புண்ணியர் வந்து இனிது இறைஞ்சும் பூங் கழலோன் வேறு ஒன்றும் புகலான் ஆகி,
பண்ணிய தன் புரவி நெடும் பரு மணித் தேர் மேற்கொண்டான், பரிதிபோல்வான்.

'எந் நாட்டில் அவனிபரும் ஈண்டிய இத் தொல் அவையின் இசைத்த—சேதி
நல் நாட்டுக்கு அதிபதியாம் நரபால!—நின் மாற்றம் நன்று நன்று!
கல் நாட்டும் படியாக இருவோரும் பொருது அறிதும்; கடிது ஏகு!' என்று,
தன் நாட்டம் மிகச் சிவந்தான்—கரிய வடிவினில் புனைந்த தண் துழாயோன். 128

நகர்ப்புறத்தில் கண்ணனும் சிசுபாலனும் தத்தம் சேனைகளுடன் எதிர்ந்து பொருதல்

சேதி குல நரபதியும் செருப் புரிதற்கு அஞ்சுவனோ? தேரில் ஆனான்;
மோதி வலம்புரி ஊத, முகில்இனங்கள் முழங்குவபோல் முரசம் ஆர்ப்ப,
வேதியரோடு அவை இருந்த வேந்தர் எலாம் அதிசயிப்ப விமானம்தோறும்
சோதிமுடி அமரர் வர, நகர்ப் புறத்தில் அமர் புரியத் தொடங்கினாரே.

ஆதி வரு கதிப் பரியும், அணி வயிரத் திண் தேரும், அனிலம் என்ன
மோதி வரு கட களிறும், காலாளும், பொருது, உரகர் முடிகள் சோர,
யாதவனும் நரபதியும், இருங் கிளையும், பெருங் கிளையோடு எதிர் இலாத
சேதி குல நரபதியும், செய்த அமர் சுராசுரரில் செய்தார் உண்டோ?

யானைமேல் வரு நிருபரும், திறல் யானைமேல் வரு நிருபரும்,
சோனை மா முகில் ஏழுமே நிகர் என்ன அம்பு தொடுத்தலின்,
தானை ஆறும் நிறைந்து, பல் அணி ஆகி, மிஞ்சிய சதுர் விதச்
சேனை யாவையும் மெய் சிவந்தன, சிந்தை மா மலர் கருகவே. 131

ஓர் இரண்டு வருதினிக்குளும் உயர் தடங் கிரி ஒப்பவே
ஈர்-இரண்டு விதத்தினாலும் இயம்பல் உற்றன எண்ணில் பல்
தேர், இரண்டு அணி உருளினோடு உருள் சென்று முட்டின—தீ இடிக்
கார் இரண்டு எதிர் மலையுமாறென அண்ட பித்தி கலங்கவே. 132

சிங்கம் ஒன்றுடன் ஒன்று சீறு செருக்கு எனும்படி, சேனைவாய்,
வங்கர், கொங்கணர், துளுவர், ஆரியர், மகதர், ஒட்டியர், மாளவர்,
கங்கர், கொங்கர், தெலுங்கர், சீனர், கலிங்கர், சிங்களர், கௌசலர்,
அங்கர், சோனகர், ஆன வீரர் அதிர்ந்து, தங்களின் அமர் செய்தார்.

வெருவரும்படி கம்பு கொம்பு விதம்கொள் மா முரசு ஆதியா,
இருவர்தம் படைகளினும் ஊழி எழுந்த கால் என அதிர்தலால்,
மருவி, எண் திசை முகமும் நிற்பன மத்த வாரண கன்னமும்,
திரு விரும்பு புயத்து வானவர் செவிகளும், செவிடு ஆனவே. 134

புடை படக் கிளை ஆகி வந்து எதிர் பூ துரந்தார் யாவரும்,
தொடை படப் பரிவுறு மனத்தொடு தொந்த யுத்தம் உடற்றினர்.
குடை எடுத்தனர், இருவரும்; பெறு கொடி எடுத்தனர்; கொற்ற வெம்
படை எடுத்தனர்;—மா மறைப் பசுபாலனும், சிசுபாலனும். 135

வேலினால், வடி வாளினால், வரி வில்லினால், உரைபெற்ற வெங்
கோலினால், இருவரும் முனைந்து, இரு குன்றம் ஒத்தன தேரினர்,
மாலினால் வரும் மத்த யானைகள் மலைவது ஒத்து மதித்த போர்-
நூலினால் வழு அற மலைந்தனர்—நுண்மை யாவினும் நுண்ணியார்.

வெஞ் சினம் முடுக, ஒருவருக்கு ஒருவர்
வெல்லலும் தோற்றலும் இன்றி,
வஞ்சினம் உரைசெய்து, உள்ளமும், மெய்யும்,
வாகு பூதரங்களும், பூரித்து,
எஞ்சினர் தமைப்போல் இளைத்த பின், இனி வான்
ஏற்றுதல் கடன் எனக் கருதி,
கஞ்சனை முனிந்தோன், இவன் முடித் தலைமேல்,
கதிர் மணித் திகிரி ஏவினனே. 137

சிசுபாலன் மடிய, அவன் ஆவி சோதி வடிவாய்க் கண்ணன் திருவடி
அடைந்தமை கண்டு, அனைவரும் வியத்தல்

ஏவிய திகிரி, வீரரைத் துறக்கம்
ஏற விட்டிடும் இரவியைப்போல்,
மேவிய பகையாம் மைத்துனன் முடியை
விளங்கு கோளகை உற வீசி,
ஆவிகள் அனைத்தும் நிறைந்து, ஒளி சிறந்த
அச்சுதன், அலைகொள் பாற்கடலில்
திவிய அமுதம் அமரருக்கு அளித்தோன்,
திருக் கரம் சென்று சேர்ந்ததுவே. 138

சேதி மன்னவன்தன் முடியினை நெடியோன்
திகிரி சென்று அரிந்திட, ஒரு பொற்
சோதி மற்று அவன்தன் உடலின்நின்று எழுந்து,
சுடரையும் பிளந்துபோய், மீண்டு,
மாதிரம் அனைத்தும் ஒளியுற விளக்கி,
மண் அளந்தருள் பதம் அடைய,
வேதியர் முதலோர் யாவரும், வேள்விப் பேர்
அவை வேந்தரும் கண்டார். 139

'ஈது ஒரு புதுமை, இருந்தவா!' என்பார்;
'இந்திரசாலமோ?' என்பார்;
'மாது ஒரு பாகன் அல்லது, இக் கண்ணன்
மதி குலத்தவன் அலன்!' என்பார்;
'கோது ஒரு வடிவாம் புன்மொழி கிளைஞர்
கூறினும் பொறுப்பரோ?' என்பார்;
காது ஒரு குழையோன் இளவலைத் தேர்மேல்
கண்டு தம் கண் இணை களிப்பார். 140

வியாத முனிவன் சிசுபாலனின் முற்பிறப்பு வரலாற்றைக் கூற, வீடுமன் முதலியோர் கேட்டல்

அதிசயித்து இவ்வாறு இருந்துழி, இருந்தோர்
அனைவரும், ஆழியான் தன்னைத்
துதி செய, தருமன் சுதன் முதல் எவரும் தொழுது,
எதிர் வந்து வந்து இறைஞ்ச,
விதி எனப் பொருத வெங் களத்திடை, அவ்
வியாத மா முனி எடுத்து உரைப்ப,
மதியுடைக் கடவுள்-வீடுமன் முதலாம்
மன்னவர் யாவரும் கேட்டார். 141

'ஐவகை வடிவாய், எங்குமாய், நின்ற
அச்சுதன், அமலன், ஆனந்தன்,
செய் ஒளி திகழும் பங்கயக் கண்ணன்,
திருமகள் கொழுநனைக் காண,
துய்ய செய் தவத்துத் துருவாச முனிவன்
சேறலும், சுடர் கொள் வைகுண்ட
மெய் உறு கோயில் துவார பாலகர் அவ்
வேத பண்டிதன்தனை விலக்க, 142

'விலங்கிய இருவர் தம்மையும் அந்த
வெஞ் சின முனிவரன் வெகுண்டு,
''துலங்கிய கோயில் துவாரம் விட்டு, அவனி
தோன்றுமின், போய்'' எனச் சபித்தான்,
அலங்கல் அம் துளவ மௌலியான் அது கேட்டு,
அந்தணன்தனை எதிர்கொண்டு,
''கலங்கிய துவாரபாலர் நின் சாபம்
கடப்பது எக் காலமோ?'' என்றான். 143

'என்றலும், முனிவன் பரிந்து, ''இவர் எழு கால்
இன்புறும் அன்பராய் வருதல்;
அன்றி, மும் மடங்கு பகைவராய் வருதல்;
அல்லது, இங்கு உன் பதம் அணுகார்;
மன்றல் அம் துளப மாலையாய்!'' என்ன,
மலர்மகள் மகிழ்நனும், அவரை,
''கன்றிய மறையோன் சாபம் நீர் கடக்கும்
கருத்து மற்று யாதுகொல்?'' என்ருன். 144

'மற்று, அவர் இறைவன் மலரடி வணங்கி,
''வான் பிறப்பு ஏழ் உற மாட்டேம்;
உற்று முப் பவமும் உனக்கு வெம் பகையாய்
உற்பவித்து, உன் பதம் உறுவேம்;
வெற்றிகொள் முதிர் போர் நேமியாய்!'' என்ருர்;
விமலனும், கொடிய வெஞ் சாபம்
அற்றிடும் வகை அவ் வரம் அவர்க்கு அளித்தான்;
அசுரர் ஆய், அவரும் வந்து, உதித்தார். 145

'இரணியன், இரணியாக்கன், என்று உரைக்கும்
இயற்பெயர் இருவரும் எய்தி,
முரணிய கொடுமை புரிந்து, மூஉலகும்
மொய்ம்புடன் கவர்ந்திடு நாளில்,
அரணியின் அழல்போல் நரஅரி உருவாய்
அச்சுதன் தூணில் அங்குரித்து,
தரணியின் உகிரால் பிளந்து, முன் உகத்தில்
தன் பகை செகுத்தனன். பின்னும், 146

'அரக்கர்தம் குலத்துக்கு அதிபதி ஆகி,
ஆண்டு போய், மீண்டும் அங்குரித்து,
தருக்குடன் அவர்கள் இருவரும் முறையால்
தம்பியும் தமையனும் ஆனுர்;
சிரக் குவையுடனே புயவரை நிரையும்
சிந்த அச் சிந்துவினிடையே
சரக் குவை சொரிந்தான்—அமலன், அவ் உகத்து,
தசரதன்தன் வயிற்று உதித்தே. 147

'இந்த நல் உகத்தில் இறைவனுக்கு அன்னோர்
இருவரும் கிளைஞராய் எய்தி
வந்தனர், வஞ்சக் கஞ்ச மாமனும் இம்
மைத்துனன்தானுமாய் மன்னே;
சிந்தையில் உணர்வீர்' என்றுகொண்டு உரைத்தான்,
சித்து அசித்து உணர்ந்தருள் முனியும்;
அந்த மன் அவையில் இருந்துளோர் எல்லாம்
அமலனைத் துதித்து, அதிசயித்தார். 148

வீடுமன் முதலியோர் கண்ணனைத் துதித்து வணங்குதல்

வீடுமன், விதுரன், துரோணனே முதலாம்
விரகு இலா உணர்வுடை வேந்தர்
நாடினர் மனத்தில்; புளகம் உற்று உடலம்,
நயனம் நீர் மல்க, நாக் குழறிப்
பாடினர்; புகழ்ந்து பரவினர்; பரவிப்
பைந் துழாய் கமழ் மலர்ப் பாதம்
சூடினர்;—சுருதிக்கு எட்ட ஒணாது ஒளிரும்
சுடர் மணித் துய்ய சோதியையே. 149

கண்ணன் சொற்படி, தருமன் எல்லோருக்கும் சிறப்புச் செய்தல்

அப்பொழுது, அமலன் அருஞ் சினம் ஒழிந்து, ஆங்கு,
அருளுடை அறத்தின் மைந்தனைப் பார்த்து,
'இப்பொழுது அரசர் ஆனவர்க்கு எல்லாம்
இருஞ் சிறப்பு உதவுக!' என்று இசைப்ப,
முப்பொழுது உணரும் முனிவரன் பணியால்,
முறை முறை பூசனை புரிந்தான்—
மைப்பொழுது ஒளி கூர் வெண் நிலவு உமிழும்
மதி குலத்து உதித்தருள் மன்னன். 150

முனிவர்களும் கண்ணன் முதலியோரும் தத்தம் பதிக்கு மீளுதல்

அரு மறை முறையால் அரசனை முனிவர்
அனைவரும் ஆசி சொற்றருளி,
தரு நிரை பயிலும் தம் தம விபினம்
சார்ந்தனர், தகவுடன் மீள;
கரு முகில் அனைய மேனி அம் கருணைக்
கண்ணனும், கிளையுடன், துவரைத்
திரு நகர் அடைந்தான், சென்று, வன் திறல் கூர்
சேதிபப் பெரும் பகை செகுத்தே. 151

அராவ வெங் கொடியோன் ஆதியா உள்ள
அரசரும் தம் நகர் அடைந்தார்;
விராடனும், யாகசேனனும், முதலாம்
வேந்தரும் தம் பதி புகுந்தார்;
சராசனத் தடக் கைச் சல்லியன் முதலோர்
கிளையுடன் தம் புரம் சார்ந்தார்;
பராவ அரும் முதன்மைப் பாண்டவர் கடல் பார்
பண்புறத் திருத்தி, ஆண்டிருந்தார். 152

தருமன் கொடைச் சிறப்பும் புகழும்

முன் குலத்தவர்க்கும், முனி குலத்தவர்க்கும்,
மும் மதக் கைம் முகக் களிற்று
மன் குலத்தவர்க்கும், வான் குலத்தவர்க்கும்,
வரம்பு இலா வகைக் கலை தெரியும்
நன் குலத்தவர்க்கும், பொருள் எலாம் நல்கி,
நாள்தொறும் புகழ் மிக வளர்வான்,
தன் குலக் கதிர்போல் தேய்ந்து ஒளி சிறந்தான்—
தண்ணளித் தருமராசனுமே. 153

